கல்கி
13.4.2003

# உள்ளே...



அட, அனோஷ்கா!
69



புதுக் காதல்!
4

அதிர்ச்சி வேணும்!
60





# வைகோ வழக்கு குளறுபடிகள்!

**வை**கோ வழக்கில் வழக்கமான குளறுபடிகளை அரங்கேற்றியிருக்கிறது மத்திய அரசு.

வைகோவை கைது செய்த பிறகு, அத்வானியிலிருந்து, அருண் ஜெட்லி வரை அவரது விஷயத்தில் 'பொடா' தவறாக பிரயோகிக்கப்பட்டிருக்கிறது என்றே சொல்லி வந்தார்கள். இது தவிர கருணாநிதிக்கும்,



வைகோவுக்கும் ஏற்பட்டுள்ள புதிய நெருக்கத்தின் காரணமாக, வைகோ விஷயத்தில் அவருக்கு ஆதரவாகவே மத்திய அரசு மனுதாக்கல் செய்யும் என்பது பொதுவான எதிர்பார்ப்பு. ஆனால் காதோடு காது வைத்தாற்போல, "அவரைக் கைது செய்தது பொடா சட்டத்துக்குள் பொருந்தி வரக் கூடியதுதான்" என்று மனுதாக்கல் செய்தவுடன், தமிழக என்.டி.ஏ. கட்சிகளுக்கு ஜுரம் கண்டு விட்டது.

"தத்துவார்த்த ரீதியாக அம்மாவுடன் நெருங்கிவிட்ட அத்வானி அண்ட் கோவின் நரித்தந்திரம் இது" என்று எரிச்சலாய் சொன்னார் மதி.மு.க. பிரமுகர் ஒருவர். மத்திய அரசோ, அரசின் ஜூனியர் வழக்கறிஞர்கள் செய்துவிட்ட தவறு என்று பல்டியடித்தது.

விஷயம் இத்துடன் முடியவில்லை. அரசியல் ரீதியாக புயல் ஓய்ந்தது போலத் தெரிந்தாலும், உள்ளுக்குள் சுழல் அடித்துக் கொண்டுதான் இருக்கிறது. வைகோ விவகாரம் மீண்டும் சுப்ரீம் கோர்ட் விசாரணைக்கு வரும்போது மத்திய அரசின் தடுமாறும் நிலை கோர்ட்டினால் கடுமையாக



விமர்சிக்கப்படும் என்று சொல்கிறார்கள்.

**அ**திமுகவோடு உறவு கொள்வதன் மூலம் ஒரு புதிய அரசியல் கலாசாரத்துக்கும் கெடுபிடிகளுக்கும் தங்களை ஆட்படுத்திக் கொள்ள வேண்டிய நிலை வருமே என்று பா.ஜ.கவின் ஒரு பிரிவினர் தயங்குவதால் தான் இந்தக் குழப்பங்கள் என்கிறார்கள்.

தி.மு.க., ம.தி.மு.க., பா.ம.க. ஆகியோரது துணையோடு நான்காண்டுகள் எந்தவித பிரச்னையுமில்லாமல் ஓடிவிட, மீதி இருக்கும் ஒரு வருடத்தையும் அவ்வாறே கழிக்க விரும்புகிறார் வாஜ்பாய். ஆனால் பா.ஜ.கவில் உள்ள ஹிந்துத்வா தீவிரவாதக் கூட்டமோ, "நமக்கேற்ற தோழமை அம்மாதான்" என்று வலியுறுத்துகிறது. "இப்போதைய சூழலில் மத்திய அரசிடம் இருந்து எந்த விதப் பிரச்னையும் வரக் கூடாது என்ற நினைப்பில்தான் ஜெயலலிதா இணக்கமாக இருப்பதுபோல் செயல்படுகிறார். ஆனால் பாராளுமன்றத் தேர்தலின் போது, கூட்டணி வைத்துக் கொண்டால் குறைந்த பட்ச இடங்கள் கூடக் கொடுக்க மாட்டார். இது எங்களுக்குத் தெரியும்" என்று நம்மிடம் சொன்னார் ஒரு பா.ஜ.க.பிரமுகர்.

**வை**கோவைப் பொறுத்தவரை அடுத்த பாராளுமன்றத் தேர்தலைச் சந்திக்க வேண்டுமென்றால், அ.தி.மு.க. அல்லது தி.மு.க.வுடன் தோழமை கொள்ள வேண்டும். இனி அ.தி.மு.க. கதவு நிரந்தரமாக அவருக்குச் சாத்தப்பட்ட நிலையில் தி.மு.கவுடன் நெருக்கமாக இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் தி.மு.க.வில் வைகோவுடன் கலைஞருக்கு மீண்டும் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி, முணுமுணுப்புகளை உண்டாக்கியிருக்கிறது. "இப்போதிருக்கும் நிலையில் கலைஞர் எல்லோரையும் அரவணைத்துக் கொண்டு போக விரும்புகிறார். வரும் நாட்களில் தி.க.வீரமணியிடம் கூட நெருக்கம் காட்டக் கூடும்" என்று சொன்னார் ஒரு தி.மு.க. பிரமுகர். தமிழக என்.டி.ஏ.கட்சிப் பிரமுகர்களிடம் பேசும் போது, "பா.ஜ.கவின் நிலைமையும் எங்களை வெளியில் தள்ளிவிட விருப்பமில்லாமல் இருக்கிறது. தமிழக ஆட்சிப் பொறுப்பில் ஜெ. இருப்பதால், எங்களாலும் முறித்துக் கொண்டு மத்திய அரசில் இருந்து வெளிவர முடியவில்லை. எத்தனை நாள் இந்த இழுபறி நீடிக்கும் என்று தெரியவில்லை" என்று வெளிப்படையாகவே சிலர் சொல்கிறார்கள். வரும் அக்டோபருக்கு மேல் இது நீடிக்காது என்பதும் அவர்களில் சிலரது கருத்து.

— சஞ்சயன்




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# புதுக் காதல்!

'அரசு' படப்பிடிப்பில் சரத் குமாரோடு டூயட்டில் இருந்தார் சிம்ரன்! உடலை வளைத்து வளைத்து ஆடிவிட்டு, வருவதும் போவதுமாக இருந்த அவரிடம், இடையிடையே பேசினோம்.

**கடந்த ஏழு வருடங்களை வெற்றிகரமாகக் கடந்து வந்திருக்கும் சிம்ரன், தமிழ் சினிமா உலகை எப்படிப் புரிந்து வைத்திருக்கிறார்?**

இவர் இந்த நடிகரின் பையன், இவர் இந்த இயக்குன ரின் வாரிசு என்பதற்காகவெல்லாம் இங்கே யாரும் முன்னுரிமை தருவதில்லை. திறமையோடு வருகிற புதியவர்கள் யாராக இருந்தாலும் அவர் மீது நம்பிக்கை வைத்து வாய்ப்புக் கொடுக்கிறார்கள். எனக்கு 'ஒன்ஸ் மோர்' படத்தில் கிடைத்த முதல் வாய்ப்பும் அப்படிப் பட்டதுதான். பாலிவுட் மட்டும் தான் இந்திய சினிமா என்றிருந்ததை மணிரத்னமும், சந்தோஷ் சிவனும் மாற்றிக் காட்டினார்கள். கே.வி.ஆனந்த் போல இங் கிருந்து போன பல தொழில் நுட்பக் கலைஞர்கள் அங்கே முதலிடத்தில் இருக்கிறார்கள். இப்போதெல் லாம் தமிழ் நாட்டுப் பெண்களும் துணிச்சலாக நடிக்க வந்துவிட்டார்கள். நானும் கூட தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் தமிழ்ப் பெண்ணாகவே மாறிவிட்டேன். ஹைதராபாத் சென்று, அப்பா அம்மாவிடம் ஹிந்தியில் பேசும் போது, கூடவே ஒன்றிரண்டு தமிழ் வார்த்தைகள் வந்து விழுகின்றன. இங்கே வரும்போது எனக்குச் சுத்த மாகத் தமிழ் பேசத் தெரியாது. இப்போது சரளமாகப் பேசுகிறேன். உச்சரிப்பு சுமாராகத்தான் இருக்கும்.

**இடையில் ஓராண்டுக் காலம் தெலுங்குப் படங் களில் மூழ்கிக் கிடந்தீர்கள் இல்லையா?**

இருபது படங்களில் நடித்தேன். ஆனால் எனக்கு அங்கே ஒத்துவரவில்லை. தமிழில் நடிக்கிறபோது கிடைக் கிற தொழில் திருப்தி அங்கே இல்லை. ஃபாண்டசி, கலர் கலராய் டிரஸ், அசாத்தியமான கனவுகள் இதிலேயே திரும்பத் திரும்ப விழுந்து கிடக்க எனக்கு விருப்ப மில்லை. எனது நடிப்புத் திறமைக்குத் தீனி கிடைப்பது இங்கேதான். காரணம் பொழுது போக்கு அம்சங்களை வைத்துப் படமெடுத்தாலும் யதார்த்தமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிற இயக்குனர்கள் இங்கே அதிகம். தமிழ்ப் படங்களை மாஸ் அண்ட் க்ளாஸ் என்றால் பொருத்தமாக இருக்கும். எனக்குத் தமிழ்ப் படங்களில் நடிப்பதுதான் பிடிக்கிறது.

**'ஆல்தோட்ட பூபதி' பாடலில் ஒடிந்து விழுகிற மாதிரி அதிபயங்கரமாக ஆடியிருந்தீர்கள். நடனம் மீது அத்தனை காதலா?**

மூன்றாவது படிக்கிறபோதே பரதநாட்டிய வகுப்புக்களுக்கு ஆர்வத்தோடு போய்க் கற்றுக் கொண்டேன். அதன்பிறகு இரு பத்தாறு கல்லூரிகள் கலந்து கொண்ட மும்பை பல்கலைக் கழக கலைவிழா நடனப் போட்டியில், சிறந்த பெண் நடனக் கலைஞர் பரிசை தட்டிக் கொண்டு வந்தேன். நடனமாடுவது ரொம்பப் பிடிக்கும். 'ஆல்தோட்டபூபதி' பாடலில் எனக்குப் புகழ் கிடைத்திருக்கிறது என்றால், அதற்கு முழுக் காரணம் டான்ஸ் மாஸ்டர் தினேஷ்.



**ஒரு பக்கம் கமல், விஜய் மாதிரி பிரபலமான ஹீரோக்களோடு நடிக்கிறீர்கள், இன்னொரு பக்கம் அறிமுக ஹீரோக்களோடும் நடிக்கிறீர்கள், உங்களது சினிமா வாய்ப்புகளைத் தக்க வைத்துக் கொள்ளும் உத்தி தானே இது?**

ஆரம்பத்திலிருந்து இன்று வரைக்கும், எனக்கான வாய்ப்புகள் இங்கே ஓரே மாதிரி தான் இருக்கு. ஏற்றமும் இல்லை, இறக்கமும் இல்லை. நம்பர் ஒன் நாயகிங்கிறதுல நம்பிக்கையும் இல்லை. ரஜினி சாரைத் தவிர கிட்டத்தட்ட எல்லா ஹீரோக்களோடும் நடித்து விட்டேன். கதை கேட்காமல் எந்தப் படத்தையும் ஒப்புக் கொள்வதில்லை. ஒட்டு மொத்த திரைக் கதையில் எனது பாத்திரம் நன்றாக இருக்க வேண்டும். இதுதான் நான் பின்பற்றும் உத்தி.

**திறமையான நடிகை என்று நிரூபித்திருந்தாலும் சிம்ரன் என்றால் ஒரு 'கிளாமர் கேர்ள்' என்றுதானே ரசிகர்கள் பார்க்கிறார்கள். ஆனால் கோவில்பட்டி வீரலட்சுமி மாதிரி ஒரு வரலாற்றுப் பின்னணி கொண்ட படத்தில் புரட்சிப் பெண்ணாக நடிக்கிறீர்கள்... இதை எப்படி ரசிகர்கள் ஏற்றுக் கொள்வார்கள்?**

''சினிமாவில் தவிர்க்க முடியாத அம்சமாகிவிட்டது கிளாமர். என்னிடம் நல்ல நடிப்பை எதிர்பார்க்கிற ரசிகர்கள் கொஞ்சம் கிளாமரையும் எதிர்பார்க்கிறார்கள். அவர்களது எதிர்பார்ப்பை நான் நிறைவேற்றாவிட்டால், வேறொரு சிம்ரனுக்கு அவர்களின் ஆதரவு கிடைக்கும். தமிழ் ரசிகர்களைப் பொறுத்தவரை முழுக்க முழுக்க கிளாமரையே நம்பி இருந்தாலும் இரண்டு மூன்று படங்களோடு வீட்டிற்கு அனுப்பிவிடுகிறார்கள். அதிகப் பிரசங்கித்தனமாக நடித்தாலும் இரண்டு வருடங்களுக்கும் மேல் தாக்குப் பிடிக்க முடியாது. எனவே இந்த இரண்டு அளவுகோல்களையும் நான் பேலன்ஸ் செய்து நடிக்கிறேன். எதிர்பாராதவிதமாக எனக்கு அமைந்து விடுகிற பாத்திரங்களில் இரண்டுக்குமே வாய்ப்புகள் அமைந்து விடுகிறது. 'கோவில்பட்டி வீர லட்சுமி' படத்தில் நடிப்புக்கான வாய்ப்பு அதிகம். கிளாமராக வருகிற வாய்ப்பும் கதையில் இயல்பாக அமைக்கப்பட்டிருக்கிறது. ரசிகர்களுக்குப் பிடிக்கும்.

**சூர்யா - ஜோதிகா அற்புதமான ஜோடி என்றெல்லாம் பேசியிருக்கிறீர்கள்?**

நிச்சயமாக நான் அப்படிப் பேசவில்லை. பத்திரிகைகளில் அவர்களைப் பற்றி எழுதி வருவதைப் பற்றி என்னிடம் கேட்டார்கள். நான் நாசூக்காக மறுத்து விட்டேன். சூர்யா -ஜோதிகா காதல் உண்மையா என்பது அவர்கள் இரண்டு பேருக்குத்தான் வெளிச்சம். மற்றவர்களின் சொந்தப் பிரச்னைகளில் தலையிட நான் ஒருபோதும் விரும்பியதில்லை.

**உங்களது நியூ லவ் எப்படியிருக்கிறது?**

உங்கள் கேள்வியே விவகாரமாய் இருக்கிறது.

**"நியூ" படத்தில் உங்களின் காதல் பற்றி கேட்கிறோம்?**

இப்படித் தெளிவாகக் கேளுங்கள்! தமிழ், தெலுங்கு இரண்டிலும் ஒரே நேரத்தில் எடுக்கப்படுவதால் கொஞ்சம் இடைவெளி. ரகசியமாக முழுப்படத்தை எடுத்து முடித்து விட்டுப் பிறகு சொல்வதுதான் இயக்குனர் சூர்யாவின் ஸ்டைல். முதல் முறையாக ஹீரோவாகவும் நடிக்கிறார் என்பதால், ஒவ்வொரு ஷாட்டிலும் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார். சூர்யாவின் எல்லாப் படங்களிலும் கதாநாயகிக்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுப்பார். நியூவிலும் எனக்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார். சூர்யாவின் தோழி, காதலி, அப்புறம் மனைவி என்று கலக்கியிருக்கிறேன்."

**உங்களது கணவரை சினிமாவுக்கு உள்ளே தேர்ந்தெடுக்கப் போகிறீர்களா? இல்லை வெளியிலா?**

நூறு சதவிகிதம் தீர்க்கமாய்ச் சொல்கிறேன். எனக்கான துணை, சினிமாவுக்கு வெளியேதான். கடைசி நிமிடங்களில் ஏதேனும் மாற்றம் நிகழ்ந்தால் அதற்கு நான் காரணமாக இருக்க மாட்டேன்.

**- விஷுவல்தாசன்**

அட்டை, படங்கள் : **சங்கர் சத்தியமூர்த்தி**



# வீடுதோறும்
# கீதோபதேசம்

பூஜ்யஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதி அவர்களால் தெளிவாகவும், எளிமையாகவும் எடுத்துரைக்கப்பட்ட ஸ்ரீமத் பகவத்கீதை 18 அத்தியாயங்களின் விரிவுரையானது இப்பொழுது **'வீடுதோறும் கீதோபதேசம்'** என்ற பெயரில் ஏழு பாகங்களாக புத்தக வடிவில் வெளி வந்துள்ளது.

இந்த கீதை உரை நேரடியாக போதிக்கும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது. முதலில் சமஸ்க்ருத ஸ்லோகம், பிறகு ஸ்லோகத்தின் தமிழாக்கம், பிறகு பதவுரை, பொழிப்புரை, பிறகு அந்த ஸ்லோகத்திற்கான தமிழ் விரிவுரை என்று அமைக்கப்பட்டுள்ளது.

வாழ்க்கையில் சந்திக்க வேண்டியுள்ள தவிர்க்க முடியாத பிரச்சினைகளால் ஏற்படும் மனக் குழப்பங்களிலிருந்து விடுபெறவும், பிரச்சினைகளை நேருக்கு நேர் எதிர்கொள்வதற்குத் தேவையான மனோபலத்தைப் பெறவும், பூஜ்யஸ்ரீ சுவாமிகளின் 'வீடுதோறும் கீதோபதேசம்' எனப்படும் இந்தக் கீதைத் தெளிவுரையானது வழிகாட்டும்!

மொத்தம் 7 **பாகங்கள்.** ஒவ்வொன்றும்
காலிகோ அட்டையுடன் கூடிய **BOUND** வால்யூம்
சுமார் **2200 பக்கங்கள்** • சலுகை விலை **ரூ.1400-**
பதிவுத் தபாலில் பெற (இரு பாக்கெட்டுகளாக) ரூ.1510/-க்கு DRAFT

கோவையில் பெற **SRUTI SEVA TRUST** என்ற பெயரில் டிராப்டு எடுத்து **கோவை ஸ்ருதி சேவா டிரஸ்ட், ஆர்ஷ வித்யா குருகுலம்** முகவரிக்கு அனுப்பி புத்தகங்களைப் பெறலாம்.

சென்னையில் பெற **VANATHI PATHIPPAKAM** என்ற பெயரில் டிராப்டு எடுத்து சென்னை வானதி பதிப்பகம் முகவரிக்கு அனுப்பி புத்தகங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டுகிறோம்.

நேரிலும் பெறலாம். **V.P.P** இல் அனுப்ப இயலாது.

| கோவை முகவரி : | சென்னை முகவரி: |
|---|---|
| **ஸ்ருதி சேவா டிரஸ்ட்** | **வானதி பதிப்பகம்** |
| ஆர்ஷ வித்யா குருகுலம் | 23 (ப.எண்.13), தீனதயாளு தெரு, |
| ஆனைகட்டி (P.O) கோயம்புத்தூர் 641 108 | தியாகராய நகர், சென்னை 600 017. |
| ✆: **0422 - 2657001/2657017** | ✆ : **2434 2810** |



# அமரர் கல்கி நினைவு

## படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | – | ரூ.10,000 |
| இரண்டாம் பரிசு | – | ரூ. 7,500 |
| மூன்றாம் பரிசு | – | ரூ. 5000 |

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

கதை இளைஞர்களை மையப்படுத்தி எழுதப்பட வேண்டும் என்பது முதல் நிபந்தனை.

எழுதுபவர்கள் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் கூடுதல் போனஸ் உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

# இளமைச் சிறுகதைப் போட்டி – 2003

*விதிமுறைகள்:*

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராயின் ஏதாவதொரு அத்தாட்சி (உம்: பத்தாம் வகுப்பு டி.சி.ஜெராக்ஸ்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2003'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

– ஆசிரியர்



• மௌலி



• லிங்குசாமி



• சேரன்

# புதுசா என்ன பண்றீங்க?

**கோ**டம்பாக்கத்தில் இரண்டு சினிமாக்காரர்கள் பேசிக் கொண்டிருந்தால் "புதுசா என்ன பண்ணலாம்?" என்ற கேள்வி நிச்சயம் வந்து விடும். புதுசா சொன்னாதான் படம் ஓடுமாம்! சில இயக்குனர்களிடம் "உங்க படத்துல என்ன புதுசா பண்றீங்க?" என்றோம்.

**மௌலி:**

வழக்கமாக, பாடல் காட்சிகளை எடுக்க வெளிநாடு போவதுதான் இன்றைக்கு ஃபேஷனாக இருக்கிறது. ஆனால், 'நளதமயந்தி' முழுக்க முழுக்க ஆஸ்திரேலியாவிலேயே படம் பிடிக்கப்பட்ட தமிழ்ப் படம் என்பதே புது விஷயம்தான். ஆஸ்திரேலியாவில் சமையல் வேலைக்குப் போகிற மாதவன் படுகிற கஷ்டங்கள்தான் இந்தக் காமெடி படத்தின் கதை. படத்தில் ஆஸ்திரேலிய தமிழர்கள், ஹாலிவுட் படங்களில் நடித்துள்ள ஆஸ்திரேலிய வெள்ளைக்காரர்கள் எல்லாம் நடித்திருப்பது கூடப் புதுசு. இவர்களுக்கு வேறு யாரும் டப்பிங் பேசாமல் இவர்களே பேசி இருப்பது கூடப் புதுசுதான்!

**லிங்குசாமி:**

என்னுடைய முதல் இரண்டு படங்களிலுமே, தமிழில் மிகவும் பிரபலமான வழக்கமான கதையைத்தான் எடுத்துக் கொண்டேன். திரைக்கதையிலும், காட்சி அமைப்பிலும் புதுமைகள் செய்ததுதான் வெற்றிக்குக் காரணம். ஆனால் அடுத்த படத்தில், கதையே தமிழுக்கு ரொம்பப் புதுசு. காட்சிகளையும், திரைக்கதையும் புதுமையாக உருவாக்கியிருக்கிறேன். அரசியலை டச் பண்ணுகிற படம். ஆனால் அது கலைஞருக்கும் பிடிக்கும்; அம்மாவுக்கும் பிடிக்கும். இப்படி ஒரு சப்ஜெக்ட்டில் படம் பண்ணுவது என்பதே புதுசுதானே!

**சேரன்:**

பொதுவாகவே தமிழ் சினிமா என்றால் வர்த்தக நிர்ப்பந்தங்கள் காரணமாக ஒரு மாயையைக் காட்டுவது மரபாக இருக்கிறது. அதை மீறி, அப்பட்டமான யதார்த்தமான சூழலை நான் சொல்லியிருக்கிறேன். ஒவ்வொரு படத்தையும் என் முதல் படம் என்று நினைத்து உழைப்பதால், புதுசாக ஏதாவது சாதிக்க வேண்டும் என்கிற வெறியோடு நான் படம் எடுத்துக் கொண்டிருக்கிறேன். ஒரு பாடல் காட்சியை படமாக்கியுள்ள விதம், மிகவும் புதுமையானது என்று உறுதியாய்ச் சொல்ல முடியும். ஆனால் என்ன புதுமை என்று இப்போதே சொல்லி விட்டால், அதைக் காப்பியடித்து, என் படத்துக்கு முன்பே ரிலீஸ் செய்து விடும் அபாயம் இருப்பதால், சஸ்பென்ஸ் காக்கிறேன். படத்தில் நாலு ஹீரோயின்; இது என்னைப் பொறுத்தவரை நடித்து, இயக்கி, தயாரிக்கும் படம் என்பதால் புதுமை!

— மௌலி

உ

# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத
# ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.





# கோடி அர்ச்சனை

கலியும் கெட கயிலை துறந்து கருவேலி அமர்ந்திருக்கும் **''கருவிலி நாதர்''** எனப்படும், **ஸ்ரீ ஸற்குணேச்வரப் பெருமானுக்கும், உடனுறை ஸ்ரீஸர்வாங்க ஸுந்தரி அம்பிகைக்கும்** குருவருள், திருவருள் துணை கொண்டு (15.10.2002) விஜயதசமி நன்னாள் முதல் கோடி அர்ச்சனை ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வருகிறது. தஞ்சாவூர் ஸ்ரீ வித்யா கணபதி உபாசனா யோகா பீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ வித்யா கணேச ஸ்வாமிகள் அவர்கள் முன்னின்று ஆரம்பித்து வைத்தார்கள்.

மற்ற இடங்களில் நடைபெறும் **கோடி அர்ச்சனை**களைக் காட்டிலும் இத்திருத்தலத்தில் நடைபெறும் கோடி அர்ச்சனைக்கு சிறப்புகள் அதிகம்.

1. இறைவன், இறைவி இருவருக்கும் இணைந்து நடைபெறுகிறது.
2. இறைவனுக்கு ஸ்ரீருத்ர த்ரிசதி மூலமும், அம்பிகைக்கு – ஸ்ரீ லலிதா த்ரிசதி மூலமும் அர்ச்சனைகள் நடைபெறுகின்றன.
3. இவை ஸஹஸ்ர நாம அர்ச்சனைகளைக் காட்டிலும் பன் மடங்கு பயன் தரக் கூடியவை.
4. யோக நெறி நிற்கும் தியாக சீலர்களான மஹான்கள் முன்னின்று நடத்துவதும், பங்கு கொள்வதும் கிடைத்தற்கரிய பெருமை.

மஹிமை வாய்ந்த இவ்விரு த்ரிசதி – அர்ச்சனைகளுக்கும் சேர்த்து காணிக்கை கட்டணம் **ரூ. 100/-** நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பங்கு பெற விரும்புவோர் அர்ச்சனைக்குரிய எல்லா விவரங்களுடன் ஸ்ரீஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா முகவரிக்கு பணம் அனுப்பக் கோரப்படுகிறார்கள். திருக்கோயில் பற்றியும், மற்ற விழாக்கள், சிறப்பு வழிபாடுகள் பற்றியும் அறிய விரும்புவோர் ''ஸபா'' முகவரியுடன் தொடர்பு கொள்ளலாம்.


***Dr. V. கிருஷ்ணமூர்த்தி***
*பரம்பரை அறங்காவலர்,*
*ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில்*
*ஸ்ரீ ஸற்குணேச்சவரபுரம் - 609 501*
*திருவாரூர் மாவட்டம்*

இங்ஙனம்,
**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா**
*32/18 டபீர் புதுத் தெரு,*
*கும்பகோணம் - 612 001.*
*தொலைபேசி : 0435 - 2423297*



* சமுத்திரம்

# அலையடித்த சமுத்திரம்!

சமீபத்தில் மரணமடைந்த எழுத்தாளர் சு. சமுத்திரம் பற்றி தமது நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறார் **திருப்பூர் கிருஷ்ணன்.**

சமுத்திரத்திற்கு சாகித்ய அகாதமி பரிசு கிடைத்தது. வண்ணநிலவன் 'இனி கூல குமாரனுக்குக் கூடப் பரிசு கிடைக்கலாம்' என சமுத்திரத்தையும் இன்னும் சில எழுத்தாளர்களையும் சேர்த்துத் தாக்கி எழுதினார். 'வண்ணநிலவன் ஒரு மனநோயாளி' என சமுத்திரம் பதிலுக்குத் தாக்கினார். எனக்கு இருவரும் நண்பர்கள். இந்தச் சண்டை அலுப்பேற்படுத்தியது. கொஞ்ச காலம் சென்றது. தி.க.சி.யின் பேத்தியான வண்ணதாசன் புதல்விக்குச் சென்னையில் திருமணம். நாங்கள் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். என் வலப்புறம் சமுத்திரம். இடப்புறம் வண்ணநிலவன். நான் நடுவர்! சமுத்திரத்தின் முகத்தில் ஒரு கிலோ எள்ளும் ஒரு கிலோ கொள்ளும் சேர்ந்து வெடித்தன. 'வண்ணநிலவனுக்கு ஒரு வணக்கம் போட்டால் என்ன, குறைந்தா போய்விடும்?' என்று கேட்டேன் நான். சமுத்திரம் படபடவென்று அப்பளத்தைப் பொடித்தார்! சாப்பிட்ட பின் கைகழுவப் போகையில், 'எல்லாப் பிரச்னைகளுக்கும் கை கழுவுங்கள். விமர்சனம் வேறு. நட்பு வேறு. வண்ணநிலவனிடம் இனிமையாகப் பேசுங்கள்' என அறிவுறுத்தினேன். வண்ணநிலவன் கையைப் பிடித்து சமுத்திரத்தின் கையோடு சேர்த்து, புதிதாய் அறிமுகப்படுத்துவது போல் அறிமுகப்படுத்தினேன். அடுத்த கணம் நடந்த செயல் விந்தையானது. சமுத்திரம் வண்ணநிலவனைக் கட்டி அணைத்துக் கொண்டு 'அண்ணாச்சி! நல்லா இருக்கீங்களா!' என நெகிழ்ந்தார். அதுதான் சமுத்திரம்.

அவர் ஓர் உணர்ச்சிக் குவியல். கோபம் வந்தால் கத்துவார். அன்புக்கு இணங்கி நீராய் நெகிழ்வார். தன் நிலைப்பாடு தவறென்று தோன்றினால் மன்னிப்புக் கேட்கவும் அவர் தயங்கியதே இல்லை. சமுத்திரத்தை மேலோட்டமாகப் பார்த்தவர்களுக்கு அலைகளும் நுரையும் தான் தெரிந்தன. ஆனால் கண்ணுக்குத் தெரியாத ஆழத்தில் முத்தும் பவழமும் கொட்டிக் கிடந்தன. சண்டைக்காரரான அவரால் பல்வேறு காலகட்டங்களில் காதும் காதும் வைத்தாற்போல் உதவி பெற்ற எளிய எழுத்தாளர்கள் பலர். வல்லிக்கண்ணன், தி.க.சி. போன்றோர் மேல் மிகுந்த மரியாதை உடையவர். காலஞ்சென்ற கோமலின் பேரன்பைப் பெற்றவர். கடின உழைப்பு, ஒடுக்கப்பட்டவர்களுக்காகத் தொடர்ந்து குரல் கொடுத்த அறச் சீற்றம் போன்ற பல நல்லியல்புகளின் ஒட்டுமொத்த வடிவம்.

'வேரில் பழுத்த பலா' என்பது அவரது அகாதமி பரிசு பெற்ற குறுநாவல். அவரே வேரில் பழுத்த பலாதான். வெளியே முட்களால் மூடியது போல் தோற்றம். உள்ளே தேனாய் இனிக்கும் நட்புச் சுளைகள்.

நாவல்களிலும், மணிமணியான சிறுகதைகளிலும் வாசகர்கள் மனத்தில் அவர் என்றென்றும் வாழ்வார்.



* திருப்பூர் கிருஷ்ணன்




## வி.எச்.பியின் விபரீதத் திட்டம்!

ஸ்ரீராமன் கருணையே உருவானவன். தன்னை உத்தேசித்து இந்த நாட்டில் ஒரு போராட்டம் நடைபெற வேண்டும் என்றோ, உள்நாட்டு யுத்தம் நிகழவேண்டும் என்றோ, ஓர் அரசு வீழ்ந்து குழப்பமும் நாசமும் விளைய வேண்டும் என்றோ ஒரு நாளும் கருதியிருக்க மாட்டான்.

ஆனால், அந்த உத்தம அவதார புருஷனின் முதல் பக்தராகத் தம்மைக் காட்டிக் கொள்ளும் பிரவீண் தொகாடியா என்ன சொல்கிறார்...? அயோத்தியில் ராமர் கோயில் எழுப்ப அனுமதி மறுக்கப்பட்டால், மேற்படி விபரீதங்கள் யாவும் தவறாது நிகழும் என்று சூளுரைக்கிறார்!

அயோத்தி குறித்த நீதிமன்றத் தீர்ப்பு வருகிறவரை எந்த கட்டடப் பணியும் குறிப்பிட்ட வளாகத்தில் நடைபெறக் கூடாது என்று உச்ச நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது. ஆனால், விச்வ ஹிந்து பரிஷத் அதை ஏற்க மறுக்கிறது. மத்திய அரசு, அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவதற்காகவே ஒரு சட்டம் இயற்றிச் செயல்படுத்தியாக வேண்டும் என்று அடம்பிடிக்கிறது. அதாவது, உச்சநீதிமன்றத் தீர்ப்பை உதாசீனம் செய்யச் சொல்கிறது. அவ்வாறு செய்யாவிட்டால், கிராமம் கிராமமாகச் சென்று மக்களைப் போராட்டத்தில் ஈடுபடுத்தப் போவதாகவும்,




கல்கி



2003 ஏப்ரல் 13
சித்ரபானு பங்குனி 30
மலர் : 61
இதழ் : 37


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




உள்நாட்டு யுத்தம் நோக்கி அப்போராட்டம் முன்னேறும் என்றும் கூறுகிறார் தொகாடியா. இந்த இயக்கத்தை 'சத்தியாகிரஹம்' என்று குறிப்பிட்டு, அதற்கு இல்லாத ஓர் அந்தஸ்தையும் வழங்க முயற்சி செய்கிறார்.

அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவதை யாருமே ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனால், பிரச்னைக்குரிய இடத்திலோ, உச்ச நீதிமன்ற உத்தரவுகளை மீறியோ, செயல்பட வேண்டும் என்னும்போதுதான் சிக்கல் உருவாகிறது.

குறிப்பிட்ட அந்த இடத்தில்தான் ராமர் பிறந்தார் என்பதற்கான எந்த வித ஆதாரத்தையும் யாரும் காண்பிக்க முடியாது. ஒரு வாதத்துக்காக அதை ஏற்றுக் கொள்வதானாலும் மீண்டும் ஒரு கோயில் கட்டித்தான் அதை நிரூபிக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. கோயில் இருந்ததாகச் சொல்லப்பட்ட இடத்தில், மசூதி எழுப்பப்பட்டதால் ஸ்ரீ ராமனின் புகழ் அழிந்து விடவில்லை; அவன் பக்தர்களின் எண்ணிக்கை கூடியிருக்கிறதேயொழிய, குறையவில்லை.

இந்தியா மீது முஸ்லிம் மன்னர்கள் படையெடுத்ததும் இங்கே அவர்கள் ஆட்சி அமைத்து இஸ்லாம் மதத்தைப் பரப்பியதும் வரலாறு. இதே போல் ஹிந்து மன்னர்களும் இந்நாட்டிலிருந்து அயல்நாடுகளுக்குப் படையெடுத்துச் சென்று தங்கள் மதத்தைப் பரப்பியிருக்கிறார்கள். இன்று நாம் வரலாற்றுச் சின்னங்களை அழிப்பதன் மூலம் வரலாறை அழிக்க முடியாது. மஸ்ஜித் அல்லது மசூதிகளின் இடத்தில் கோயில்கள் கட்டுவதன் மூலம் இங்கே இஸ்லாம் நுழையவே இல்லை என்று ஒரு தோற்றத்தை உருவாக்கிவிட முடியுமா...? என்றைக்கோ சரித்திர காலத்தில் நடந்த தவறுகளுக்காக இப்போது பழிக்குப் பழி வாங்குவோம் என்று அடம் பிடிப்பது அறிவுடைமையாகுமா...? இன்றைய நமது இஸ்லாம் சகோதரர்களின் மனத்தைப் புண்படுத்துவதற்கு மேலாக இதன் மூலம் என்ன சாதிக்க முடியும்?




இன்றைக்கு இஸ்லாம் என்பதும் இந்திய கலாசாரத்தின் ஒரு பகுதிதான். இதை ஏற்க வேண்டிய முதல் பொறுப்பு ஹிந்து மதத் தலைவர்களுக்கும் ஹிந்து இயக்கத் தலைவர்களுக்கும் இருக்கிறது. சகோதர மதங்களை அரவணைத்துச் செல்லாமல் பிணங்கி நின்றால் ஹிந்து மதத்தைக் கட்டிக் காக்க முடியாது.

விச்வ ஹிந்து பரிஷத்தும் ஆர்.எஸ்.எஸ்ஸும் செய்யக்கூடிய ஆக்கபூர்வமான பணிகள் நாடெங்கும் ஏராளமாகக் காத்துக் கொண்டிருக்கின்றன. வடகிழக்கு மாநிலங்களிலும் இன்னும் மதமாற்ற நடவடிக்கைகள் அதிகமாக நடைபெறுகின்ற பகுதிகளிலும் கல்வி, மருத்துவப் பணிகளை விரிவாக்கி மேம்படுத்துவதன் மூலம், ஏழை எளிய மக்களை ஏமாற்றி மதம் மாற்றுவதைக் கட்டுப்படுத்தலாம். வன்முறை வழிகளை நாடாமல், செயல் திட்டங்கள், நற்பணிகள் மூலம் மக்களை நெருங்குவதுதான் அழகு; அறிவுடைமை.

ஆனால், தொகாடியாவின் திட்டம் என்ன...? அனைத்து எம்.பிக்களையும் அணுகி, அயோத்தி கோயில் பற்றிய அவர்களது கருத்தை ஒலிப்பதிவு செய்ய வேண்டியது. அவரவர் தொகுதியில், கடைசி குக்கிராமம்வரை அக்கருத்தை ஒலிபரப்பி, மக்களை உசுப்பிவிடவேண்டியது! இந்தப் பணிக்கு எவ்வளவு நேரமும், மனித முயற்சியும், பணமும் செலவாகும் என்று வி.எச்.பி. கணக்கிட்டுப் பார்க்கட்டும்... அத்தனையையும் வேறு ஆக்கபூர்வமான வழியில் செலவிட்டால் விளையக் கூடிய பயனையும் எண்ணிப் பார்க்கட்டும்.

வோட்டுக்களை எதிர்பார்த்து, பிரவீண் தொகாடியாவை எதிர்த்துப் பேச பிரதமர் தயங்குகிறார். அந்தத் தயக்கத்தையே மேலும் ஆதாயமாக்கிக் கொண்டு வி.எச்.பி. விபரீதப் பாதையில் திரும்பியிருக்கிறது. வாஜ்பாய் இனியும் மௌனம் காத்தால் விபரீதம் உறுதியாகிவிடும். கட்சித் தலைவர் என்ற நிலையிலிருந்து, தேசத் தலைவர் என்ற நிலைக்கு வாஜ்பாய் தம்மை உயர்த்திக் கொள்ளட்டும். ○


* படத்தில் ஸ்ரீகாந்த் - த்ரிஷா

# மனசெல்லாம்

**முருகப்பெருமான்:** ஔவையே! 'மனசெல்லாம்' படத்தில் உள்ள "பழசு" - "புதுசு" என்ன? சுந்தரத்தமிழில் எடுத்துப் பாடு பார்க்கலாம்!

**கே.பி.சுந்தராம்பாள்:** ஆகட்டும் அப்பனே!

புதுசு! புதுசு! அழகான ஹீரோ + அழகான ஹீரோயின் காம்பினேஷன் புதுசு!

பழசு! பழசு! ஹீரோவுக்கு "பாலா" என்ற செண்டிமெண்ட் பெயர் பழசு!

புதுசு! புதுசு! இருவருமே நன்றாக நடிப்பது அதைவிடப் புதுசு!

பழசு! பழசு! காமெடி என்றால் கிலோ என்ன விலை என்று வையாபுரி அண்டு கோ கழுத்தறுப்பது பழசு!

புதுசு! புதுசு! கதைக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்ற இயக்குனரின் எண்ணம் புதுசு!

பழசு! பழசு! எதிர்பாராத திருப்பம் என்ற பெயரில் முதல் பாதியை ரப்பராக்கி, மறுபாதியில் முழுக்கதையையும் திணித்திருப்பது பழசு!

புதுசு! புதுசு! காதலி இறப்பதைக் காணச் சகிக்காமல் காதலன் வெளியேறுவது புதுசு!

பழசு! பழசு! ஒன்றரை முழ நீளத்தில் பெயரைக் கொண்ட வியாதியால் காதலி இறப்பது பழசு!

புதுசு! புதுசு! வியாதியை குடும்பத்தாரிடம் மறைத்து 192 பக்க சோக வசனங்களைத் தவிர்த்திருப்பது புதுசு!

பழசு! பழசு! இப்படி இரண்டு பேரால் மட்டுமே நகரும் கதைக்கு, ஊர்ப்பட்ட கதாபாத்திரங்களை வைத்துக் கொண்டு நமது தலைகளைச் சுற்ற வைத்திருப்பது பழசு!

புதுசு! புதுசு! நீண்ட நாட்களுக்குப் பிறகு இளையராஜாவின் இசையைக் கேட்பதே புதுசு!

பழசு! பழசு! 'லே லே' பாடலைத் தவிர எல்லா மெட்டுக்களுமே பழசு!

**முருகப்பெருமான்:** மிக்க நன்றி தாயே! படத்திற்கு யாம் 'ஆவரேஜ்' மார்க் கொடுத்தருள்கிறோம்!

*உரையாடலை ஒட்டுக்கேட்டவர்:* **கிருஷ்ணா சிதம்பரம்**

அன்னமே பிரம்மா!    அன்னமே விஷ்ணு!    அன்னமே சிவன்!

சித்தர்கள் வாழும் பூமியாம் - திருவருள் பொழியும்

# திருவண்ணாமலையில்

# சித்ரா பௌர்ணமி நாளில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



பேரன்புடையீர்! நமஸ்காரம்.

பஞ்சபூதத் தலங்களில், அக்னித் தலமாக விளங்கும் திருவண்ணாமலை, நினைத்தாலே முக்தி தரும் புண்ணிய க்ஷேத்திரம். கிரியே சிவமாகவும், சிவமே கிரியாகவும் விளங்குவதால் இங்கு பௌர்ணமி தினத்தில் கிரிவலம் வருவது சிவபெருமான் உறையும் கைலாயத்தையே வலம் வருவதற்கு ஒப்பாகும். இங்கு பௌர்ணமி காலத்தில் கிரிவலம் வரும் பக்தர்களுக்கும், சாதுக்கள், ஊனமுற்றோர், சன்யாசிகள், ஏழை எளிய மக்கள், பக்தர்கள் ஆகியோருக்கு அன்னம் அளிப்பது மகத்தான புண்ணியத்தை நமக்குத் தருகிறது.

**தடுத்தாட் கொள்வது, கிரக நிலைகளை மாற்றுவது, ஊழ்வினைகளை நீக்குவது, முக்தி தருவது, ஆயுளை நீடிப்பது, நோய்களைக் குணப்படுத்துவது போன்ற சிவ லீலைகள் நிகழ்ந்த இவ்விடத்தில், அன்னதானத்தின் மூலம் புண்ணியம் பெறுவதும், மோக்ஷம் அடைய முயல்வதும் உயர்ந்த லட்சியமாகும்.**

★ மனச்சாந்தி பெற ★ திருமணம் கைகூட ★ நோய்நொடிகள் தீர ★ எண்ணங்கள் வெற்றி பெற ★ சந்தான பாக்யம் பெற ★ பிரச்சனைகள் எளிதில் தீர ★ கணவன் மனைவி ஒற்றுமை ஏற்பட ★ தொழிலில் மேன்மை பெற ★ பிரிந்தவர்கள் ஒன்று சேர ★ கடன் தொல்லைகளிலிருந்து விடுபட ★ நினைத்த காரியம் நிறைவேற ★ உங்களுக்காக நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.

அன்னதானம் செய்ய அரிசி போன்ற உணவு பொருட்களும் சிறிய தொகையும் ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 மற்றும் ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். அல்லது **கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி** சாஸ்திரிகளால் தயாரிக்கப்பட்ட அபூர்வ யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடைகளை **SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST, CHENNAI-41** என்ற பெயரில் **CHEQUE/D.D./M.O.** மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.


## ஸ்ரீ அன்னலக்ஷ்மி அன்னதான ஸேவா டிரஸ்ட்

## SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: (044) 24900303, 24900603, Fax: (044) 24916316 (A UNIT OF GOPURA DHARISANAM)

‘ஸ்... ஆ... ம்... ஹூம்...’’

- எல்லாம் வெயிலுக்கு விசிறிக் கொண்டே விடப்படும் பெருமூச்சல்ல. ராகுல் ட்ராவிட்டின் பெண் விசிறிகள் விடுகின்ற ஏக்க மூச்சுகள்தான். இப்படி முன்னறிவிப்பே இல்லாமல், திடீரென்று, நாக்பூர் டாக்டர் விஜய்தா பென்டார்கரை மணமுடிக்கப் போவதாகச் சொல்லி விட்டாரே?


* கவாஸ்கர் ஜோடி

முதலில் யாரும் நம்பவில்லை தான். அட நம்ப விரும்பவில்லை என்றே வைத்துக் கொள்ளுங்களேன். செய்தி வந்த தினம் வேறு முட்டாள்கள் தினம்! பென்டார்கர் குடும்பத்தை விசாரிக்கலாமென்றாலோ, அவர்கள் மீடியாவையே தவிர்த்தனர். சரி, யாரோ முட்டாளாக்கியிருக்கிறார்கள் என்றுதான் இளைஞிகளெல்லாம் சந்தோஷித்தனர். ஆனால் நீடிக்கவில்லையே?

விஜய்தாவின் தந்தை, விங் கமாண்டர் பென்டார்கர், ‘இது உண்மைதான். அநேகமாக மே நான்காம் தேதி பெங்களூரில் திருமணம் நடக்கும். பத்தாம் தேதி நாக்பூரில் ரிஸப்ஷன், அனைவரும் வருக’’ என்று சொல்லிவிட்டாரே? சரி... எல்லோரும் ரிஸப்ஷனுக்கு வந்து விடுங்கள்.


* டிராவிட்

# புது ஜோடி; புதுத் திருப்பம்!

கிரிக்கெட் உலகில் இன்னொரு ஜோடிக்கு அண்மையில் திருமணம் நடந்தேறியது. சுனில் கவாஸ்கரின் மகன் ரோஹன் கவாஸ்கருக்கும், நெடு நாளைய குடும்ப நண்பர் ப்ரகாஷ் மன்னின் மகள் ஸ்வாதிக்கும். அழகிய, பளிச் ஜோடி! ஏழாங்கிளாஸிலிருந்தே காதலித்திருக்கிறார்கள் (அப்பவேவா!). சேர்ந்து படித்த பாம்பே ஸ்காட்டிஷ் ஸ்கூல், நல்ல அஸ்திவாரம் போட்டுத் தந்திருக்கிறது, படிப்பிற்கல்ல.. காதலுக்கு!

‘‘சின்ன வயசிலிருந்தே குடும்பத்தில் ஒருவராகப் பழகியவர். என் அம்மாவுக்கும் ஸ்வாதிக்கும் நன்றாக ஒத்துப் போகும்’’ என்று ரோஹன் சொல்லிக் கொண்டாலும், கல்யாணத்திற்குப் பிறகு தனிக் குடித்தனம் தானாம்!

திருமணம் முடிந்த கையோடு ‘மாட்ச்’ விளையாட விஜயவாடா செல்கிறார். ஸ்வாதி பற்றிய எல்லாமே தன் அலைவரிசையுடன் ‘மாட்ச்’ ஆவதாகச் சொல்கிறார்.

கல்யாணத்துக்கு பாலிவுட் ஜொலிப்பு அதிகம். கிரிக்கெட் உலகிலிருந்து சுனியின் மைத்துனர் குண்டப்பா விஸ்வநாத்தும், ரோஹனின், நண்பர்கள் அஜீத் அகர்கர் குருவில்லா, கனிட்கர் ஆகியோரும் தெரிந்த முகங்கள். ‘தாஜ்லாண்ட் எண்ட்’டில் ரிஸப்ஷனுக்கு இன்டெர்நேஷனல் கிரிக்கெட்டர்கள் முகம் காட்டுவார்கள்.

- ராஜ்

பெருகிப் பரந்திருக்கும் பெருங்கடலை, கிண்ணமொன்றில் மொண்டெடுத்துவிட முடியுமா? விண்ணில் விரிந்தொளிரும் கதிரவப் பேரொளியைக் கலசத்தில் அடைத்திட முடியுமா? அநாதியான சநாதன தர்மத்தை, கால எல்லைக்குள் சுருக்கிப் பார்ப்பது சாத்தியமா? _ 'இந்த நூற்றாண்டில் இந்து மதம்' _ இந்தத் தலைப்பைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் ஒரு சந்தேகம் ஏற்படலாம். வருடப் புள்ளிகளில் ஒடுங்கிவிடக் கூடியதா இந்து மதம்?

தொன்றுதொட்டுத் தொடரும் இந்து மதத்தை ஒரு குறுகிய காலத்திற்குள் குறைத்துவிடும் முயற்சியல்ல இது! ஆனால், எந்த நூற்றாண்டிலும், 'இந்த நூற்றாண்டிலும் இந்து மதம்' என்று பெருமிதப்பட முடியும் என்னும் நியாயத்தின் வெளிப்பாடு. இது இருபதாம் அல்லது இருபத்தோராம் நூற்றாண்டு இந்து மதமல்ல; அன்றும் இன்றும் என்றும் விளங்கும், எந்த நாளிலும் சொந்தம் கொண்டாடக் கூடும் இந்து மதத்தின் இனிய தர்மம்.


படம் : ஸ்ரீஹரி

# இந்த நூற்றாண்டில்

'அன்பே சிவம்' - மிகவும் புரிந்த மாதிரி தெரிந்தாலும் பல நேரங்களில் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் நம்மைத் தவிக்க வைக்கிற ஒரு சொல். எது அன்பு? எப்படி அன்பு காட்டுவது? எதற்காக அன்பு காட்டுவது? அன்பு காட்டுவதை எப்படிப் புரிய வைப்பது? - சரியா தவறா என்றே நிர்ணயிக்க முடியாத இப்படிப்பட்ட தர்மசங்கட வினாக்களும் இதனைத் தொடரும்.

இந்து மதத்தின் ஆணிவேரான வேதங்களும் சாஸ்திரங்களும் தங்களின் மையக் கருத்தை மிகத் தெளிவாகவே தெரிவிக்கின்றன. மனித சமுதாயம் மகிழ்ச்சியுடனும் மனநிறைவுடனும் வாழ வேண்டும் என்பது தான் அது. இந்த நோக்கத்தை நிறைவு செய்ய மனிதர்களைத் தங்களுக்குள்ளும், தங்களைச் சுற்றிய உலகுடனும் இணைக்கும் இன்னமுதமாய் 'அன்பு' செயல்படும்; செயல்பட வேண்டும். அப்படிப்பட்ட அன்பே தெய்வீகமாகும்; தெய்வமும் ஆகும்.

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர் சோமாசி மாறர். சோமயாகம் செய்தவர் ஆதலால், சோமாசி மாறர் என்றழைக்கப்பட்டவர். சிவபெருமானுக்கு மிகவும் நெருக்கமான நண்பர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பதால், சுந்தரரைப் பிடித்தால் சிவனையே பிடித்து விடலாம் என்பது மாறருக்குத் தெரியும். சுந்தரரிடம் சிபாரிசுக்குப் போனார். வேறொன்றுமில்லை. தன்னுடைய யாகத்தில் அவிர்பாகத்தை நேரடியாகச் சிவபிரானே வந்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்கு, சிவனை வரச் சொல்ல சுந்தரர் சிபாரிசு! சுந்தரரும் வரச் சொல்வதாக வாக்குக் கொடுத்தார். ஆனால், என்றைக்கு வருவார் என்று மட்டும் சொல்ல முடியாது. அது உமாபதிக்கு மட்டுமே உரிய உரிமை. யாகம் நடந்தது; பல நாட்கள் தொடர்ந்தது; யாகத்தில் பங்கு பெற்ற அந்தணர்கள் காத்திருந்து காத்திருந்து 'சிவனாவது, நேரே வருவதாவது' என்று கதைக்கத் தொடங்கினார்கள்.

அன்று வைகாசி ஆயில்யத் திருநாள். உச்

சிப் பொழுது. யாகத்தில் பூர்ணாஹுதி நேரம். யாக குண்டத்து அக்னி நாக்குகள் நீண்டு நடனமாடின. திடீரென்று ஓடி வந்த ஒரு நாய், யாக குண்ட வெப்பம் விரட்ட அங்குமிங்குமாய் ஓட... இந்தப் பக்கம் இன்னொரு நாய்... அதற்குள் அந்தணர்கள் நாயைக் கண்டு கூக்குரலிட... குழப்பம் அதிகமாகி... நாயைப் பிடிக்க பின்னாலேயே வந்த வேடுவர் ஒருவர், அருகில் அவர் மனைவி, அவள் கையில் பிடித்திருந்த இன்னுமிரு நாய்கள். ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் அவர்களோடு ஒரு பெருங்கூட்டம். யாகசாலைக்கு ஒவ்வாது என இதைக் கண்ட அந்த

# இந்து மதம்




ணர்கள் தலைதெறிக்க ஓட... யாக யஜமானனாய் வீற்றிருந்த சோமாசி மாறர் சென்னி மேல் கைகூப்பித் தொழுதார்: "எங்கும் நிறைந்த மெய்மைப் பொருளே! அவிர் பாகம் ஏற்க அணங்கொடு வந்தாயோ", எனத் தான் பணிந்து தண்டனிட்டார்.

பார்வதி பரமேஸ்வரனே வேடுவர் வேடுவச்சியாக, பூதகணங்களெல்லாம் வேடுவத் திருக்கூட்டமாக, நான்மறைகளே நாய்களாக, அம்பர் மாகாளத்தில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சி சோமாசி மாறரின் பக்தி வெளிப்பாடு மட்டுமல்ல; உருவங்களையும் வெளிப்பாடுகளையும் கடந்து எவற்றுள்ளும் இறைவன் இருக்கிறான் என்பதையும், செயற்கை பாகுபாடுகளைத் தாண்டி எவ்வுயிரும் தம் முயிர் போலெண்ணும் சுத்தமே சத்தியம், என்பதையும் விளக்கும் ஓர் மெய்ப்பாடேயாகும்.

**டாக்டர் சுதா சேஷய்யன்**

"எதை நகரச் சொல்கிறாய்? இந்த உடலையா? உள்ளிருக்கும் வஸ்துவையா?" என்று ஆதிசங்கரரைப் பார்த்துக் கேட்டான் இன்னொரு வேடுவன். 'உடல் என்றால் அது அநித்தியம் என்று உனக்கே தெரியும்; உள்ளிருக்கும் வஸ்துவையென்றால், அது உள்ளே மட்டுமல்ல, எங்கேயும் நீக்கமற இருப்பது; எப்படி நகரச் சொல்வது?"என்று அவன் தொடுத்த கணைகளையே தன் ஞான விளக்கின் ஒளியாக்கி, மானுட இருட்டைப்போக்க மனீஷா பஞ்சகம் பாடினார் பகவத் பாதர்.

"உள் இருப்பது பிரும்மம்" என்கிற 'கொள்கை தத்துவ விசாரத்திற்காக மட்டுமல்ல. 'நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே - நீங்கள் எல்லாம் சொப்பனந்தானோ? வெறும் தோற்ற மயக்கங்களோ?' என்னும் மகாகவி பாரதியின் கேள்வியே பதிலையும்

தரும். தோற்றத்தில் மட்டுமே மாறுபாடுகள். உள்ளிருக்கும் உண்மையும் தன்மையும் ஒன்றுதான்.

**நா**ம் வாழும் இன்றைய சமுதாயத்தை, சார்ந்து வாழும் சமுதாயம் (interdependent society) என்றழைக்கிறார்கள் மானுடவியல் அறிஞர்கள். இத்தகைய சமுதாயத்தில் வேற்றுமைகளையும் வேறுபாடுகளையும் குறைத்து, ஒட்டுமொத்த சமூக ஒருங்கிணைப்பைக் கூட்ட 'அன்பே சிவம்' என்னும் கொள்கை நல்லதொரு அடித்தளம் அமைக்கும்.

வேதங்கள் பஞ்ச மகா யக்ஞங்கள் என்றும், இவை ஒவ்வொரு மனிதனும் செய்ய வேண்டியவை என்றும் குறிப்பிடுகின்றன. பிரம்ம யக்ஞம், தேவ யக்ஞம், பித்ரு யக்ஞம் என்கிற மூன்றைக் கூட விட்டுவிட்டு (இப்போதைக்கு), அவற்றில் உள்ள மீதமிரண்டைப் பார்ப்போம். மனுஷ யக்ஞம் - உடனுள்ள மனிதர்களிடம் அன்பு காட்டுவது, விருந் தோம்பல், அன்னதானம், பரோபகாரம், சமூகப்பணி என்னும் யாவுமே மனுஷ யக்ஞத்தில் அடங்கும். பூத யக்ஞம் - சகல வித ஜீவராசிகளுக்கும் அன்பைத் தெரிவித்து உணவூட்டுதல். இன்னும் ஒரு படி மேலே போய், 'ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்' என்றார்கள் பெரியவர்கள். மனோ வாக்கு காயங்களால் பிராணிகளுக்கும் நன்மையுண்டாக்குவதே ஸத்யம்; பிறவெல்லாம் அஸத்யமே! மனிதன் தன் வசதிகளையும் வாய்ப்புகளையும் வைத்துக் கொண்டு விலங்குகளைத் துன்புறுத்தக் கூடாது என்றுதான், மூஞ்சூறு முதல் சிங்கம் வரை யாவுமே இறைவனின் வாகனங்களாக வழிபடப்படுகின்றன.

ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு ஸ்தல விருட்சம் உண்டு. இறைவனுக்கான மரியாதையும் மதிப்பும் அந்த விருட்சத்துக்கும் உண்டு. சுற்றுச் சூழல் பாதுகாப்பு, அழிந்து போகும் இனங்களின் பாதுகாப்பு ஆகியவற்றுக்கான வழிமுறைகளை அரங்குகள் போட்டு ஆராயும் போதுதான், ஏற்கெனவே எளிமையாக இவை இறைவனின் பெயராலேயே செயல்படுத்தப்பட்டிருக்கின்றன என்பது புரியும். சொல்லப்போனால், இயற்கையும் இறைமையும் இரண்டறக் கலந்ததை எடுத்துக் காட்டுவதே, இந்து சமயப்பெரு நோக்கம்.

மானுட வாழ்க்கையை, உலக வாழ்க்கையைச் செம்மையுறச் செய்யவே இந்து சமயத்தின் பற்பல கோட்பாடுகளும் பாதை வகுகின்றன. தெய்வங்கள் மனிதச் சட்டை போர்த்துக் கொண்டு அவதாரங்களாக இறங்கி வந்து வாழ்ந்தார்கள். ஸ்ரீமந் நாராயணனின் பூர்ண அவதாரம் ஸ்ரீராமபிரான். பொன்னின் சோதி, மின்னல் ஒரு பெண்ணுருக் கொண்டாற் போல் இருக்கும் சீதைக்கும் ராமனுக்கும் திருமணம். சீதையோ பொன்வண்ணத்தாள்; ராமனோ காரொளி வண்ணக் கருமுகிற் கொழுந்து. ஸ்ரீ மத் ராமாயணத்தின்படி, அன்று, நான்கு சகோதரர்களுக்கும் திருமணம். இரண்டு மாப்பிள்ளைகள் கரியமேனி கொண்டவர்கள்; இன்னும் இருவரோ செம்மேனி கொண்டவர்கள். கறுப்பு மாப்பிள்ளைகளுக்கு சிவப்புப் பெண்கள் கிடைத்தார்கள் - ராமனுக்குச் சீதையும், பரதனுக்கு மாண்டவியும். சிவப்பு மாப்பிள்ளைகளுக்குக் கறுப்புப் பெண்கள் கிடைத்தார்கள் - இலக்குவனுக்கு ஊர்மிளையும், சத்ருக்கனனுக்கு ஸ்ருதகீர்த்தியும்.

சிவன் சிவப்பென்றால், மலைமகளாம் பார்வதியோ கருநீலக் கோமகள். 'இறைவனிலும் இறைவியிலும் இப்படியெல்லாம் நிறங்கள் உண்டா என்ன?' என்று கேள்வி கேட்டோமானால், விடை இவ்வளவுதான்: வண்ணங்களையும் வடிவங்களையும் கடந்த தன்மைதான் இறைமை! ஆனால், அந்த இறைமையே, வண்ணங்களாகவும் வடிவங்களாகவும் விரிந்து நிற்பது, மனிதனுக்கு வாழும் வகையைக் கற்றுக் கொடுக்கவேயன்றி, தனக்காகவன்று. மனிதர்களுக்குள் நிறபேதங்கள் கூடாது என்பதையும், தோலின் நிறம் ஒருவரைத் தாழ்த்திவிடாது என்பதையும் கற்றுக் கொடுக்கக் கடவுளர்கள் கொண்ட திருக்கோலந்தாம் என்னே!

(தொடரும்)



ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
**Old No. 102, New No. 138, USMAN ROAD,**
**T. NAGAR, CHENNAI - 600 017.**
**PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY**
**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**

**PROPRIETOR : P. RAVINDHIRAN**

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

| ராசி | ராசிக்கல் | வெள்ளி மோதிரம் விலை | |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |

எங்களிடம் நியூமராலஜிபடியும் கல் மோதிரங்கள் கிடைக்கும்.

**TOPAZ, MOONSTONE, AMETHYST, TARQUISE, TIGER EYE, BLOOD STONE, OPAL, AQUAMARINE.**

**ராசிக்கல் மோதிரம் வாங்க அட்சயதிதி மே 4 மிகச் சிறந்த நாள்.**

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-

M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

குறிப்பு : தினசரி காலை ராஜ் டீவியில் 6.55 மணிக்கு சிறப்புப் பேட்டியை பார்க்கவும்

மேஷ ராசி, விருச்சிக ராசி- பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

கடகராசி -முத்து * சிம்மராசி - மாணிக்கம் * தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் * மகரராசி, கும்பராசி - நீலம் *

ஸ்ரீ ராமஜெயம்

# வடமாநில புனித யாத்திரை

33 ஆண்டுகளுக்கு மேலான அனுபவம்

| | |
|---|---|
| 2.6.2003 | இது 12 நாட்கள் கொண்டது. பூரிஜெகன்னாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்தகயா, காசி, சாரநாத், அயோத்தியா, அலகாபாத், நைமிசாரண்யம் - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 5500/- |
| 2.6.2003 | இது 23 நாட்கள் கொண்டது. பூரிஜெகன்னாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்த கயா, காசி, சாரநாத், நைமி சாரண்யம், அலகாபாத், அயோத்தியா, ஹரித்துவார், ரிஷிகேஷ், கேதார்நாத், பத்ரிநாத், தேவப்ரயாகை, ஆக்ரா, மதுராபிருந்தாவன், நியூ டெல்லி - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 8,400/-. |
| 11.6.2003 | இது 14 நாட்கள் கொண்டது. ஹரித்துவார், ரிஷிகேஷ், கேதார்நாத், பத்ரிநாத், தேவப்ரயாகை, நியூ டெல்லி ஆக்ரா, மதுரா பிருந்தாவன் - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 6000/-. |
| 19.6.2003 : | இது 18 நாட்கள் கொண்டது. ஆக்ரா, மதுரா, பிருந்தாவன், ஜெய்ப்பூர், நியூ டெல்லி, சிம்லா, குளு, மணாலி, மணிகரன், வைஷ்ணாவிதேவி, அமிர்தசரஸ், குருக்ஷேத்திரம் - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 7600/-. |
| 17.7.2003 | இது 10 நாட்கள் கொண்ட குதுகலமான ஆந்திரபிரதேஸ் யாத்திரை, கதிரி, புட்டபர்த்தி, லேபாக்ஷி, அஹோபிலம், மந்திராலயம், பஞ்சமுகி, மஹாநந்தி, ஸ்ரீசைலம், பத்ராசலம், விஜயவாடா, பெனுகுண்டா, அன்னாவரம், சிம்மாசலம், ராஜமன்றி, மங்களகிரி, நெல்லூர், ஜொன்னவாடா, காளஹஸ்தி - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 3900/- |



ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராம்மணர்களைக் கொண்டு காலை - காபி, டிபன்; மதியம், இரவு உணவளிப்பதுடன் இங்கு குறிப்பிட்ட அனைத்துச் செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.

மேலும் விவரங்களுக்கு :-

## ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்

நெ.7, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. ✆ : 28440144

உரிமையாளர் : S. ஜெயராமன்

---



இல்லமோ, முதலீடோ

# சிறந்த வீட்டு மனைகள்

மாநகருக்கு அருகில்.

| VGV நகர் | அன்னை அபிராமி நகர் |
|---|---|
| காமராஜ் நகர் அருகில், ஆவடி, சென்னை - 600 071. ••• திருமங்கலம், அம்பத்தூர் எஸ்டேட் வழியாகவும் கோயம்பேடு, மதுரவாயில் மற்றும் போரூர் வழியாகவும் செல்லக்கூடிய வசதியான 3 வழிப்பாதைகள், பஸ் மற்றும் ரயில் வசதி. | கூடுவாஞ்சேரி ••• தாம்பரம் முடிச்சூர் ரோடு வழியாகவும் கூடுவாஞ்சேரி வழியாகவும் 10 நிமிடத்தில் செல்லக்கூடிய வசதியான இருவழிப்பாதைகள், பஸ் மற்றும் ரயில் வசதி. |

சுத்தமான பத்திரம், நம்பகமான நிறுவனம், உடனடி பத்திரப்பதிவு

மேலும் விபரங்களுக்கு : **24357721 / 31.**

மனை வாங்க நிதியுதவி



சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட்

HOME FINANCE
TATA HOME FINANCE




## BLB Estates (P) Ltd.

27, Rathna Nagar, Off. Anna Salai,
Behind Apollo Cancer Hospital, Teynampet, Chennai - 18.
E-mail : blbestmail@vsnl.net http://business.vsnl.com/blbestates

நன்மதிப்பில் முதலீடு




## முன்கதைச் சுருக்கம்

"காஞ்சி சுந்தரி காவலின்றி இருக்கிறாள்: வழியில் எங்கும் தங்காமல் நேரே வரவும்" என்ற ஒற்றன் நாகநந்தியின் ஓலை வாதாபி புலிகேசிக்குக் கிடைத்திருந்தால், காஞ்சியும் அத்துடன் பல்லவப் பேரரசும் சளுக்க சாம்ராஜ்யத்துடன் இணைந்திருக்கும். அவ்வாறு நேராமல் நாகநந்தியின் சூழ்ச்சிகளை எதிர்சூழ்ச்சிகள் செய்து முறியடித்து, புலிகேசியை வட பெண்ணைக் கரையிலேயே பலகாலம் தாமதிக்கச் செய்து, காஞ்சிக் கோட்டையைப் பலப்படுத்தினார் பல்லவச் சக்கரவர்த்தி மகேந்திர வர்மர்.

அவர் மகன், மாமல்ல நரசிம்ம பல்லவனுக்கும் சிற்பி மகளும் ஆடலரசியுமான சிவகாமிக்கும் இடையில் காதல் மலர்ந்து வலுப்பெற்று அசைக்க முடியாததாகி விட்டிருந்தது.

இதே நேரத்தில் புலிகேசியின் ஒற்றனாக வந்த புத்த பிக்ஷு நாகநந்திக்கும் சிவகாமியின் கலைத்திறன் மீது மோகம் ஏற்பட்டது. எதிரி என்ற காரணத்துடன் பொறாமையும் சேர, மாமல்லனை மறைந்திருந்து கொலை செய்யவும் முயன்றார் புத்த பிக்ஷு. தெய்வ அருளாலும் பல்லவ ஒற்றர்களின் திறமையாலும் தப்பினார் மாமல்லர்.

மகேந்திர பல்லவர், நாட்டின் எதிர்காலத்தை உத்தேசித்து, சிவகாமி தன் காதலைத் தியாகம் செய்ய வேண்டும் என்று கோரினார். சிவகாமி உறுதியாக மறுத்து விட்டாள்.

வட பெண்ணைக் கரையிலிருந்து பின்வாங்கிய பல்லவ சேனை காஞ்சிக் கோட்டைக்குள் புக, காஞ்சி முற்றுகை தொடங்கியது. பல காலம் முற்றுகை நடத்தியும் கோட்டையைப் பிடிக்க முடியாத புலிகேசி சமாதானத் தூது அனுப்பினான். அவனை நம்பி, கோட்டைக்குள் அழைத்து விருந்துபசாரம் செய்தார் மகேந்திரர். சிவகாமி புலிகேசி முன்னிலையில் ஆட அழைக்கப்

அமரர் **கல்கி**

பட்டாள்.

ஒரு பலவீனமான கணத்தில், மகேந்திரர் தாம் புலிகேசியைத் தாமதப்படுத்தச் செய்த சூழ்ச்சிகளைச் சொல்லிவிட, புலிகேசி தான் ஏமாந்ததை எண்ணி ஆத்திரம் அடைந்தான். விடைபெற்று வாதாபி திரும்புகையில் பல்லவ கலைச் செல்வங்களை அழிக்கும்படியும் சிற்பிகளை அங்கஹீனப்படுத்தும்படியும் இளம் பெண்களைச் சிறைப்படுத்தும்படியும் தம் படைகளுக்குக் கட்டளையிட்டான்.

தந்தை ஆயனர் சிற்பியும் மகள் சிவகாமியும் சளுக்க வீரர்களிடம் சிக்கிக் கொண்டு தவித்த நேரத்தில் கலைக் காதலரான நாகநந்தி உதவினார். ஆயனரின் உயிர் காப்பாற்றப்பட்டது. ஆனால் சிவகாமி கைப்பற்றப்பட்டு வாதாபிக்கு அழைத்துச் செல்லப்படுவதை அவர் தடுக்கவில்லை.

ஓர் அரண்மனையில் சிறை வைக்கப் பட்டாள் சிவகாமி. வாதாபி வீதிகளில் சுதந்திரமாக உலா வரும் உரிமையைப் புலிகேசி சிவகாமிக்கு அளித்தான். ஒருநாள் வாதாபி நாற்சந்தியில், அடிமைகளாக இழுத்து வரப்பட்ட பல்லவக் குடிமக்கள் சாட்டையால் அடிக்கப்படுவதைக் கண்டாள் சிவகாமி. அந்தக் கொடுமை நிறுத்தப்பட வேண்டுமெனில் தான் நாற்சந்திகளில் நடனமாட வேண்டும் எனப் புலிகேசி நிபந்தனை விதித்திருப்பதை அறிந்தாள். பல்லவ மக்களைக் காக்க அன்று முதல் தினமும் ஒரு நாற்சந்தியில் நடனமாடினாள் சிவகாமி.

அப்படியொரு நாள் ஆடுகையில் புத்த பிக்ஷு நாகநந்தி அங்கே வந்து அக்காட்சியைக் கண்டார். தாம் வேங்கி நாட்டுக்குச் சென்றிருந்தபோது புலிகேசி இப்படி சிவகாமியையும் அவள் கலையையும் அவமானப்படுத்தியிருப்பதைக் கண்டு வேதனைப்பட்டார். அன்று இரவு, சிவகாமி தங்கியிருந்த அரண்மனைக்குச் சென்ற புத்த பிக்ஷு, அவளுக்கு இத்தகைய அவமானம் நேர்ந்ததற்காக மன்னிப்புக் கேட்டார். சிவகாமி அவர் உண்மையில் யார் என்று வினவ, தாம் புலிகேசியின் சகோதரன் என்ற ரகசியத்தை வெளியிட்டார் நாகநந்தி. சிவகாமியை விடுவித்துத் திரும்பவும் பல்லவ நாட்டுக்கே அனுப்பப் புலிகேசியின் அனுமதியுடன் வந்திருப்பதாகவும் சொன்னார்.

சிவகாமி திரும்பிச் செல்ல மறுத்தாள்.

தன் இதயம் கவர்ந்த வீர மாமல்லர் படையெடுத்து வந்து வாதாபியை அழித்துத் தரைமட்டமாக்கி அங்கு தமிழக மக்களுக்கும் தனக்கும் நேர்ந்த அவமானங்களுக்குப் பழிக்குப் பழி வாங்கின பிறகே அங்கிருந்து கிளம்பப் போவதாக வீர சபதம் செய்தாள் சிவகாமி.

சிவகாமியின் சபதம் அவளை இழக்க விரும்பாத பிக்ஷுவின் அதரங்களில் வெற்றிப் புன்னகையை வரவழைத்தது.

சிவகாமியின் நாற்சந்தி நடனத்தைப் பிக்ஷு கண்ட அதே நேரத்தில் பல்லவ ஒற்றர் தலைவன் சத்ருக்னனும் பார்த்தான். சிவகாமியை மீட்டுச் செல்ல மாறு வேடம் தரித்து வந்து, வாதாபியை அடுத்து, காட்டில் தங்கியிருந்த இளவரசர் மாமல்லர், பல்லவப் படைத் தளபதி பரஞ்சோதி, ஒற்றன் குண்டோதரன், ரத சாரதி கண்ணபிரான் ஆகியோரிடம் சென்று, தான் பார்த்தவற்றைக் கூறினான் சத்ருக்னன். புத்த பிக்ஷு நாகநந்தியையும் தான் கண்டதாக அவன் குறிப்பிட, மாமல்லர் மனம் பதறினார்.

## ஐம்பத்து இரண்டாம் அத்தியாயம்

## வளையற்காரன்

நாகநந்தி என்ற பெயரைக் கேட்டவுடனே அங்கிருந்தவர் அனைவருக்கும் தூக்கி வாரிப் போட்டது.

மாமல்லர், "ஆஹா! புத்த பிக்ஷுவா? அப்படியானால் குண்டோதரன் கூறிய செய்தி பொய்யா?" என்று சொல்லிய வண்ணம் குண்டோதரனை நோக்கினார்.

"இல்லை, பிரபு! குண்டோதரன் கூறிய செய்தி உண்மைதான். வாதாபிக்கு வரும் வழியில் பிக்ஷு வேங்கி நகரத்துக்குத்தான் போனார். துரதிர்ஷ்டவசமாக நேற்றுத்

திரும்பி வந்துவிட்டார். அவருடைய வரவினால் நம்முடைய காரியம் ஒன்றுக்குப் பத்து மடங்கு கடினமாகி விட்டது. இன்னும் இரண்டு நாளைக்கு முன்னால் மட்டும் நாம் வந்திருந்தால்...?'' என்றான் சத்ருக்னன்.

''பிக்ஷு நேற்றுத்தான் திரும்பி வந்தாரா? உனக்கு எப்படித் தெரியும், சத்ருக்னா!'' என்று சேனாபதி பரஞ்சோதி வினவினார்.

நகரமெல்லாம் அதைப்பற்றித்தான் பேச்சு, தளபதி! ஜனங்கள் பேசிக் கொண்டதிலிருந்துதான் தெரிந்து கொண்டேன். புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் சென்ற வருஷம் வேங்கி மன்னனாக முடி சூட்டிக் கொண்டானல்லவா? எந்த வேளையில் மகுடாபிஷேகம் செய்து கொண்டானோ, தெரியவில்லை; சில நாளைக்கு முன்பு அவன் மாண்டு போனான். அவனுடைய மனைவியையும் ஆறு மாதத்துக் கைக்குழந்தையையும் அழைத்துக் கொண்டு நாகநந்தி நேற்றுத் திரும்பி வந்தாராம்'' என்று சத்ருக்னன் கூறினான்.

''சளுக்க சாம்ராஜ்யத்தின் அஸ்தமனம் நெருங்கி விட்டது என்று பல்லவேந்திரர் கூறியது வீண்போகவில்லை. விஷ்ணுவர்த்தனன் எப்படி இறந்தானாம்?'' என்று பரஞ்சோதி கேட்டார்.

'விஷ்ணுவர்த்தனன் வேங்கிப் படைகளை முழுவதும் நாசம் செய்ய முடியவில்லை. நம்முடைய சக்கரவர்த்தி சொல்லி அனுப்பியிருந்தபடி வேங்கிப் படைகள் பின் வாங்கிச் சென்று கிருஷ்ணை கோதாவரி நதிக் கரைக் காடுகளில் ஒளிந்து கொண்டிருந்தன. விஷ்ணுவர்த்தனன் முடி சூட்டிக் கொண்ட பிறகு நாடெங்கும் கலகங்கள் மூண்டன. ஒளிந்திருந்த படை வீரர்கள் அங்கங்கே திடீர் திடீரென்று கிளம்பித் தாக்கினார்கள். கலகத்தைத்தானே அடக்கப் போவதாக விருது கூறிக் கொண்டு விஷ்ணுவர்த்தனன் கிளம்பினான். ஒரு சண்டையில் படுகாயமடைந்து விழுந்தான். நாடெங்கும் கலகங்கள் அதிகமாயின. இந்த சமயத்தில்தான் நாகநந்தியும் அங்கே போய்ச் சேர்ந்தார். விஷ்ணுவின் மனைவியையும் குழந்தையையும் கொண்டு வந்து சேர்த்தார். விஷ்ணுவர்த்தனன் மனைவி துர்வி நீதனுடைய மகள் என்பது தங்களுக்குத் தெரியுமல்லவா, பிரபு?''

''அதைப் பற்றியெல்லாம் இப்போது என்ன கவலை, சத்ருக்னா நாம் வந்த காரியத்தைப் பற்றிச் சொல்லாமல் ஊர்க் கதையெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறாயே? மேலே நடந்ததைச் சொல்லு!'' என்றார் மாமல்லர்.

''நாகநந்தி பிக்ஷுவைப் பார்த்து வியப்பும் திகைப்பும் அடைந்த சிவகாமி அம்மை, சீக்கிரத்தில் சமாளித்துக் கொண்டு பல்லக்கில் போய் ஏறினார். பல்லக்கைச் சற்றுத் தூரம்தான் நான் தொடர்ந்து சென்றேன். ஆரவாரமின்றி அமைதி குடி கொண்டிருந்த ஒரு வீதிக்குள் பல்லக்குச் சென்று அழகான மாளிகை ஒன்றின் வாசலில் நின்றது. சிவகாமி அம்மைப் பல்லக்கிலிருந்து இறங்கி அந்த மாளிகைக்குள்ளே போனார். வீதி முனையிலேயே நான் கொஞ்ச நேரம் நின்று என்ன செய்யலாம் என்று யோசித்தேன். பிறகு மாளிகை வாசலை நெருங்கினேன். காவலாளிகள் இருவர் அங்கு இருந்தார்கள். அவர்களைப் பார்த்து, 'காஞ்சி நகரத்து நாட்டியப் பெண் இருப்பது இந்த வீட்டிலேதானே?' என்று கேட்டேன். ''ஆமாம்! எதற்காகக் கேட்கிறாய்?' என்றார்கள். 'நான் வளைச் செட்டி; அழகான வளைகள் கொண்டு வந்திருக்கிறேன். அம்மையிடம் காட்ட வேண்டும்' என்றேன். இரவு நேரத்தில் இந்த வீட்டுக்குள் யாரும் புகுவதற்கு அநுமதியில்லை. நாளைப் பகலில் வா!' என்றார்கள். சற்று நேரம் அவர்களுடன் வம்பு பேசிப் பல விஷயங்கள் தெரிந்துகொண்டேன். சிவகாமி அம்மையும், ஒரு தோழியும் சமையற்காரியும் மட்டும் அந்த வீட்டுக்குள் இருப்பதாகவும், வேறு யாரும் இல்லை, வருவதுமில்லையென்பதாகவும் தெரிந்து கொண்டேன். ஒரே ஒரு தடவை புலிகேசிச் சக்கரவர்த்தி அங்கு வந்து இராஜ சபையில் நடனம் ஆடும்படி கேட்டாராம். அம்மை அதை மறுத்து விட்டபடியால் இம்மாதிரி வாதாபி வீதிகளில் தினம் நாட்டியமாடும்படி தண்டனை விதித்தாராம். இதை அறிந்ததும் எனக்குக் கோபம் கோபமாய் வந்தது. மனத்திற்

குள்ளே அந்தக் கொடுமனம் படைத்த ராட்சதப் பதரைத் திட்டிக் கொண்டு கிளம்பினேன். வீதி முனைக்குச் சென்றதும் ஒரு பக்கத்திலிருந்து திவர்த்திப் பிடித்த காவலர்கள் புடைசூழ ஒரு பல்லக்கு வருவதைக் கண்டேன். ஒரு வீட்டுத் திண்ணையில் தூணின் பின்னால் ஒளிந்து கொண்டு பல்லக்கில் வருவது யார் என்று கவனித்தேன். நான் எதிர்பார்த்தது போலவே நாகநந்தி பிக்ஷுதான் பல்லக்கில் இருந்தார்..."

அப்போது நறநறவென்று, மாமல்லர் பல்லைக் கடிக்கும் சத்தம் கேட்டது. சேனாபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, "சத்ருக்னா! ஏன் கதையை வளர்த்திக் கொண்டே போகிறாய்? அம்மையைச் சந்தித்துப் பேசினாயா? ஏதாவது செய்தி உண்டா? அதைச் சொல்லு!" என்றார்.

பரஞ்சோதியைச் சிறிது கோபமாக மாமல்லர் பார்த்துவிட்டு, "சத்ருக்னா! எதையும் விட வேண்டாம். நாகநந்தி எங்கே போனார்? சிவகாமியின் வீட்டுக்குள்ளேயா?" என்று வினவினார்.

"ஆம், பிரபு! அம்மையின் மாளிகைக்குள்தான் போனார். ஒரு நாழிகை நேரம் வீட்டுக்குள்ளே இருந்துவிட்டு வெளியேறினார். அந்த ஒரு நாழிகை நேரமும் நானும் அந்த வீதியிலேயே சுற்றி வந்து கொண்டிருந்தேன். ஒரு தடவை வீட்டு வாசலுக்கு அருகில் சென்று காவலரில் ஒருவனிடம், 'சமீபத்தில் சத்திரம் சாவடி எங்கேயாவது இருக்கிறதா?' என்று விசாரித்தேன்: அப்போது உள்ளே சிவகாமி அம்மை புத்த பிக்ஷுவின் தலையில் நெருப்புத் தணலைக் கொட்டிக் கொண்டிருந்தார். அவ்வளவு கோபமாக அவர் பேசியது என் காதில் விழுந்தது. அதில் எனக்குப் பரம திருப்தி ஏற்பட்டது..."

"இங்கே எல்லோருக்கும் அப்படித்தான்!" என்றான் குண்டோதரன்.

"அதே வீதியில் இருந்த ஒரு சத்திரத்தில் படுத்து இரவு நிம்மதியாகத் தூங்கினேன். இன்று பொழுது விடிந்து சற்று நேரம் ஆனதும் அம்மையின் மாளிகைக்குப் போனேன். என்னைப் பார்த்ததும் சிவகாமி அம்மைக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. பக்கத்திலிருந்த தோழியை ஏதோ காரியமாக உள்ளே போகச் சொல்லி விட்டு, "சத்ருக்னா! இது என்ன? காஞ்சிக்கு நீ போகவில்லையா? என்னைப் பின் தொடர்ந்தே வந்துவிட்டாயா?" என்று கேட்டார்.

"இல்லை, அம்மணி! காஞ்சிக்குப் போய் மாமல்லரிடம் தாங்கள் கூறிய செய்தியைச் சொன்னேன். அவரும் வந்திருக்கிறார். சேனாபதியும் வந்திருக்கிறார்" என்றேன்.

இதைக் கேட்டதும் அம்மை உற்சாகமும் பரபரப்பும் அடைந்து, 'சைனியம் எங்கே இறங்கியிருக்கிறது?' என்று கேட்டார்.

சைனியத்தோடு வரவில்லையென்றும், மாமல்லரோடு சேனாபதியும் கண்ணபிரானும் வந்திருக்கிறார்கள் என்றும், கோட்டைக்கு வெளியே இந்த மலையடிவாரத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்றும் தெரிவித்தேன். நாளை அமாவாசை இரவில் எல்லோரும் வருகிறோம் என்றும், தோழிப் பெண்ணை எங்கேயாவது அனுப்பிவிட்டு நம்முடன் புறப்பட ஆயத்தமாயிருக்க வேண்டும் என்று சொல்லிவிட்டு வந்தேன்!'' என்று சத்ருக்னன் முடித்தான்.

"சத்ருக்னா! சிவகாமி முடிவாக என்ன சொன்னாள்? ஏதேனும் செய்தி உண்டா?" என்று மாமல்லர் கேட்டார்.

''ஒன்றுமில்லை, பிரபு! அம்மை அதிகமாகப் பேசாமல் அமாவாசை இரவு நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகச் சொல்லி எனக்கு விடை கொடுத்தார். அவ்வளவுதான்!"

இதைக் கேட்ட மாமல்லர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

## ஐம்பத்து மூன்றாம் அத்தியாயம்

## சந்தேகம்


மாவாசை அன்று இரவு சிவகாமி தன்னுடைய மாளிகையில் தன்னந்தனியாக உட்கார்ந்திருந்தாள்.

அவளுக்குத் துணையாயிருந்த தோழி நோய் வாய்ப்பட்டிருந்த தன்னுடைய

அன்னையைப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந் தமையால், அதை வியாஜமாகக் கொண்டு அன்றிரவு அவளை வீட்டுக்கு அனுப்பி விட்டாள்.

இப்போது நுந்தா விளக்கு ஒன்றே சிவகாமிக்குத் துணையாக எரிந்து கொண்டிருந்தது. அவளுடைய உள்ளமோ பல்வேறு சிந்தனைகளில் ஆழ்ந்திருந்தது.

மாமல்லர் வரப் போகிறார் என்று



எண்ணியபோதெல்லாம் அவளுடைய இருதயம் மேலெழும்பி வந்து தொண்டையை அடைத்துக் கொண்டது. ஆத்திரமும் ஆங்காரமும் ஒரு பக்கத்தில் பொங்கின. துக்கமும் ஆர்வமும் இன்னொருபுறத்தில் பெருகின.

மாமல்லரிடம் வைத்த காதலினாலல்லவா இந்தத் துன்பங்களுக்கெல்லாம் ஆளானோம் என்ற எண்ணம் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. தனது



நிலைமைக்குகந்த சிற்பியின் மகன் ஒரு வனைக் காதலித்துக் கலியாணம் செய்து கொண்டிருந்தால், தான் இந்த அவகேட்டுக்கெல்லாம் ஆளாகியிருக்க வேண்டிய தில்லையல்லவா?

காடு சூழ்ந்த தனி வீட்டில் வசித்த தன்னை மாமல்லர் ஏன் தேடி வந்து இப்படிப் பித்துப் பிடிக்கச் செய்ய வேண்டும்? அப்படிச் செய்தவர் மண்டபப்பட்டுக் கிராமத்தில் ஏன் தன்னைத் தன்னந் தனியாக விட்டு விட்டுப் போக வேண்டும்? மாமல்லர் மேலுள்ள ஆசை காரணமாகத் தானே காஞ்சிக்கு அவள் வர நேர்ந்தது! மறுபடியும் அவருடைய காதல் காரணமாகத்தானே கோட்டையிலிருந்து சுரங்க வழியாக வெளிவர நேர்ந்தது! ஆகா! தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் காரணம் அவர்தான்!

இப்படியாக மாமல்லரிடம் ஒருபுறம் ஆத்திரத்தை வளர்த்துக் கொண்டு வந்தாள் என்றாலும், நேரம் ஆக ஆக, 'ஐயோ! அவர் வரவில்லையே?' என்ற ஏக்கமும் ஒருபுறம் அதிகமாகி வந்தது.

அர்த்த ராத்திரியில் சிவகாமி ஆழ்ந்த சிந்தனையிலிருந்தபோது திடீரென்று அவள் எதிரில் தாடியும் மீசையுமான முகத் தோற்றமுடைய இருவரைக் கண்டதும் திகிலடைந்தவளாய் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

ஆனாலும் அப்படி வந்தவர்களுடைய முகத் தோற்றம் பயங்கரத்தை விளைவிப்பதாக இல்லை. எப்போதோ பார்த்த முகங்களாகவும் தோன்றின.

"யார் நீங்கள்? இந்த நள்ளிரவு வேளையில் எதற்காக இங்கே வந்தீர்கள்?" என்று அதிகாரத் தொனியில் கேட்டாள்.

"சிவகாமி! என்னைத் தெரியவில்லையா?" என்று மாமல்லரின் குரல் கேட்டதும், சிவகாமியின் முகத்தில் வியப்புடன் கூடிய புன்னகை மலர்ந்தது.

எத்தனையோ காலத்துக்குப் பிறகு சிவகாமியின் முகத்தில் தோன்றிய அந்தப் புன்னகை அவளுடைய முகத்திற்கு எல்லையற்ற வனப்பை அளித்தது.

ஆனால், அந்த முகமலர்ச்சியானது மாமல்லரின் உள்ளத்தில் மகிழ்ச்சியை உண்டாக்கவில்லை. 'ஆ! இவள் இவ்விடம் உற்சாகமாகத்தான் இருக்கிறாள்!' என்ற எண்ணம் அவர் அகத்தில் உண்டாகி முகம் சுருங்கும்படிச் செய்தது.

"பிரபு! தாங்கள்தானா?" என்று உணர்ச்சியினால் கம்மிய குரலில் கேட்டுக் கொண்டு சிவகாமி எழுந்தாள்.

"ஆமாம், நான்தான்! வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையில் வைபோகமாக வாழும்போது பழைய மனிதர்களைப் பற்றி எப்படி ஞாபகம் இருக்கும்?" என்று மாமல்லர் கடுமையான குரலில் கூறினார்.

அந்தக் கொடிய மொழிகளைக் கேட்ட சிவகாமி திக்பிரமையடைந்தவள் போல் மாமல்லரைப் பார்த்தது பார்த்தபடி நின்றாள். இவர் உண்மையில் மாமல்லர்தானா அல்லது வேஷதாரியா என்று அவளுக்கு ஐயம் தோன்றிவிட்டது.

இப்படி ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்துக் கொண்டு சும்மா நின்றதைக் கவனித்த தளபதி பரஞ்சோதி, அந்தச் சந்தர்ப்பத்தில் தாம் அங்கிருப்பது அநுசிதம் என்பதை உணர்ந்தார். உடனே மாமல்லரின் காதருகில் வந்து, "பிரபு! காலதாமதம் செய்யக்கூடாது! அதிக நேரம் நமக்கில்லை" என்று சொல்லிவிட்டு, அப்பால் முன் கட்டுக்குச் சென்றார்.

பரஞ்சோதி மறைந்த பிறகு மாமல்லர், "ஓகோ! இன்னும் ஞாபகம் வரவில்லை போலிருக்கிறது. போனால் போகட்டும், உன் தந்தை ஆயனரையாவது ஞாபகமிருக்கிறதா, சிவகாமி? ஆடல் பாடல் விநோதங்களில் அவரையும் மறந்து விட்டாயா?" என்றார்.

சிவகாமியின் புருவங்கள் நெறிந்தன. கோபத்தினால் சிவந்த கண்கள் அகல விரிந்தன; இதழ்கள் துடித்தன.

உள்ளத்தில் பொங்கி வந்த கோபத்தையெல்லாம் பெரு முயற்சி செய்து அடக்கிக் கொண்டு, "இளவரசே! என் தந்தை சௌக்கியமாயிருக்கிறாரா? எங்கே இருக்கிறார்? எப்படி இருக்கிறார்?" என்று கேட்டாள்.

"ஆம்; ஆயனர் சௌக்கியமாயிருக்கிறார். கால்களில் ஒன்று முறிந்து, ஏக புதல்வியை இழந்தவர் எவ்வளவு

சௌக்கியமாயிருக்கலாமோ, அவ்வளவு சௌக்கியமாயிருக்கிறார். 'சிவகாமி எங்கே? என் அருமை மகள் எங்கே?' என்று வந்தவர் போனவரையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறார். சிவகாமி புறப்படு, போகலாம்!''

சிவகாமியின் கண்களில் நீர் ததும்பியது. ஆயினும் அவள் மாமல்லருடன் புறப்படுவதற்கு யத்தனம் செய்வதாகக் காணவில்லை.

''சிவகாமி! ஏன் இப்படி நிற்கிறாய்! உன் தந்தையை உயிரோடு காண விரும்பினால் உடனே புறப்படு!'' என்றார் மாமல்லர்.

இன்னமும் சிவகாமி அசையாமல் சும்மா நின்றாள்.

''இது என்ன, சிவகாமி! காஞ்சிக்கு வர உனக்கு இஷ்டமில்லையா? ஆகா! அப்போதே சந்தேகித்தேன். அது உண்மையாயிற்று!'' என்று மறுபடியும் மாமல்லர் குத்தலாகச் சொன்னார்.

சிவகாமியின் மௌனம் அப்போது கலைந்தது. ''பிரபு! என்ன சந்தேகித்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''அதைப் பற்றி இப்போது என்ன? பிறகு சொல்கிறேன்.''

''என்ன சந்தேகித்தீர்கள்! சொல்லுங்கள் பிரபு!''

''இப்போதே சொல்ல வேண்டுமா?''

''அவசியம் சொல்ல வேண்டும்.''

''வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையில் சுகபோகத்துடன் வாழ்ந்தவர்களுக்கு என்னோடு புறப்பட்டு வர இஷ்டமாயிராது என்று சந்தேகித்தேன்.''

இதைக் கேட்டதும் சிவகாமி சிரித்தாள்! நள்ளிரவு நேரத்தில் அந்தச் சிரிப்பின் ஒலி மாமல்லரின் காதுக்கு நாராசமாயிருந்தது. சிரிப்பை நிறுத்தியதும் சிவகாமி உறுதியான குரலில் கூறினாள்:

''ஆம் பல்லவ குமாரா! உங்கள் சந்தேகம் உண்மைதான். எனக்கு இந்த மாளிகையின் சுகபோகத்தைவிட்டு வர இஷ்டமில்லை. வாதாபி நகரை விட்டு வரவும் மனம் இல்லை. நீங்கள் போகலாம்!''

இவ்விதம் சிவகாமி கூறியதும், மாமல்லர் கண்களில் தீப்பொறி பறக்க, ''ஆகா பெரியவர்கள் கூறியிருப்பது எவ்வளவு உண்மை!'' என்றார்.

''பெரியவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள்?''

''ஸ்திரீகள் சபல சித்தமுடையவர்கள் என்று சொல்லியிருக்கிறார்கள்.''

''அந்த உண்மையை இப்போது கண்டு கொண்டீர்கள் அல்லவா? போய் வாருங்கள், பிரபு!''

''ஆகா! உன்னைத் தேடி நூறு காத தூரம் வந்தேனே? என்னைப் போன்ற புத்திசாலி யார்?'' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார் மாமல்லர். பிறகு, ''சிவகாமி நீ எனக்காக வர வேண்டாம். உன் தந்தைக்காகக் கிளம்பி வா! உன் தோழி கமலிக்காகப் புறப்பட்டு வா! உன்னைக் கட்டாயம் அழைத்து வருவதாக அவர்களிடம் சபதம் செய்துவிட்டு வந்தேன்!'' என்றார் மாமல்லர்.

''நானும் ஒரு சபதம் செய்திருக்கிறேன், பிரபு!''

''நீயும் சபதம் செய்திருக்கிறாயா? என்ன சபதம்?''

''தங்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?''

''சொல்லு சிவகாமி! சீக்கிரம் சொல்!''

''சொன்னால் நீங்கள் நம்பப் போவதில்லை. சபல புத்தியுள்ள அபலைப் பெண்ணின் சபதந்தானே?''

''பாதகமில்லை, சொல்! நேரமாகிறது!''

''இந்த வாதாபி நகரம் தீப்பற்றி எரிந்து, இந் நகரின் வீடுகள் எல்லாம் சாம்பலாவதையும், வீதிகளிலெல்லாம் இரத்த வெள்ளம் ஓடுவதையும், நாற்சந்திகள் பிணக்காடாய்க் கிடப்பதையும் கண்ணாலே பார்த்த பிறகுதான் இந்நகரை விட்டுக் கிளம்புவேன் என்று சபதம் செய்திருக்கிறேன்!''

''என்ன கோரமான சபதம்! இப்படி ஒரு சபதத்தை எதற்காகச் செய்தாய் சிவகாமி?''

''பிரபு! இந்த நகருக்கு வரும் வழியில் நான் பார்த்த கோரக் காட்சிகளையெல்லாம் நீங்கள் பார்த்திருந்தால் எதற்காகச் சபதம் செய்தேன் என்று கேட்க மாட்டீர்கள். இந்த வாதாபி நகரின் நாற்சந்திகளிலே தமிழ்நாட்டு ஸ்திரீ புரு

## அருள்வாக்கு!

மனிதப் பிறவி எடுத்ததன் பயனே அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. தனக்கென்று பொருள் சேர்ப்பதில், புகழ் சேர்ப்பதில், அலங்காரம் செய்து கொள்வதில் தாற்காலிகமாக இன்பம் கிட்டலாம். ஆனாலும் இவற்றில் உள்ளம் நிறைவு பெறுவதில்லை. உள்ளத்துக்கு நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தும்போது நமக்கு எத்தனை கஷ்டம் வந்தாலும், தேக சிரமம் வந்தாலும், பணம் செலவானாலும் இதெல்லாம் தெரிவதேயில்லை. அன்பின் ஆனந்தமும் நிறைவுமே இந்தத் துன்பத்துக்கெல்லாம் மேலாகத் தெரிகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வியர்த்தமே.



அன்பு செலுத்தும்போது துன்பமே தெரிவதில்லை என்றேன். ஆனால் கடைசியில் ஒருநாள் அன்பு செலுத்தப்பட்ட வஸ்துவே நமக்குப் பெரிய துன்பத்தைக் கொடுத்து விடுகிறது. நாம் ஒருவரிடம் அன்பு வைக்கிறோம். கடைசியில் ஒருநாள் அவர் நம்மை விட்டுப் போயே போய் விடுகிறார். அல்லது நாமாவது அவரை விட்டு ஒருநாள் போகத்தான் போகிறோம். அன்பின் முடிவான பலன் துன்பம்தானா என்று பெரிய சலிப்பு உண்டாகி விடுகிறது.

அன்பு செய்தாலும் முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால் என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து அதனிடம் அன்பை வைத்துவிட்டால் நாமும் அதுவும் ஒருநாளும் பிரியப் போவதில்லை. எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம் அன்பைப் பூரணமாக வைத்து விட வேண்டும். பரமாத்மா நம்மை விட்டு ஒரு போதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்து விடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்.**

ஷர்கள் கட்டப்பட்ட கரங்களுடனே கொண்டு வந்து நிறுத்தப்பட்டதையும், சாட்டையினால் அவர்கள் அடிக்கப்பட்டதையும், அவர்களுக்கு முன்னால் பல்லவ தேசத்தின் நடன கலாராணி நாட்டியமாடியதையும், தாங்கள் பார்த்திருந்தால், சபதம் ஏன் - எதற்காக - என்றெல்லாம் கேட்க மாட்டீர்கள்!''

''சிவகாமி! அதையெல்லாம் நான் நேரில் பார்க்காவிட்டாலும், எனக்குத் தெரிந்தவைதான். இருந்தாலும் நீ இவ்வளவு கடுமையான சபதம் எடுத்துக் கொள்ளலாமா?''

''பிரபு! பல வருஷங்களுக்கு முன்னால், - பல யுகங்களுக்கு முன்னால், என்னை இளவரசர் ஒருவர் காதலிப்பதாகச் சொன்னார். என்னைத் தமது பட்டமகிஷியாக்கிக் கொள்வதாக வாக்குறுதி கூறினார். என்னை ஒரு நாளும் மறப்பதில்லை என்று வேலின் மேல் ஆணையாக வாக்களித்தார். தாமரைக் குளக்கரையில் பூரண சந்திரனின் நிலவில், 'இந்த ஜன்மத்திலும் எந்த ஜன்மத்திலும் நீயே என் வாழ்க்கைத் துணைவி' என்று சத்தியம் செய்தார். அவர் சுத்த வீரர் என்றும், சொன்ன சொல் தவறாதவர் என்றும் நம்பியிருந்தேன். அந்த நம்பிக்கை காரணமாகவே அத்தகைய சபதம் செய்தேன்!'' என்று சிவகாமி கம்பீரமான குரலில் கூறி மாமல்லரை ஏறிட்டுப் பார்த்தாள். அந்தப் பார்வை கூரிய வேலைப் போல் மாமல்லருடைய நெஞ்சிலே பாய்ந்து அவரை நிலை குலையச் செய்தது.

(தொடரும்)



* ஐஸ்

# ஸ்டார் வார்ஸ்!

ஜார்ஜ் புஷ் - சதாம் ஹுசைன் போடும் சண்டை பின்னுக்குப் போய் விட்டது. அந்த இடத்தைத் தான் விவேக் ஓபராயும் சல்மான் கானும் பிடித்துக் கொண்டு விட்டார்களே?

வம்புக்கு அலைந்து கொண்டிருந்தவர்களை வம்பே தேடி வந்தது போல.. விவேக் ஓபராய் 'ப்ரெஸ் கான்ஃபரன்ஸ்' என்றதும் விழுந்தடித்துக் கொண்டு அத்தனைப் பத்திரிகையாளர்களும் ஆஜர்!



* சல்மான்

முந்தைய தினம் தன்னை நாற்பத்தியோரு முறை சல்மான்கான் 'செல்'லில் அழைத்து, திட்டியதையும் மிரட்டியதையும் உணர்ச்சி மயமாகக் கூறினார். "என்னுடைய ரிலீசுகளெல்லாம் சக்கைப்போடு போடுகின்றன. சின்ன வயசில் இப்படிப் பிரகாசிக்கிறானே என்ற தொழில் பொறாமை. ஐஸ்வர்யாவை நான் தான் இவரிடமிருந்து தட்டிப் பறித்தது போல் பேசுவதும், கரீனா, ராணிமுகர்ஜி போன்று என்னுடைய சினிமாக் கதாநாயகிகளுடனெல்லாம் என்னை ஜோடித்து, கதை கட்டி விடுவதும், காதல் தோல்வியின் பிரதிபலிப்பு; இரண்டுமாகச் சேர்ந்து கொண்டு, 'என்னுடைய கீழுலகத் தொடர்புகளை வைத்துக் கொண்டு உன்னைத் தீர்த்துக் கட்டுவேன்' என்று இரண்டாங் கெட்டானாக மிரட்டியிருப்பது பைத்தியக்காரத்தனத்தின் எல்லை. அவருடைய குடும்பத்தார், விஷயத்தை மூடி மறைக்காமல் ஒரு சைக்கியாட்டிஸ்டை நாடுவது உத்தமம்" என்று மூச்சிரைக்க சொல்லி முடித்தார் விவேக் ஓபராய். "சல்மானுக்குப் பெண்களை மதிக்கத் தெரியவில்லை, நீ அவர்களை மதித்து, பாதுகாப்பு வழங்கு. அப்போதுதான் நீ ஒரு ஆண் மகன்" என்று என் பாட்டி கூறியிருக்கிறார். அப்படியே நடந்து கொள்வேன்" என்கிறார் பாட்டிச் சொல்லைத் தட்டாத பேரன்.

'துள்ளிக் கொண்டிருந்த சல்மான் கொஞ்ச நாட்களாக சப்தமே இல்லாமல் துவண்டு கிடக்கிறாரே, என்ன ஆயிற்றோ என்ற கவலையிலிருந்து விடுதலை ஒருபுறம்; மிரட்டல்களை ஒட்டி, பாதுகாப்பிற்காக போலீசை நாடாமல், பத்திரியாளர்களை நாடியிருக்கும் விவேக்கின் விவேகம் மறுபுறம், இரண்டுமாகச் சேர்ந்து 'பிரஸ்'ஸை உச்சி குளிர வைத்துவிட்டது. சுடச் சுட செய்தி தந்து உருகிவிட்டார்கள்.



* ஓபராய்

விவேக்கின் தந்தை சுரேஷ் ஓபராய், "நான் புனேவிற்கு ஆயுர்வேதம் பயிலச் சென்றேன். அதற்குள் இப்படி ஒரு கலாட்டாவா?' என்று அரக்கப் பரக்க ஓடி வந்திருக்கிறார். 'சல்மானின் தந்தை சலீம் எங்கள் குடும்ப நண்பர். விவேக் அவர் காலைத் தொட்டு ஆசீர்வாதம் வாங்கியிருக்கிறான். இது அண்ணன் தம்பிக்குள் சண்டை போல. இதைப் போய் பெரிது படுத்துவதாவது?" என்று கோபப் பட்டிருக்கிறார்.

இது இப்படியிருக்க, 'காகி' ஷூட்டிங்கில், படத்தில் உபயோகப்பட்ட ஜீப் ஒன்று ஐஸ்வர்யா ராய் அமர்ந்து கொண்டிருந்த நாற்காலியை நோக்கிப் பாய, தலை குப்புற விழுந்த 'ராய்'க்கு இடக்காலில் 'ஹேர்லைன்' ஃப்ராக்சர்! ம்ம்... தன் இதயத்தை ஒடித்த காதலியின் காலை ஒடிக்க ஜீப்பை சல்மான் ஏவியதாக, இன்னும் புரளி கிளம்பவில்லை!

- ஜெ.ஆர்.




"புது முகம்
வேணும்னேன்.
அதுக்காக இப்படியா?"

"புத்தம் புதிய காப்பின்னு விளம்பரப்படுத்தியிருந்தாங்க. ஃபிலிம் இவ்வளவு பழசா இருக்கே!"

"தியேட்டர் கான்டீன்ல புதுப்பால், புது டிகாக்ஷனோட காப்பி போடறாங்க. அதைச் சொல்லியிருப்பாங்க."





"புதுசா மார்க்கெட்டிலே டூத்பிரஷ் - கம் - டூத் பேஸ்ட்னு வந்திருக்கறதா அறிவிச்சு ஏமாத்திட்டாங்க."

"ஏன், உள்ள என்ன இருந்தது?"

"எல்லாம் சின்னதா நறுக்கின ஆலங்குச்சி."

"தர்ட் அம்பயர் போர்டிலே, சிவப்பு, பச்சை தவிர வேறொரு பல்பும் இருக்குதே அது என்ன?"

"ஆரஞ்ச் பல்பு. தர்ட் அம்பயருக்கும் சரியா தெரியல்லேன்னா அது எரியுமாம்!"



# புதுசா சிரிங்க...



"அதென்ன பெண்களுக்குப் புதுசா ஏதோ தடுப்பூசி வந்திருக்காமே டாக்டர்?"

"ஆமாம். இதைப் போட்டுக்கிட்டா அப்புறம் எந்த மெகாசீரியலைப் பாத்தாலும் அழுகையே வராதாம்."

குல்லூ

"நான் எப்பவுமே இந்தப் புது செருப்பை போட்டுக்கிட்டு கல்யாணங்களுக்குப் போக மாட்டேன்!"

"தொலைஞ்சிடுமோங்கிற பயமா?"

"செருப்புக்குச் சொந்தக்காரர் கண்டுபிடிச்சுடுவாரோங்கிற பயம்."



* ஆராதனை

# க்ளீவ்லேண்டில்



* குழந்தைகளும் உண்டு...

ஒரு சர்ச்சில்தான் நடந்தது அந்த முதல் தியாகராஜ ஆராதனை கச்சேரி! வருடம் 1978. இடம்: அமெரிக்காவில், ஒஹையோ மாநிலத்தில் உள்ள க்ளீவ்லேண்ட் நகரம். பஞ்சரத்ன கீர்த்தனைகள் கோஷ்டி கானமாக இசைக்கப்பட்டன. அதைத் தொடர்ந்துதான் கச்சேரிகள். ஆசைக்கு நாலு பேர் சேர்ந்து ஆரம்பித்த இந்த ஆராதனை, ஆண்டு தோறும் வளர்ந்து, சென்ற வருடம் வெள்ளி விழா கொண்டாடி விட்டது!

இந்த வருடம்..? 'வெள்ளிவிழா ப்ளஸ் ஒன்' என்பதோடு கல்கி பத்திரிகையின் வைர விழாவையும் இந்த க்ளீவ்லேண்ட்காரர்கள் கொண்டாடுகிறார்கள். (கொஞ்சம் தாமதம் தான். அதனாலென்ன? தியாகய்யர் கீர்த்தனைகள் எத்தனையெத்தனை தாளத்தோடு ஆரம்பிக்காமல் தள்ளி ஆரம்பிக்கின்றன! கேட்க அழகாய்த்தானே இருக்கு!)

தியாகராஜர் இருந்திருந்தால் சந்தோஷம் தாங்காமல், சங்கீதத்தையும் பத்திரிகையையும் இணைத்த ரகுகுல திலகனுக்குப் பந்துவராளியிலோ பிரதாபவராளியிலோ ஒரு போற்றி பாடி மகிழ்ந்திருப்பார்... அந்த வம்புக்கெல்லாம் போய் சங்கீத தேவதையைச் சோதனைக்கு உள்ளாக்க விரும்பாத நாம், அடுத்தபடியாகச் செய்யக் கூடியதைச் செய்யவிருக்கிறோம்....

'கட்டு மூட்டையை' என்று மூச்சைப் பிடித்துக் கிளம்பி விட்டோம் க்ளீவ்

* ஆரம்ப நாட்களில்...



வேண்டுக்கு!

அங்கே நடக்கப் போகும் (ஏப்ரல் 19 முதல் 27 வரை) இசைத் திருவிழாவின் சங்கீத சங்கதிகளை சுருதி சுத்தமாகவும் துக்கடா சம்பவங்களை காரம், மணம், குணமுடனும் சுடச் சுட கல்கி வாசகர்களுக்கு வழங்கப் போகிறோம். விழா தேதிகளில் கல்கி ஆன்லைன் கிளிக் செய்தால், சூப்பர் ஃபாஸ்ட் விமர்சனங்கள், செய்திகள், பேட்டிகள், வாசிக்கலாம். சங்கீதம் பிடித்தவர்களுக்கு இந்த அனுபவம் ரொம்பப் பிடிக்கும்; சங்கீதம் பிடிக்காதவர்களுக்கு அதைவிடப் பிடிக்கும்!

(ஆசிரியர்)





• சேர்ந்திசை...

# கல்கி

க்ளீவ்லேண்ட் ஆராதனை குறித்த சில சுவையான செய்திகள், கண்ணோட்டங்கள்:

வருடம் தவறாது க்ளீவ்லேண்ட் ஆராதனைக்குச் சென்று வரும் அமெரிக்க வாழ் இந்தியர் ராவ். "ஆராதனைக்கு முந்தைய தினம் இசைப் போட்டி நடக்கும். ஐந்து வயது முதல் பதினைந்து வயது வரையிலான குழந்தைகள். – இரண்டு பிரிவுகளாகப் பிரித்துப் (5-10, 10-15) போட்டி நடத்துவார்கள். இரவு பத்து மணிவரை போட்டி நடக்கும். படு சீரியஸாக பரீட்சைக்குத் தயார் செய்வது போல் தயாரித்துக் கொண்டு வருவார்கள். குழந்தைகள்...'' என்கிறார்.

"ஆராதனைக்குப் பிறகு, இசைவிழா போல் சென்னை நட்சத்திரங்கள் அத்தனை பேரும் பங்கேற்கும் கச்சேரிகள் அணிவகுப்பு. பெரும்பாலான நிகழ்ச்சிகளுக்கு அனுமதி இலவசம்; உணவும் இலவசமாகவே வழங்கப்படுகிறது.

"க்ளீவ்லேண்ட் சுந்தரம், பாலு ஆகியோர் இந்த நிகழ்ச்சிக்காக ஆரம்பம் முதல் உழைத்து வருகிறார்கள். இப்போதெல்லாம் நிகழ்ச்சி பல்கலைக் கழக வளாகத்தில் நடக்கிறது. இந்தியக் கலைஞர்களுள் மூத்த சாதனையாளர்களுக்கு விருது வழங்கும் நிகழ்ச்சியும் இப்போது நடைபெற்று வருகிறது. டி.முக்தா, ஆர்.கே.ஸ்ரீகண்டன் போன்றவர்கள் கௌரவிக்கப்பட்டிருக்கிறார்கள்" என்று கூறும் ராவ், இரண்டு முறை இசை விழாவின்போது 'ஃபயர் அலாரம்' அடித்ததையும், அந்தப் போலி எச்சரிக்கைக்கு இரண்டு வாண்டுகளின் விஷமமே காரணம் என பின்னர் கண்டு பிடித்ததையும் நினைவு கூர்கிறார்!

க்ளீவ்லேண்ட் தியாகராஜ ஆராதனை ஈஸ்டர் விடுமுறையின்போது நடக்கும் என்பதால், அமெரிக்க வாழ் இந்தியர்கள் அனேகம் பேர் குழந்தை குட்டியோடு ஆஜர் ஆகிவிடுவார்கள். பத்து நாள் கல்யாணம் போல், சமையல் சாப்பாடு சகலமும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். ரசிகர்களே வாலன்டியர்களாகிப் பொறுப்பெடுத்துக் கொண்டு சமைக்கவும் பரிமாறவும் சுத்தம் செய்யவும் உதவுவார்கள்.



• சமையல், சாப்பாடு...

"இந்தியாவிலிருந்து வரும் கலைஞர்கள்

நீங்கள் குளிக்கப் போகிறீர்கள். குளியலறையில் குழாயில் கசிவு. பிளம்பர் வந்து சரி பார்க்க வேண்டும். பிளம்பரைப் பிடிப்பது எப்படி?

வீட்டில் உங்கள் உறவுக்காரப் பையன் வந்திருக்கிறான். பீட்ஸா வேண்டும் என்கிறான். எங்கே கிடைக்கும்?

சர்வரோக நிவாரணி போல, இருக்கவே இருக்கிறது ஓர் அமைப்பு. 1947ஐ டயல் செய்தால் போதும். விவரங்களை எல்லாம் விரல் நுனியில் வைத்திருக்கிறார்கள். கம்ப்யூட்டரின் கீ போர்டுகளில் விளையாடி, உங்களுக்கான தகவல்களை உடனே தெரிவிக்கும் இந்த அமைப்பு.

"ஜனவரி இருபத்தி நான்காம் ஆம் தேதி இந்தச் சேவையை ஆரம்பித்தோம். இருபத்தி நான்கு மணி நேரமும் இந்தச் சேவை கிடைக்கும்!" என்கிறார் சென்னைக் கிளையின் அதிகாரி பரத்குமார்.



• பரத்குமார்

ஏன் 1947...?

1947 ஆம் வருடம் நமக்கு சுதந்தரம் கிடைத்த ஆண்டு அல்லவா? யாரும் அதை எளிதில் மறக்க முடியாது என்பதால் அந்த எண்ணைத் தேர்ந்தெடுத்தாராம்.

ஏழு வருடங்களாக, 'ஜஸ்ட் எ டயல்' சேவையைச் செய்து வந்த ஏ அன்ட் எம் கம்யூனிகேஷன்ஸ் நிறுவனம்தான் இந்த 1947 சர்வீஸையும் சென்னையில் அறிமுகப்படுத்தியிருக்கிறது.

'எந்தத் தியேட்டரில் என்ன படத்துக்கு டிக்கட் கிடைக்கும்? புதிதாக வரப் போகிற மெகா டி.வி சீரியல் என்ன? - இதெல்லாம் தான் எங்களுக்குத் தெரியணும்' என்றால் கூட, உங்களுக்குக் கை கொடுக்க 1947 ரெடி!

— சித்தார்த்

---

தங்குவதற்கு 'கம்ஃபர்ட் இன்' என்ற ஹோட்டலில் இடம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். இதற்கு ஒரு வருடம் முன்பே புக்கிங் செய்து விடுவார்கள்" என்கிறார் திருமதி ராவ்.

ராவ் தம்பதி க்ளீவ்லேண்டிலிருந்து இரண்டு மணி நேர கார் பயண தூரத்திலுள்ள கொலம்பஸ் நகரில் வசிக்கிறார்கள்.

'நாஸாவில் விஞ்ஞானியாகப் பணியாற்றி ஓய்வுபெற்ற வி.கே.விச்வநாதன் மற்றொரு க்ளீவ்லேண்ட் ஆராதனை ரசிகர். இவர் ஒரு நியாயமான கேள்வியை எழுப்புகிறார்: "தமிழ் நாட்டிலிருந்து அமெரிக்கா வரும் இசைக் கலைஞர்கள் இங்கே இருக்கும் தமிழர்கள் முன்னிலையில் மட்டும் பாடினால் எப்படி...? அமெரிக்க ரசிகர்களை நம் இசைக்கு உருவாக்க வேண்டும்; பல்கலைக் கழகங்களில் இசைத் துறை மாணவர்களுக்குப் பாடிக் காட்டி நம் இசையின் பெருமைகளை உணரச் செய்ய வேண்டும்" என்கிறார்.

"மிருதங்கக் கலைஞர் திருச்சி சங்கரன், ஃப்ளூட் டி. விச்வநாதன், பாடகர் கே.வி. நாராயணசுவாமி போன்றோர் இதை ஓரளவுக்குச் செய்தார்கள். முன்பு லால்குடி, ரமணி, ராம்நாட் ராகவன், திருச்சி சங்கரன் ஆகியோர் செய்த கச்சேரிகளில் பாதிக்குப் பாதி அமெரிக்கப் பார்வையாளர்கள். பெரும்பாலான கச்சேரிகள் பல்கலைக் கழகங்களில்தான் நடந்தன. சான்பிரான் ஸிஸ்கோ, யூனியன் சதுக்கத்தில் ஐம்பதாயிரம் பேர் ஷேக் சின்ன மௌலானாவின் நாதஸ்வர கச்சேரியைக் கேட்டார்கள். அப்படி ஏற்பாடு செய்திருந்தார் பேராசிரியர் பாப் பிரவுன்...

"இப்போது தமிழகத்திலிருந்து வரும் கலைஞர்களுக்கும் இது போன்ற வாய்ப்புகளை ஏற்படுத்தித் தரவேண்டும். சுந்தரமும் பாலுவும் மனம் வைத்தால் முடியும்" என்கிறார் வி.கே.வி.

— சாருகேசி

## 24 மணி நேரத்தில் இன்டர்நெட் - ஈ-மெயில் - மா. ஆண்டோ பீட்டர்

இன்டர்நெட் தேடல், ஈ-மெயில் அனுப்புதல் - பெறுதல், பயனுள்ள பல வலைத் தளங்களின் வரிசை, என மாணவருக்கு உதவக் கூடிய பல அரிய தகவல்களை அனுபவ பூர்வமாக அறிய, எளிய வழிமுறைகளைக் கூறும் நூல்.



கற்பகம் புத்தகாலயம், 50/18, ராஜா பாதர் தெரு, தி.நகர், சென்னை - 60 017 விலை ரூ.30/-

## 1000 ஒரு பக்கக் கட்டுரைகள் - லேனா தமிழ்வாணன்

'வாழ்க்கை என்றால் ஆயிரமிருக்கும்' என்ற கவியரசின் வரிகளில் கூறியபடி சாதாரண மனித வாழ்வில் வரக்கூடிய ஆயிரம் விதமான சந்தர்ப்ப சூழ்நிலைகளும் அவற்றை எப்படிக் கையாண்டால் வாழ்வில் வெற்றி பெற முடியும் என்ற சிந்தனைகளின் தொகுப்பு.



மணிமேகலை பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 600 017 விலை ரூ.499/-.

## சௌந்தர்யலஹரி - அம்பிகையின் அழகு வெள்ளம் - தமிழ்க்கவிதையாக்கம் - ஜி. சுப்பிரமணியன்

ஆதி சங்கரரின் 'சௌந்தர்யலஹரி'யை தமிழ்க் கவிதைகளாக வடித்து, சாக்தர்களுக்கு மட்டுமின்றி இறையுணர்வுடைய அனைவருக்குமே பயன் பெற வடிக்கப்பட்ட பக்தி இலக்கியம். பொருளுணர்ந்த உபாசனையின் மூலமாக நலன்களை அடைய வழிகாட்டும் நூல்.



மீனா பதிப்பகம், சி3/74, முதல் குறுக்குத் தெரு, வெங்கடேசா நகர் விரிவு - 2, சென்னை - 600 092. விலை ரூ.70/-

## அம்மி - வைகைச் செல்வி

கவிதைகளுக்குக் காதல் வந்தால் கூடவே கவிதையும் வரும். ஆனால் காதலனிடம் சுய நலம் கலந்ததால் 'உன் பந்தக்கால் வேண்டாம், என் சொந்தக் கால் போதுமென்'ச் சீறி, காதலையே உடைத்தெறிகிறார் இந்தக் கவி. அநீதியும், மோதலும் கூடக் கவிதைக்குக் கருப்பொருட்கள்தான், என்னும் வேகம் மிகுந்த கவிதைகளின் தொகுப்பு.




காவ்யா 14, முதல் குறுக்கு வீதி, டிரஸ்ட் புரம், சென்னை - 600 024. விலை ரூ.40

## கி. ராஜநாராயணன் - எழுத்துலகம் - பிரேம் ரமேஷ்

கி.ரா. அறிமுகம் அவசியமற்ற இந்த எழுத்துக்களின் பின்னால் ஒரு நிலம், ஒரு இனம், ஒரு காலம், ஒரு சமூகம், ஒரு தொன்மை, அத்தனையையும் கூறும் திறன் இருக்கிறது. எழுத்துலகில் கி.ரா.வின் படைப்புகள் சாதித்தவையும், பாதித்தவையும் பற்றிய தொகுப்பு.



கலைஞன் பதிப்பகம், 10, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17 விலை ரூ.100/-.

## வாழ்வில் வெற்றியும் மகிழ்ச்சியும் பெற - அருட்தந்தை ச. இன்னாசி முத்து

வாழ்க்கையென்பது போராட்டம் மிகுந்ததானாலும் அது கடவுளால் அளிக்கப்பட்ட வரம். தடைகளும் துன்பங்களும் நிறைந்திருந்தாலும் துவளாமல் நம்பிக்கையைப் பெறும் வழிகளையும் வாய்ப்புக்களைப் பெறும் வழிகளையும் பற்றிக் கூறி முன்னேற்றப் பாதைக்கு வழி காட்டும் நூல்.




வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017 விலை ரூ.50/-

# 1

பிரபஞ்சன்

**காட்சி 1**

**அதிகாலை. வீடும் தெருவும்**

**பாத்திரங்கள்: கண்ணன் (26 வயது), டீக் கடைப் பையன் (18 வயது) கோலம் போடும் பெண் (20 - 22 வயது)**

விடிந்தும் விடியாத பொழுது.

மொட்டை மாடியின் கட்டைச் சுவரில் சாய்ந்துகொண்டு தெருவில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான், கண்ணன். மாடுகள், பால் தர உணவு விடுதிகளை நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்றன. பின்னால், ஒருவர் ஓட்டிச் செல்கிறார். அவர் கையில் நீண்ட பால் குவளை. சைக்கிளில் ஒரு நபர், காலைப் பேப்பர்களை எடுத்துச் செல்கிறார். கீழிருந்து , ஒரு காலைப் பத்திரிகையைச் சுருட்டி மாடியை நோக்கி வீசுகிறார். அது பொத் தென்று மாடியில் வந்து விழ்கிறது. கண்ணன், கவனம் செலுத்தவில்லை. எதிர்வீட்டுக் கதவு திறக்கிறது. மின் வெளிச்சம், ஒரு வேட்டியை விரித்தாற்போலத் தெருவில் விழ்கிறது.



ஒரு இளம் பெண், கையில் விளக்குமாற்றுடன் வெளியே வந்து தெருவைச் சுத்தம் செய்கிறாள்.

பின்னால், டீக் குவளையுடன், டீக் கடைப் பையன் தோன்றுகிறான்.

டீ பையன், டீக் குவளையைக் கொடுத்து விட்டு, பத்திரிகையை எடுத்துப் புரட்டுகிறான். கண்ணன் டீயை அருந்துகிறான்.

**டீ பையன்:** காவேரியில தண்ணி வருமா சார்?

**கண்ணன்:** *(டீ கிளாஸை உயர்த்திக் காட்டி)* இது என்ன? இப்பவே, தண்ணியில சர்க்கரையைப் போட்டு டீன்னுதான் கொடுக்கிறீங்க?

**டீ பையன்:** பாரதிராஜா சார், இவளோ பெரிய கூட்டம் போட்டிருக்காரு... தண்ணி உட்டுறுவாங்க சார்.

*(ஆச்சர்யமும் ஆர்த்தமும் தோன்ற)*

விமல் சாரும் மம்ரன் மேடமும் ஒரே காரில் நெய்வேலி போனாங்களாம் சார்...

*(ஒரு விநாடிக்குப் பிறகு)* உண்மையா சார்?

**கண்ணன்:** உண்மையா இருந்தா உனக்கென்ன நஷ்டம்? இல்லன்னா, என்ன பண்ணப் போற?

கண்ணன் திரும்பித் தெருவைப் பார்க்கிறான். இப்போது அந்தப் பெண், அழகிய கோலத்தை முடிக்கும் நிலையில் இருக்கிறாள். தன்னை மறந்து, அவள் கோலத்தில் லயித்திருக்கிறாள். பெரும் சத்தத்துடன் ஒரு ஆட்டோ, விரைந்து வருகிறது. திடுக்கிட்டு ஒதுங்கி நிற்கிறாள் அவள். கோலத்தில் ஒரு பகுதியை அழித்துவிட்டு ஆட்டோ சென்று விடுகிறது. திகைத்துப் போய் நிற்கிறாள் அவள். சோர்வுடன், கலைந்து போன கோலத்தை மீண்டும் போடுகிறாள்.

**காட்சி : 2**

**காலை - தெரு ஓட்டல் அல்லது டீக்கடை, பாத்திரங்கள்: பால்காரர் மாடு**

பால்காரர், சிறிய குப்பியிலிருந்து மருந்தை ஊசியில் ஏற்றிக் கொள்கிறார். அதை மாட்டுக்கு ஊசி மூலம் செலுத்துகிறார்.

ஒன்றிரண்டு பேர் டீ/ காபி குடித்துக் கொண்டிருக்



கிறார்கள். பால்காரர் பால் கறக்கிறார்.

தெருவில் ஜன நடமாட்டம் தொடங்கி இருக்கிறது.

காட்சி 3

**காலம்:** இலேசான வெயில் வந்து விட்ட நேரம்.

**பாத்திரங்கள்:** கண்ணன், சுசிலா அக்கா

சுசிலா, துவைத்த வாளியுடன் படியேறி மாடிக்கு வருகிறாள். கண்ணன், சுவரில் மாட்டிய கண்ணாடியின் முன் முக சவரம் செய்து கொண்டிருக்கிறான்... புடைவையை உதறிக் கொடியில் காயப் போடுகிறாள் சுசிலா.

**சுசிலா:** ராத்திரி ரொம்ப லேட்டா வந்தே போல...



''நான் வாழ்க்கையில் ரொம்பவும் அடிப்பட்டவன்யா.''
''உங்க சம்சாரத்துக்கு 'கராத்தே' தெரியும்னு சொன்னப்பவே நினைச்சேன்!''
- எம். அசோக்ராஜா

**கண்ணன்:** (திரும்பி தலையசைத்து) பதினொன்றரை

**சுசிலா :** ஊர்லேந்து உங்க அம்மா, ஃபோன் பண்ணாங்கப்பா....

**கண்ணன்:** (திரும்பி) என்னவாம்?

**சுசிலா :** வேற என்ன? புள்ள ஃபோன் பேசலை... எப்படி இருக்கான்... ஓட்டல்ல சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கறான்... கல்யாணம் பண்ணிக்கிட்டா என்ன கேடு? அவ ஒரு பக்கம் இருந்துட்டுப் போறா... இவன் சம்பாதிச்சுதான் எங்களுக்குக் கொடுக்கணுமாக்கும்.... அதேதான்.

**கண்ணன்:** *(கண்ணாடியைப் பார்த்து சவரம் செய்தபடி)* வீட்டுச் சாப்பாட்டுக்குத் தான் பொண்டாட்டின்னா, ஒரு சமையல்காரனைக் கட்டி வைக்கச் சொல்லுங்கக்கா...
*(சுசிலா சிரிக்கிறாள்)*

**சுசிலா:** பெத்தவங்க கவலை, நீயே தகப்பனாவும் போதுதான் தெரியும்.

**கண்ணன்:** *(முகம் கழுவியபடி)*
எனக்கு ஒன்று புரியலை... கல்யாணம் ஆகி, ஆறு மாசத்துலே, உங்களை உங்க புருஷன், வீட்டுக்கு அனுப்பிட்டார், அப்புறமும், கல்யாணம் கல்யாணம்னு எதுக்கு அடிச்சுக்கிறீங்க.

**சுசிலா:** ஏம்பா, உலகத்துக்கே நான் ஒரு உதாரணமா? ஆயிரத்துல ஒன்று தோத்துப் போவும்தான். அதுனால, கல்யாணமே தப்பாயிடுமா? எத்தனை காலம், எங்களுக்கு வீட்டு வாடகை கொடுத்துகிட்டு, ஓட்டல் ஓட்டலா தின்னுட்டு அலைவே? உங்க அப்பா, இங்கயே வீடு வாங்கி வைச்சு, கல்யாணமும் பண்ணி வைக்கிறேங்கறார்... செலவுக்குப் பணமும் தர்றேங்கறார், கர்ணப் பிரபு, ஜாலியா, வாழ்க்கையை அனுபவிப்பியா, அசடு...
*(கண்ணன் பல் தேய்க்கிறான்.)*

**கண்ணன்:** இன்னிக்கு ஒரு இன்டர்வியூவுக்குப் போறேங்கா.

**சுசிலா:** இன்டர்வியூ பண்ணறவங்க எல்லாம் முட்டாப் பயலுகன்னு தோணிடும். மத்தியானம் பீர் அடிச்சுட்டு பீச்சுக்குப் போயிடுவே... *(காலி வாளியை எடுத்துக் கொண்டு நகர்கிறாள்)*

**கண்ணன்:** சாபமாக்கா, இது?

**(சிரித்தபடி) சுசிலா:** சேச்சே... இதுவாவது தகையட்டும். Best of luck...

**கண்ணன்:** தேங்க் யூ... *(சுசிலா, பத்திரிகையை எடுத்துக் கொண்டு கீழே இறங்குகிறாள். படி இறங்கியபடி...)*

**சுசிலா:** பாவம்பா இந்த சிந்துபாத். ஒரு மனுசனுக்கு இத்தனைக் கஷ்டம் வரப்படாது.... ஆங்... கண்ணா... பைப்பில தண்ணி நிந்துடப் போறது... சீக்கிரம் குளிச்சிட்டுக் கிளம்பு.

**காட்சி 4**

**காலை 9 மணி. தெரு _ சுள்ளென்று வெயில்.**

**பாத்திரங்கள்: கீதா, கண்ணன், டைப்பிஸ்ட், ஆண்கள், பெண்கள்**

*கீதா, அவசரமாக நடந்து வருகிறாள். பஸ் நிறுத்தத்துக்கு வந்து சேருகிறாள். பையிலிருந்த கைக்குட்டையை எடுத்து நெற்றியை ஒற்றிக் கொள்கிறாள். காத்திருக்கும் மக்கள் வெயிலில் நிற்க, பஸ் நிறுத்தத்தில் ஒரு மாடு படுத்திருக்கிறது. அதன் முகத்தில், ஒரு ஞானியின் அமைதி, நிதானம். கீதா அந்த மாட்டைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். பஸ் வருகிறது.*

*கீதா தெருவில் நடந்து ஒரு படியில் ஏறுகிறாள். பையிலிருந்து ஒரு கவரை எடுத்துப் பிரித்து, அந்த இடம்தான் என்பதை உறுதிப் படுத்திக் கொள்கிறாள். அங்கிருந்த ஒரு பெண்ணிடம் கவரைக் கொடுக்கிறாள். அவள், ஹாலில் காத்திருக்கச் சொல்கிறாள். அங்கு பெண்களும், ஆண்களுமாகச் சிலர் காத்திருக்கிறார்கள். உட்காராமல், ஜன்னல் ஓரம் நின்றபடி, வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான் கண்ணன்.*

அட்டெண்டர் மாதிரி ஒருவர், ஒவ்வொருவராக அழைத்துக் கொண்டு போகிறார்.

கீதா இருமுகிறாள். எழுந்து டைப்பிஸ்டிடம் சென்று நிற்கிறாள்.

**கீதா:** குடிக்கத் தண்ணீர் கிடைக்குமா...?

*(டைப்பிஸ்ட் ஒருகணம் அவளைப் பார்த்துவிட்டு, தன் பையில் இருந்து ஒரு சிறிய தண்ணீர் பாட்டிலை எடுக்கிறான் கீதாவிடம் நீட்டுகிறான்.)*

**டைப்பிஸ்ட்:** கொஞ்சமா குடிங்க... இன்னிக்குப் பூரா எனக்கு அதுதான். கீதா அவனைப் பார்த்தபடி ஒருமுறை குடித்துவிட்டுத் தருகிறாள்.

**கீதா:** தேங்க்ஸ்

டைப்பிஸ்ட்: *(எங்கோ பார்த்தபடி)* மென்ஷன் நாட். ப்ளீஸ்.

கீதா திரும்பி வந்து தன் இடத்தில் அமர்ந்து பையிலிருந்து ஃபைலை எடுத்து வைத்துக் கொள்கிறாள். டைப்பிஸ்ட் ஒரு தாளை எடுத்து மெஷினில் பொருத்தி டைப் செய்கிறான். அவன் டிரேயில் நாலு டைப் செய்த காகிதங்கள் சேருகின்றன.

கீதாவும், கண்ணனும் படி வழியாகக் கீழே இறங்குகிறார்கள். கண்ணன் கீதாவைப் பார்க்கிறான்.

**கண்ணன்:** ஹலோ

**கீதா:** ஹலோ

**கண்ணன்:** உங்களுக்கு வேலை கிடைச்சுடுமா?

**கீதா:** அப்படித் தோணலை... என்ன இன்டர்வியூ. ஒரு நிமிஷம் கூட உக்கார வைக்கலை. கேள்வியும் கேட்கலை. செர்டிபிகேட்டைப் பார்த்தாங்க... லெட்டர் வரும்னு சொல்றாங்க... உங்களுக்கு நம்பிக்கை இருக்கா...?

**கண்ணன்:** இல்லை:

பஸ் நிறுத்தத்துக்கு வருகிறார்கள்: கீதா சுற்று முற்றும் பார்க்கிறாள்.

**கீதா:** இங்க மாடு இல்லையே...

**கண்ணன்:** உம்...?

**கீதா:** எங்க ஏரியா பஸ் ஸ்டாப்பில மாடு படுத்திருக்கும்.

**கண்ணன்:** மாடு படுத்திருக்குதே... மலை போல மாடு படுத்திருக்குதே...

**கீதா:** என்ன?

**கண்ணன்:** நந்தன் பார்வையை மறைச்சுக்கிட்டு ஒரு மாடு படுத்துக் கிடந்திருக்குது. அப்போ... *(மௌனம்)*

இப்போ நிறைய...



**கீதா:** நீங்க கவிஞரா?

**கண்ணன்:** சேச்சே... நம்ம ஊர்ல, 21 கவிச் சக்ரவர்த்திகள், 37 கவிஞர்கள், 416 கவிச் சிற்றரசர்கள் ஏற்கெனவே இருக்காங்க. அது போதும்.

கீதா புன்னகை செய்கிறாள். ஒரு ஆட்டோவை நிறுத்துகிறாள்.

**கீதா:** பை...

அவள் போய்விடுகிறாள்.

தனித்து விடப்படுகிறான் கண்ணன்.

காட்சி : 5

**கடும் பகல் / தெரு**

கண்ணன் நடந்து தன் தெருவில் திரும்பி வீட்டுப் படியேறுகிறான்.

திரும்பி அந்தக் கோலத்தைப் பார்க்கிறான். சிதைந்து போயிருக்கிறது கோலம்... மனிதர்கள், வாகனங்கள் சிதைத்து இருக்கிறது அந்தக் கோலத்தை. அவன், வெளிப்பக்கம் இருக்கும் தன் மாடி அறைக் கதவைத் திறக்கிறான். ஒரு மாடு, சுவர் போஸ்டரைத் தின்று கொண்டிருக்கிறது.

*(தொடரும்)*

# கதர் ஃபேஷன்!

கைத்தறி சேலைகளுக்கு இளசுகள் மத்தியில் மவுசு கூடியதைப் பார்த்தோ என்னவோ, மத்திய அரசின் அங்கமான கதர் மற்றும் கிராமப்புறத் தொழில் கழகம், கதரைப் பிரபலப்படுத்த ஒரு ஃபேஷன் ஷோ நடத்தியது சென்னையில். கற்பனைக்கு வானமே எல்லை என்பது கதருக்குப் பொருந்தும் போல! பாரம்பரிய அழகா? மாடர்னா? எதுவுமே கதரில் சாத்தியம் என்பதை நிரூபித்தன கேட்வாக் வந்த இளவட்டங்களின் ஆடைகள்!

- எஸ்.எம்

படங்கள்: ஸ்ரீஹரி















“ புதிய வார்ப்புகள், அலைகள் ஓய்வதில்லை போன்ற தலைப்புகளில் என்னைப் பேசச் சொல்லி மகிழ்வார் வைகோ. ”



# சம்பத் என்பதே பேச்சு!

இலங்கைப் பிரச்னை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த 1984ம் வருடம். குமரி மாவட்டம் ஆற்றூர் என்ற இடத்தில் திமுக கூட்டம். முக்கியப் பேச்சாளர் போலீஸ் கண்ணன். ஆனால் ஏதோ காரணங்களால் அவரால் அன்று வர முடியவில்லை. பதற்றப்பட்டுப் போனார்கள் கட்சிக்காரர்கள். 'என்ன செய்வது?' என்று திகைத்து நின்றபோதுதான் யாரோ ஒரு தொண்டர் "மணக்காவிளை சம்பத் என்றொரு இளைஞர் பேசுகிறார். அவரை ஏற்பாடு செய்யலாமே!" என்று சொல்ல, செய்தி போய் ஆற்றூர் பொதுக் கூட்டத்தில் பேசினார் சம்பத். அவர் பேசிய இரண்டு மணி நேரமும் கூட்டம் ஆடாமல், அசையாமல் மெய் மறந்து நின்றது. அவ்வப்போது நகைச்சுவை வெடிகள் வேறு. சம்பத்தின் மேடைப் பேச்சு வன்மை, மாவட்டம் முழுவதும் பரவி, அது மாநிலமெங்கும் வியாபிக்க, தி.மு.க.வில் சம்பத் நட்சத்திரப் பேச்சாளர் ஆகிவிட்டார்.

ஆற்றூரில் துவங்கிய அவரது பேச்சு தமிழகமெங்கும் பட்டி, தொட்டிகளில் எதிரொலித்து இன்று ஆயிரக்கணக்கான மேடைகளில் பேசி முடித்து விட்டார். அரசியல் கட்சிகளில் பல்வேறு மேடைப் பேச்சாளர்கள் இருந்தாலும் இன்று இவர்தான் சூப்பர் ஸ்டார்.

தற்போது ம.தி.மு.க.வின் ஆஸ்தான பேச்சாளராகவும் இளைய தலைவராகவும் உருவெடுத்திருக்கும் சம்பத்தை அரசியல் எதிரிகள் தாக்க முயன்ற சம்பவங்கள் ஏராளம்.

திராவிடப் பற்று நிறைந்த சம்பத்தின் தந்தை, தினசரி பேப்பர்களைச் சம்பத் படிக்கக் கேட்பார். பிசிறில்லாமல் சிராகப் பேசும் பயிற்சி ஆறேழு வயதிலேயே சம்பத்துக்குக் கிடைத்து விட்டது. மளிகை கடை நடத்தி வந்ததால் பல்வேறு விஷயங்களில் பொதுமக்களின் கருத்தைத் தெரிந்து கொள்

ளும் வாய்ப்பு ஏற்பட்டது. கல்லூரியில் படிக்கும்போது மாநிலம் முழுதும் சென்று பேச்சுப் போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்றார். "மூன்று வயதிலேயே என்னை ஊக்குவித்தவர் எனது பள்ளி ஆசிரியை எமிலி என்றாலும், என் ஆதர்ச பேச்சாளர் வைகோதான்" என்கிறார்.

எமர்ஜென்ஸி முடிந்த நிலையில் 1977ம் வருடம் நெல்லையில் நடந்த ஒரு கூட்டத்தில் முதன்முதலாக வைகோ பேச்சைக் கேட்டார் சம்பத். அதன்பின் ஒரு போராட்டத்தில் கைது செய்யப்பட்டு வைகோவுடன் பாளையங்கோட்டை சிறையில் இருந்த போது, சம்பத்தின் பேச்சுக்கு மெருகு ஊட்டும் டிப்ஸ்களை வழங்கினார் வைகோ. 'புதிய வார்ப்புகள்; அலைகள் ஓய்வதில்லை' போன்ற தலைப்புகளில் ஜெயிலில் இவரைப் பேசச் சொல்லி, கேட்டு மகிழ்ந்தாராம் வை.கோ.

அரசியல் மேடைகள் மட்டுமல்லாமல், இலக்கிய மேடைகளிலும் வெளுத்துக் கட்டுகிறார். சென்ற ஆண்டு பத்து நாட்கள் சிலப்பதிகாரத் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தும் வாய்ப்பு கிடைத்தது. பாறைகளைத் தொட்டுத் தடவி சரிந்து வரும் நீரோடையை போலத் துவங்கும் பேச்சு, நேரம் ஆக ஆக, குற்றால அருவியாய், குமுறும் அலையாய் கொந்தளிக்கிறது. கேட்பவர் உணர்ச்சியின் விளிம்பில் நிற்குமளவுக்குப் பேச்சு மூளைக்குள் சென்று குடைகிறது. தமிழக அரசு இவர் மீது பதினொறு வழக்குகளைப் போட்டிருக்கிறதாம்.

வைகோ கைதுக்கு அப்புறம் ஒருநாள் கூட ஓய்வெடுக்காமல் மேடைகளில் முழங்கி வருகிறார் இவர். 'அரசியல் காழ்ப்புணர்வின் காரணமாக, மணக்கா விளையில் பல்லாண்டுகளாக இருந்த வீடு, கடையை, ஆக்கிரமிப்பு என்ற பெயரில் இடித்துத் தள்ளி விட்டார்கள். ஆனால் இதனாலெல்லாம் சோர்ந்து போய் விடவில்லை. வீடு இடிக்கப்பட்ட அன்றே ஒரு கூட்டத்தில் பேசினேன்.

உடை அணியும் பாணியில் மட்டுமல்லாமல், சம்பத்தின் பேச்சும் வை.கோ பாணிதான். ஒரு கூடுதல் பாயிண்ட் : சம்பத்தின் பேச்சில் ஆங்காங்கே நகைச்சுவைத் தூவல்கள். இப்போது வைகோ கைதுக்குப் பிறகு துண்டு எதுவுமின்றி வெறும் கறுப்புச் சட்டை மட்டும் அணிகிறார் 'குட்டி வைகோ' என்று செல்லமாக அழைக்கப்படும் சம்பத்!

**- கௌசி**

படம் : **ராஜன்**

# ஸ்ரீதர் யுகம்!

தமிழ் சினிமாவில் பாட்டு யுகம், வசன யுகம், நடிகர் யுகம், தொழில்நுட்ப யுகம் என்று நாலு கட்டங்கள் உண்டு. தொழில் நுட்ப யுகத்துக்கு துவக்கப்புள்ளி டைரக்டர் ஸ்ரீதர். தலைப்புகளிலேயே புதுமை புகுத்தியவர். அவரது தலைப்புகளைப் பாருங்கள். தேன் நிலவு, எதிர்பாராதது. கலைக்கோவில், காதலிக்க நேரமில்லை; நெஞ்சிருக்கும் வரை ஒரு கவிஞனால் மட்டுமே இது மாதிரி தலைப்புகளை வைக்க முடியும்.

ஒருமுறை அவர் படத்துக்குப் பாடல் எழுதப் போயிருந்த போது, தமது மனத்தில் நினைத்திருக்கும் ஒரு தலைப்பைச் சொன்னார். கேட்டு ஆச்சரியப்பட்டுப் போனேன். அந்தத் தலைப்பு : மொட்டு மலர்ந்தே தீரும்.

அந்தக் காலத்தில் ஸ்ரீதர் ஒரு விழாவில் பேசுகிறார் என்றால், கல்லூரி மாணவ, மாணவியர் கூட்டம் நிரம்பி வழியும். தமிழ்த் திரைப் படத்துறையைச் சேர்ந்த எவரிடமும், உங்களுக்குப் பிடித்த பத்து படங்களைப் பட்டிய விடுங்கள் என்றால், கண்டிப்பாக அதில் இடம் பெறும் படம் 'நெஞ்சில் ஓர் ஆலயம்'.

வணிக ரீதியில் ஸ்ரீதரின் படங்களில் வெற்றிப் படங்களும் உண்டு. தோல்விப் படங்களும் உண்டு. ஆனால், அவற்றை எல்லாம் மீறி, இயக்குனர் ஸ்ரீதர் சரித்திரம் படைத்திருக்கிறார்.



***டைரக்டர் ஸ்ரீதரின் 'திரும்பி பார்க்கிறேன்' நூல் வெளியீட்டு விழாவில் கவியரசு வைர முத்து.***

படம் : **யோகா**

---

'த்ரீரோசஸ்' படத்தில், ரம்பாவுடன் ஒரே ஒரு பாடலுக்கு நடனமாட வந்திருந்தார் இந்தி நாயகன் கோவிந்தா! "ரம்பா எனக்கு நல்ல தோழி. ஒரு டஜன் படங்களில் எனக்கு நாயகி. அந்த நட்பின் நிமித்தம், அவரது அழைப்பை ஏற்று தமிழில் ஆட வந்தேன்'' என்று தமக்கேயுரிய உடல்மொழியில்



• 'த்ரீரோசஸ்' - கோவிந்தா, ரம்பா

அபிநயித்துக் காட்டினார்.

மூன்று ரோஜாக்களில் ஜோதிகாவும், லைலாவும் கால்ஷீட் சொதப்பியதில் தட்டுத் தடுமாறிக் கிடந்த படக்குழு, கோவிந்தா வருகையை அடுத்து உற்சாகமாய்ப் பூசணிக்காய் உடைத்துப் படத்தை முடித்திருக்கிறது. படம் வந்த பிறகுதான் தெரியும் நிறம், திடம், மணம் எல்லாம் இருக்கிறதா என்று!

'காதல் அழிவதில்லை' படத்தில் கதாநாயகனாக தமது மகன் சிம்புவை அறிமுகப்படுத்தினார் டி.ஆர். படம் முழுக்க அப்பா பாணியில், சிம்பு அடுக்குமொழி வசனம் பேச, சீரியஸ் ஆன காட்சிகளில் கூட சிரிப்பலை! கூடவே, 'படம் தாங்க முடியலை' என்று காட்டமான விமர்சனங்கள். சிம்பு பார்த்தார், இனி அப்பா இயக்கத்திலிருந்து கொஞ்சம் விலகியிருக்கலாம் என்று முடிவு செய்து விட்டார் போலும். 'தம்' படத்தில் ஏ.வெங்கடேஷ் இயக்கத்தில் நடித்து படம் வெளியீட்டுக்குத் தயார். தெலுங்கில் 'இடியட்' என்ற பெயரிலும், கன்னடத்தில் 'அப்பு' என்ற பெயரிலும் சூப்பர் ஹிட்டாய் ஓடிய படத்தைத்தான் தமிழில் 'தம்' ஆக்கியிருக்கிறார்கள். இரண்டு மொழிகளிலும் கதாநாயகியாக நடித்த ரக்ஷிதாதான் தமிழிலும் கதாநாயகி. கன்னடத்தில் இருபத்து மூன்று

# மூச்சுத் திணறலில் கோடம்பாக்கம்!



• 'காஷ்மீர்' - கார்த்திக், சாருலதா

படங்களைத் தயாரித்த ராக்லைன் வெங்கடேஷ் முதன் முறையாக தமிழில் தயாரிப்பாளராகத் தடம் பதிக்கிறார். இயக்குனர், தயாரிப்பாளர் இரண்டு பேரின் பெயருமே வெங்கடேஷ்! படக்குழுவில் மூன்றாவதாய் யாரேனும் வெங்கடேஷ் இருக்கிறார்களா? அட, படத்தின் ஒளிப்பதிவாளர் பெயரும் வெங்கடேஷ்தான்!

இருபது படங்கள் வெளியானால் இரண்டு படங்கள் மட்டுமே வெற்றி பெறும் நிலையில்,

பெரும்பாலான தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர்கள் கடையைக் கட்டிக் கொண்டு போய்விட்டதில், கோடம்பாக்கமே மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிறது! இந்த நேரத்தில் ஆக்ஸிஜன் கொடுத்த மாதிரி தெலுங்குப் பட உலகின் மிகப்பெரிய தயாரிப்பு நிறுவனமான ராமோஜிராவின் உஷா கிரண் மூவீஸ் தமிழில் முதன் முறையாக ஒரு படம் தயாரிக்கிறது.

'இனிது இனிது, காதல் இனிது' என்று இனிய தமிழில் படத்திற்குப் பெயர் வைத்திருக்கிறார்கள்.

சென்னையில் பிறந்து வளர்ந்து, தெலுங்கில் முன்னணி ஹீரோவாக இருக்கும் ஜெய் ஆகாஸ் ஹீரோ. மௌனம் பேசியதே படத்தில் சின்ன பாத்திரத்தில் வந்து 'அசத்திய நேகா ஹீரோயின்!

படத்தின் இயக்குனர் ஷக்தி சிதம்பரம் உட்பட படம் முழுக்க இளைஞர் கூட்டணி இருப்பது தெரிகிறது. படத்தின் கதை? தெலுங்கில் வெள்ளிவிழா கண்ட 'ஆனந்தம்' படம்தான் தமிழில் 'காதல் இனிதாகி' இருக்கிறது. கொஞ்சம் கூட தெலுங்கு வாசனை இல்லாத காதல் கதை என்று அடித்துச் சொல்கிறார்கள். படத்தைப் பார்த்தபிறகு டயாபடிஸ் வராமல் இருந்தால் ஓ.கே!



* 'தம்'- சிம்பு, ரக்ஷிதா



* 'இனிது இனிது காதல் இனிது' - நேகா, ஜெய் ஆகாஸ்

**கா**ர்த்திக் தமிழ் சினிமாவில் இருக்கிறாரா இல்லையா என்ற சந்தேகம் எழும் அளவுக்கு இடைவெளி. பல்வேறு பிரச்னைகளில் தலையைக் கொடுத்து, கால்ஷீட் சொதப்பி, எல்லோரது வசவுகளையும் வாங்கிக் கட்டிக்கொண்டு மௌனமாகவே இருந்துவிட்டு, கார்த்திக் பழையபடி வீறுகொண்டு எழுந்து விட்டார். விட்ட இடத்தைப் பிடித்தே தீருவேன் என்ற உறுதியோடு ஒரு டஜன் படங்களில் ஒழுங்காக நடித்துக் கொண்டிருக்கிறாராம். அதில் ஒன்று 'காஷ்மீர்'. கிராமி விருதுகளைக் குறி வைக்கும் ஓர் இசைக் கலைஞன், பாகிஸ்தான் தீவிரவாதிகளின் சங்கேத பாஷைகளை, இசை ஒலிக் குறிப்புக்களோடு பொருத்திப்பார்த்து, தாய்நாட்டுக்கு எதிரான சதியைக் கண்டுபிடிப்பதுதான் கதையாம். இசை, பயங்கரவாதம் இரண்டையும் இணைக்கிற தில்லு, நம்ம ஆட்களுக்குத்தான் இருக்கு!

— ரவுண்ட்ஸ் பாய்




* மேடையில் இசைக்குழுவுடன் சகுந்தலா

"உலகெங்கிலும் பெண்களின் நிலை ஒன்றேதான். 'உரக்கப் பேசாதே. சிரிக்காதே. அனுசரணையா நடந்துக்க. பேசா மடந்தையா இரு. என்ன இன்னல் வந்தாலும் சகித்துக் கொள்..' அப்படிங்கற ரீதியில்தான் பெண்களுக்கு உபதேசம். இந்தியா மட்டுமல்ல, ஜப்பான், சீனா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளிலும் பெண்கள் ஒடுக்கப்படுகிறார்கள். அவளின் திறமைகள் வெளியே அறியப்படுவதில்லை. ஒரு பெண்ணிற்கே தன்னிடம் என்னென்ன திறமைகள் இருக்கிறது என்று தெரியாது. வெளியே சொல்ல கூச்சப் படுவாள். நம் வேத புராணத்தில் பரம விதூஷகிகள், படைப்பாளிகள் இருந்திருக்கிறார்கள். ஆனால் வெளிச்சத்திற்கு வரவில்லை. நான் ஒருமுறை வெளிநாடு போயிருந்த போது டீ.வி.யில் 'பெண் பாடலாசிரியர்கள் பற்றிய நிகழ்ச்சியைப் பார்த்தேன். அங்கும் இதே கதிதான். பெரிய பெரிய பெண் கம்போஸர்களைப் பற்றி மக்கள் தெரிந்திருக்கவில்லை. இதேபோல் நாமும் செய்தால் என்ன என்று தோன்றியது. அதன் விளைவுதான் இந்த 'விமன் கம்போஸர்' நிகழ்ச்சி...!"

சொல்பவர் புகழ் பெற்ற பாடகி, பத்திரிகையாளர், சமூக சிந்தனையாளர், நாவலாசிரியை, ஆய்வாளர்.... என நிறைய அடையாளங்கள் கொண்ட சகுந்தலா நரசிம்மன்.

கடந்த வாரம் பெங்களூரில் 'அனன்யா' சபாவில் சகுந்தலா தன் 'கான மாதூரி' இசைக் குழுவுடன் பெண் பாடலாசிரியர்களின் படைப்புகளைத் தேடிப் பிடித்து, தன் இனிய குரலில் இசைக் கச்சேரியுடன் லெக்சர் டெமோவும் நடத்தினார்.

ரிக் வேத காலத்து ரிஷி கன்னிகையான வாகம்பரிணி முதல் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்திலிருந்த கௌஹர் ஜான் வரை இருந்த பெண் கவிஞர்களின் வாழ்க்கை முறைகளைப் பற்றி விவரித்தார் சகுந்தலா. மீரா பாய், பஹினாபாய், லால்நேட், அக்க மகாதேவி, ஆண்டாள், தாளபாக்கம் திம்மக்கா... போன்றோரின் அற்புதமான பாடல்களைப் பாடி அசத்தினார்.

"இந்தப் பெண்மணிகள் வாழ்ந்த கால கட்டங்கள் வேறு வேறு. ஒருவரையொருவர் சந்தித்ததேயில்லை. பல நூற்றாண்டுகள் இடைவெளி. அப்படியும் இவர்களது பாக்களில் ஒற்றுமையைப் பார்க்கலாம். சாதாரண மக்களுக்கும்

# "ஆம்பளைங்கக்கிட்டே பேசுங்க!"

புரியும்படியான எளிமையான சொற்கள். சமுதாய அவலங்கள், அநீதிகள், சுற்றுப்புற சூழல்... என்றே கவிதை புனைந்திருக்கிறார்கள். இத்தனைக்கும் இவர்கள் ஒடுக்கப்பட்டவர்கள். ஒவ்வொரு பாடலுக்கும் பின்னே பல சோகக் கதைகள். ஆனாலும் இவர்களது அறிவுக்கும் ஆற்றலுக்கும் அணை போட முடியவில்லை. மீரா பாய் என்றாலே ராஜஸ்தானில் பல நூற்றாண்டுகளுக்கு மக்களின் மனத்தில் ஒருவித கசப்பு உணர்வு. ராஜபுத்திரர்களின் பெருமைக்கு களங்கம் ஏற்படுத்தி விட்டதாகவே நினைத்தார்கள். மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த பஹினாபாய், துக்காராமின் பரம பக்தை. எழுநூற்று இருபத்தெட்டு அபங்கங்கள் மராத்திய மொழியில் பதிவு செய்தவள். அவள் கருவுற்றிருந்த போது கணவன் ஒதுக்கி வைத்தான். தன் மனைவியை ஜனங்கள் புகழ்வதை அவனால் தாங்கவே முடியவில்லை. துக்காராமின் உபன்யாசங்களைக் கேட்கப் போனால் பயங்கர அடி உதைதான். அவள் கதறுவாள். ஆனாலும் அருமையான காவியங்களை உலகுக்குத் தந்திருக்கிறாள். அன்னமாச்சார்யாவை எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவர் மனைவி தானபாக்கம் திம்மக்காவை யாருக்கேனும் தெரியுமா? சுபத்திரா கல்யாணத்தை சுபத்திரையின் பார்வையிலிருந்து விவரித்த விதம் அற்புதம்... இத்தனை உயர்ந்த காவியத் தலைவிகள் உலகில் அறியப்படவில்லை. அவர்களின் மௌன வாழ்க்கை, மௌனக் கவிதைகள் எங்கும் கேட்கப்பட வேண்டும்... உண்மையான ஆதங்கத்துடன் சொல்கிறார் சகுந்தலா.

பெண்களின் பிரச்னைகளை எடுத்துக் கொண்டு அதில் டாக்டர் பட்டமே செய்துள்ளார் சகுந்தலா. 'பெமினா'வில் ஆசிரியர் குழுவில் இருந்த சகுந்தலா கொள்கையின் அடிப்படையில் வேலையை உதறித் தள்ளியிருக்கிறார். "லட்சக்கணக்கான மக்களுக்கு சரியான சோறு தண்ணியில்லை. அழகு செய்து கொள்கிறேன் என்று ஷாம்பு, க்ரீம்... என்று பணத்தை வாரியிறைப்பதைப் பார்த்து எனக்குத் தாங்கவில்லை. அழகிப் போட்டியை எதிர்த்தேன். இதற்காக, பல போராட்டங்களிலும் கலந்து கொண்டேன்" என்கிறார் சகுந்தலா.

சகுந்தலாவின் 'சதி' என்ற புத்தகம் பரபரப்பாகப் பேசப்பட்டது.

"இதற்காக நான் ராஜஸ்தானுக்குப் போனேன். பொதுமக்களின் ரியாக்ஷனை கூர்ந்து கவனித்தேன். ரூப் கன்வர் சமாதி கிட்டத்தட்ட ஒரு கோயிலாகவே மாறிவிட்டது. மண்ணை எடுத்து தலையில் இட்டுக் கொள்கிறார்கள். இதற்குப் போலீஸே துணை. நான் அப்படியெல்லாம் செய்யாதபோது போலீஸே 'நீ பத்திரிகையாளரா, இடத்தைக் காலி செய்' என்றது. அங்கு சதி மாதா பாட்டுப் பாடியே ஆகணுங்கற அவல நிலை..!" கோபப்படுகிறார்.

சகுந்தலாவின் கணவர் நரசிம்மன் பத்மபூஷண் விருது பெற்ற விஞ்ஞானி.

"இங்கு நாம் பெண்களின் பிரச்னைகளை பெண்களிடம் பேசுகிறோம். அது தவறு. ஆண்களிடம் தான் சொல்ல வேண்டும். நம்முடைய பிரச்னையை நாமே நம்மிடம் பேசி என்ன பயன்? ஒரு தாய் தன் மகனுக்குப் பெண்ணை மதிக்க, அன்புடன் நடத்த, கண்டிப்பாகக் கற்றுத் தர வேண்டும். ஒரு பெண்ணின் திறமைகளை வெளிக் கொணர, அவள் வீட்டு நபர்களே முன் வர வேண்டும். ஏளனம் செய்யக் கூடாது" என்கிறார் சகுந்தலா.

- லதா சேகர்

சுந்தர் உள்ளே வந்தவுடன் என் கையைப் பற்றித் தரதரவென்று மொட்டை மாடிக்கு இழுத்துச் சென்றான். ரகசியம்னு அர்த்தம்.

"என்னடா?"

அதி ஜாக்கிரதையாக ஜேபியிலிருந்து ஒரு சின்னப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான்.

"என்னது இவ்வளவு ரகசியம்? ப்ரெளன் ஷுகரா?"

"சீ! நல்லாப் பாரு"

"என்ன பித்தளைப் பட்டனா? ஓரத்தில கருகியிருக்கு"

அவன் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு அடித் தொண்டையில் பீறிடும் சந்தோஷத்தை அடக்கிக் கொண்டு, "தங்கம்டா! தங்கம், சொக்கத் தங்கம்!"

"ஏதுடா? நல்லதா மெருகு போட்டதை வாங்கக் கூடாது?"

"அட மடையா! இது செஞ்சதுடா. ஒரு மணி நேரத்துக்கு முன்னால இது செம்பாக இருந்தது, தெரிஞ்சிக்க."

"என்ன சொன்ன? செம்பாயிருந்ததா? இப்ப தங்கமாயிட்டதுங்கிறியா? ராமர் பிள்ளை மாதிரி மூலிகைத் தங்கமா? கிழிஞ்சிது போ! மறை கழண்டுப் போச்சு. ஆமா நீயேவா செஞ்சிட்ட?"

"குருவி மலை சுவாமிஜி!"

"எங்க வீட்லதான் தங்கியிருக்கார். அப்பாவுக்கு ரொம்ப வேண்டியவராம். பெயர் 'ஷண்முகானந்தா'! சித்த புருஷர். பத்து வருஷம் இமய மலைக் குகையில் தங்கி தவம் பண்ணியிருக்கார். முகத்தில என்ன தேஜஸ்ன்ற! கண்ணுல அப்படி ஒரு ஜ்வாலை."

"ச்சூ! சுருக்கமா. சுருக்கமா. ஆல்கெமிஸ்ட் ஆளா? ரசவாதம் பண்றாராமா? ஹ.. ஹ... இத்தப் பெருசு மண்டைய வெச்சிக்கிட்டு உள்ளே மூளைதான? வேறு எதுவுமா?"

"நீ நம்பமாட்ட. நேரிடையாப் பார்த்தோமடா. அஞ்சு நிமிஷத்தில மாறிப் போச்சுடா. கிழே கொட்டினா பளபளன்னு சுத்தத் தங்கம். தட்டான்கிட்ட கூட உரை போட்டுப் பார்த்துட்டேன்."

"என்னடா இது? ஐன்ஸ்டினே துண்டைக் காணோம் துணியைக் காணோம்னு ஓட வேண்டிய விஷயம் போலிருக்கே."

"கிண்டல் வேணாம்டா. ஒரு நாளைக்கு உனக்கே உண்மை தெரியும்."

கூப்பிடக் கூப்பிட அவன் புர்ரென்று கிளம்பிப் போய்விட்டான்.

மறுநாள் ஆறு மணிக்கெல்லாம் வந்து நின்றான். ஒரு பொட்டலத்தைக் கொண்டு வந்திருந்தான்.

"என்னாதுடா?"

"இதுவேற. ராத்திரி சாமி மறுபடியும் செய்ஞ்சார். இந்தா நீயே வெச்சிக்க. எங்க எப்ப வேணும்னாலும் டெஸ்ட் பண்ணிக்க."

பிரித்தேன். பித்தளை பட்டன். ஓரத்தில் கருகல். எடுத்து கிழே இரண்டு உரை இழுத்தேன். பளபளவென்று மஞ்சள் டாலடித்தது.

"இதுவும் ராத்திரி செம்பாயிருந்ததுங்கிறியா?"

"யெஸ்!"

"ஆனா இப்ப இது நிச்சயம் செம்பு இல்லை. மஞ்சள் ரங்கு அடிக்குதே. சம்திங் டிஃபரெண்ட். முதன் முறையாக ரசவாதம் உண்மையோ? என்று மனம் சஞ்சலப்பட்டது. விடுவேனா? மனக்கணக்குக் கடிவாளம் போட்டேன். நான் ஒரு சயின்ஸ் போஸ்ட் கிராஜுவேட் பிசிக்ஸ் (சுந்தரும்தான்).

# சுவாமிஜி

அடிப்படை கண்டிப்பாய்த் தெரியும், தெரிஞ்சிருக்கணும். செம்பும் தங்கமும் வெவ்வேறு அணு எடைகளைக் கொண்டவை. நியூட்ரான், ப்ரோட்டான் எண்ணிக்கைகள் வேறு வேறு. ஒன்று மற்றொன்றாய் மாறணும் என்றால் அங்கே அணுப்பிளவு ஏற்பட்டேயாகணும். அதுக்கு நிறைய விஷயங்கள் தேவை. அணு உலை, சைக்ளோட்ரான் (ஆட்டம் ஸ்மேஷர்ஸ்) பெரிலியம், ராடான் வாயு, சூப்பர் கிரிட்டிக்கல் மாஸ், இத்யாதி இத்யாதி. அப்போது கூட சரியாக வரும்னு சொல்ல முடியாது. சரி, அப்படியே வெளி உலகத்துக்குத் தெரியாத ஒரு புதுமுறையில் அணுப் பிளவு நடக்கிறது என்று வைத்துக் கொண்டாலும், அந்த நிகழ்வில் வெளியாகும் ஆற்றல், ரேடியேஷன், வெப்பம்..? ஒரு ஐந்து கிலோ மீட்டர் சுற்று வட்டாரம் பொசுங்கிப் போகுமே. இப்படியெல்லாம் எதுவும் நடக்காமல்...!

**செய்யாறு தி.தா.நாராயணன்**



"எப்பிட்றா.. எப்பிட்றா? நீ என்னவோ ஆம்லட் சுடற மாதிரி சுலபமாச் சொல்ற, எப்படி?"

"ஹூம் நீ எப்படி.. எப்படின்னு குழம்பிக்கிட்டிரு நான் வர்றேன்."

அந்த பட்டன் வில்லையை என் கையில் திணித்துவிட்டுப் போய்விட்டான். உள்ளங்கையில் ஒரு புளியங்கொட்டை சைஸில், வினோதமாய், மஞ்சள் கிழங்காய் பளபளவென்று ஜொலித்துக் கொண்டிருக்கிறது. எனக்கும் உண்மையை அறிய ஆர்வமாயிருந்தது.

கத்தியின்றி, ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது போல, நெருப்பின்றி ரேடியேஷனின்றி அணுப் பிளவு நடந்து கொண்டிருக்கின்றதா? இது சாத்தியம்தானா? இல்லை டுபாக்கூரா. ஐன்ஸ்டனைத் தப்பு சொல்ல இங்கே யாருக்கும் தைரியம் இல்லை. இல்லை தகுதி இருக்கின்றது? அன்றைக்கு மதியமே சுந்தர் வீட்டுக்குப் போனேன்.

உள்ளே அழைத்துச் சென்றான். அவர் உட்கார்ந்திருந்தார். கறுத்த உருவம், நீண்ட தாடி, காவி, பரட்டைத் தலை, சடை சடையாய் முடி தொங்குகிறது. கமகமவென்று சாம்பிராணி ஊதுபத்தி மணம் மூச்சடைக்கிறது. ரீடிங் அறையை பூஜையறையாக மாற்றி விட்டிருந்தார்கள். சுந்தரின் அப்பா இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு பவ்யமாய் நின்று கொண்டிருந்தார். என்னிடம் ஸ்நேகமாய்ச் சிரித்தார்.

"தம்பி யாருப்பா?"

"என் ஃப்ரண்ட் சாமி! சங்கர்னு சொன்னேனே இவன்தான்."

விபூதியெடுத்து நெற்றியிலிட வந்தார். மறுத்து கையில் வாங்கிக் கொண்டேன். என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டு, திரும்பிக் கொண்டார். வெளியே வந்தோம்.

"நேத்து அவர் அருளுரையை கேட்கலியே நீ. உலகில் இறைவன் ஒன்று தான் நித்யமாம். மத்ததெல்லாம் அநித்யமாம். ஆண் பெண் என்பதெல்லாம் மாயைகளாம். ஆண் என்ன, பெண் என்ன பரமாத்மாவுக்கு எல்லாம் ஒன்று தானாம். புரிஞ்சிக்க, பெரிய மகான் அவர்."

அதற்குள் அங்கே கும்பல் சேர ஆரம்பித்திருந்தது. வெளியே மாருதி, ஹுண்டாய், போர்டு, சுமோ என்று போக்குவரத்தைக் கடினமாக்கிக் கொண்டிருந்தன. எப்படி இவ்வளவு கூட்டம்? ஒருவேளை ரசவாத வேலை லீக் ஆயிடுச்சோ?

''சுந்தர்! சாமி கிட்ட கொஞ்சம் பேசணும்டா!''

''இங்கிதமறிஞ்சி பேசணும். இப்பவே சொல் லிட்டேன். ஏதாவது வில்லங்கம் பண்ணே, வெளியே இழுத்துவிட்டுவேன்.''

உள்ளே போனோம்.

''சாமீ! என் சிநேகிதனுக்கு உங்ககிட்ட என்னவோ பேசணுமாம். நம்ப மாட்டேன் றான். ரசவாதம் உடான்ஸ்டான்றான்.''

மந்தகாசமாகப் புன்னகைத்தார்.

''நம்பறவங்களுக்குத்தான் தெய்வம் மகனே! அந்தத் தம்பிய அவர் போக்குல விட்டுடு.''

நான் சட்டென்று குனிந்து அவர் காலைத் தொட்டுக் கும்பிட்டேன்.

''சாமீ! அணுவின் கோட்பாடுகளையே ஆட்டங்காண வெச்சிட்டீங்களே, எப்படி? ஐன்ஸ்டின் தியரிகள் பொய்யா? நிறைய விஷயங்கள் முரண்படுதே.''

''தம்பீ! நானும் படிச்சவன்தான், பி.எஸ்.ஸி. கெமிஸ்ட்ரி. உலகத்தில் அவ்வப்போது சில மிர்ரக்கிள்கள் நடக்கத்தான் செய்கின்றன. இறைவன் விளையாட்டின் சூட்சுமங்கள் யாருக்குப் புரியும்? ஐன்ஸ்டினின் சித்தாந்தங் களை வைத்துக் கொண்டு இதைப் பொய் என்கிறாய். புதிய சித்தாந்தங்களை மேலை நாட்டினர் சொன்னால்தான் ஏற்றுக் கொள் வாயா? நம்முடையது புதிய கண்டுபிடிப்பு என்று ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?''

இது நியாயம் என்று பட்டது. ஏன் நம்மில் மேதைகள் இல்லையா என்ன? கணித மேதை ராமானுஜத்தின் பல கணிதங்களுக்கு, இன்று வரையிலும் உலகம் விடை தெரியாமல் மண்டையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறது.

''இதற்காகப் பத்து வருஷங்கள் உழைத் தேன். முப்பூ குருமருந்து இல்லாமல் ரசவாதம் முடியாது என்று ஒரு மகான் சொன்னார். முப்பூவை முடிக்க அண்டக் கல்லை தேடி யலைந்தேன். சித்திரை மாசத்து பௌர்ணமி யில், நடு இரவில், களர் நிலத்தில் பூக்கும் அண் டக்கல் உப்பைத் தேடி, காடு மேடெல்லாம் நடு நிசியில் பிசாசைப் போல் அலைந்து சோர்ந்து விட்டேன். அப்போதுதான் என் குரு புஷ்பானந்தா தடுத்தாட் கொண்டார். மனம் பழுத்தால், தங்கம் தானே பழுக்கும் என்றார். குரு தொட்டுக் காட்டிய பாதையில் பத்து வருடங்கள் பயணித்தேன். ஒவ்வொன்றாய் கைவசமானது. வாலாம்பிகையின் தத்துவத்தை உணர்ந்தேன். சித்தர்கள் பாடி வைத்த பரி பாஷைகள் விளங்க ஆரம்பித்தன. அண்டக்கல், வழலை, சிதம்பர ரகசியம், முப்பூகுரு, ஜெயநீர்... அப்பப்பா. அது ஒரு நீண்ட பயணம், உயர்ந்த கலை. என் குரு எனக்களித்த கொடை, தங்கம் செய்யும் வித்தை, கைவசம் வந்தபோது என் மனம் பழுத்துவிட்டது. பற்றறுந்துவிட்டது. என்னை இந்த உயர்ந்த நிலைக்கு ஏற்றிவிட்ட என் தெய்வம், என் குருசாமிக்கு என் அனந்த கோடி நமஸ்காரங்கள்'' கைகளைத் தலைக்கு மேலே உயர்த்திக் கும்பிட்டார்.

திரும்பி சுந்தரிடம் ஏதோ சைகை காட்ட, அவன் ஓடிப் போய் கதவை மூடினான். சுந்தரின் அப்பா குமிட்டியைக் கொண்டு வந்து வைத்து, பற்ற வைத்தார்.

டெமான்ஸ்ட்ரேஷனா? எனக்காக ஏன் இவ்வளவு மெனக்கெடறாங்க? என் எதிரி லேயே செம்புத் தகட்டைச் சிறுசிறு துண்டு களாகக் கத்தரித்து மூசையில் போட்டு நெருப் பில் வைத்தார். ஒரு தேர்ந்த பொற் கொல்ல னைப் போல சுந்தரின் அப்பா ஊத ஆரம்பித் தார். உஷாராக கவனித்துக் கொண்டிருந்தேன். கொஞ்ச நேரத்தில் செம்பு உருகி முத்துப்போல் கண்விட்டாடியது. சாமி தன் புருவ மத்தியைக் கின்னியபடி எதையோ முணுமுணுத்தவாறு பாட்டிலிலிருந்து இரண்டு சிட்டிகை மருந்தை எடுத்து மூசையினுள் போட்டு அழுத்தமாக ஊத, சொய்ங் என்று புகைந்தது. அகிலாண் டேஸ்வரீ! தாயே! என்று கூவியபடி மூசை எடுத்துக் கவிழ்த்தார். பளபளவென்று மஞ்சள் டாலடிக்க விழுந்தது சொக்கத் தங்கம். என் கண்களையே நம்ப முடியவில்லை. ஏதும் கண்கட்டு வித்தையில்லை. ஏமாற்று வேலை யில்லை. அணுக் கொள்கையின் தியரிகள் மளமளவெனச் சரிவதாய் உணர்ந்தேன். ''சாமீ! எப்படி சாமி? இதுக்கு அடிப்படைத் தத்துவம் என்ன சாமி?'' அவர் சிரித்தார்.

''நேரப்பா அண்டமொடு பிண்டம் ரெண்டும்
நேர் அறிந்து கொண்டவனே சித்தன் சித்தன்''

''ஊஹூம்... ஒரு சதவீதம் கூட எட்டல.''

''எல்லாம் வாலாம்பிகை முப்பூவின் மகிமை தம்பி.''

மண்டை காய்கிறது. எப்படியோ போகட் டும். அவர்களிடமிருந்து விலகிக் கொண் டேன். அவன் விட்டானா? நாலாம் நாள் மதியம் சுந்தரிடமிருந்து ஃபோன்.

''சாயங்காலம் ஆறு மணிக்கு அவசியம் வா! முக்கியமான கூட்டம் இருக்குது''

''என்ன கூட்டம்?''

''30 பெரிசா, 40 பெரிசா டாடி?''
''அடப்பாவி! 30வது ரேங்க்லேர்ந்து 40வது ரேங்க்குக்குப் போயிட்டியா...?''
- சீர்காழி வி.ரேவதி

"நேரில்!"

**நா**ன் அங்கே போனபோது தெருவையே அடைத்துக் கொண்டு விதவிதமான கார்களின் அணிவகுப்பு. இடுப்பில் ஒரு காவித்துண்டு, மேலே போர்த்தியபடி காவி வஸ்திரம். உடல் முழுக்கப் பட்டை பட்டையாய் விபூதி. முகத்தில் பத்து நாள் தாடி. இதே கெட்டப்பில் அவன் அப்பாவும் சுற்றிக் கொண்டிருந்தார்.

"என்னடா கோலம் இது? ஒரு கிலோ பண்ற வேலையா?"

அவன் அசட்டுத்தனமாய்ச் சிரித்தான். உள்ளே கூட்டிச் சென்று உட்கார வைத்தான். ஏழு மணிக்கு மொட்டை மாடியில் மீட்டிங் ஆரம்பித்தது. மொத்தம் ஒரு முப்பது பேர்.



எல்லோரும் ஊரின் பிரபலங்கள். பண முதலைகள். சாமி மெதுவாய்ப் பேச ஆரம்பித்தார்.

"நண்பர்களே!

ரசவாதம் என்ற இந்தக் கலைக்கு ஆட்கொல்லி என்று பெயர். ஜாக்கிரதை. இங்கு நடக்கும் விஷயம் இந்த நிமிஷமே சமாதியாக வேண்டும். இதோ பாட்டில்களில் குரு மருந்து இருக்கிறது. ஒவ்வொன்றிலும் பத்து கிராம் எடை. இது ஒரு கிலோ செம்பைத் தங்கமாக்கும் சக்தி கொண்டது. உங்களுக்கு இதைத் தரப் போகிறேன். தங்க வாத்தை அறுத்த கதையாய், மொத்தத்தையும் ஒரே நாளில் செய்கிறேன் என்று மாட்டிக் கொள்ளாதீர்கள். ரசவாதம் சட்ட விரோதம். கொஞ்சம் கொஞ்சமாய்ச் செய்து பிழைத்துக் கொள்ளுங்கள்'' அவர் பேச்சை நிறுத்திவிட்டுப் பார்த்தார்.

எல்லோரும் பரபரப்புடன் குரு மருந்தை வாங்கத் தயாராக இருந்தார்கள்.

''ஆனால் இதற்கொரு விலையுண்டு. ஒரு கிலோ தங்கத்தின் இன்றைய விலை ஆறு லட்சம். நீங்க ஒவ்வொருத்தரும் மூன்று லட்சம் காணிக்கை கொடுத்துவிட்டு வாங்கிச் செல்லுங்கள். அனாதை ஆஸ்ரமம் ஒன்று கட்டி வருகிறேன் அதற்காக நீங்கள் தரும் காணிக்கையே இந்தப் பணம்."

**இ**தெல்லாம் எனக்குப் பிடிபடாத நிகழ்ச்சியாயிருந்தது. என்னவோ நடக்கிறது. இதைப் பொய் என்று என்னால் சொல்ல முடியாது. ஆனால் உண்மை என்றும் மனம் ஏற்க மறுக்கிறது. சாமியின் அலையும் கண்கள். டக்கென்று ஒரு பொறி தட்டியது. சுந்தரைப் பிடித்தேன்.

''இப்ப என்ன வில்லங்கம் பண்ணப் போறே?''

"சுந்தர்! எப்படியாவது ரெண்டு சிட்டிகை அந்த குரு மருந்தைக் கொண்டு வாயேன். ப்ளீஸ்!"

சில நிஷயங்களில் ரகசியமாகப் பொட்டலம் என் கைக்கு வந்துவிட்டது. அவனைத் தட்டிக் கொடுத்து விட்டுப் பறந்தேன். நான் போய்ச் சேரும்போது மணி இரவு எட்டரை. ஃபொரன்ஸிக் லேப் ஐ ஏறக்குறைய மூடி விட்டார்கள். டாக்டர் இலியாஸ் அப்போதுதான் வெளியே வந்து கொண்டிருந்தார்.

"ரசவாதம்னு சொல்லி ஒரு ஆள் இந்தப் பொடியை வெச்சி என் எதிரிலேயே செம்பைத் தங்கமாக்கிக் காட்டினார் சார்! எப்படி சாத்தியம்? புரியல."

"படிச்சிருக்கேன். பேசின்வேலைன்டைன் அப்படீன்ற மேதை எழுதியிருக்காரு. ஏழு கடல்களும் நீருக்குப் பதிலாக பாதரசமாக இருப்பின் ஒரு கைப்பிடி மருந்தினால் அவ்வளவையும் தங்கமாக்குவேன்'' என்று.

ஜெர்மன்காரன்தான் இதில் சூரன் சார்.! ரசவாதம் உண்மையா இருக்கலாம் சார்!" ஏன் பொய்யின்னு நினைக்கணும்?"

"என்ன சார் படிச்சவங்கள்லாமே இப்படித் தெளிவில்லாம இருக்கீங்க? செம்பு, தங்கம் ரெண்டும் வெவ்வேறு அணு எடை கொண்டது. எப்படி, எப்படி சார் சாத்தியம்? அணுப் பிளவு ஏற்படாதானே சாத்தியம்."

''ஓ.கே.! வெயிட் பண்ணு'' சிரித்துக் கொண்டே பொட்டலத்தை எடுத்துக் கொண்டு உள்ளே போனார். சரியாக பத்து பத்துக்கு வந்தார்.

"இட் ஈஸ் ஆர்த்யுமொலேட் நைட்ரேட்."

"தங்க உப்பு! அடப்பாவி! அப்ப, தங்க உப்பு செம்புடன் சேர்ந்து வேதியல் வினை புரிந்திருக்கிறது. ப்யூர்லி கெமிஸ்ட்ரி. ஹ... ஹ... ஹ... எனக்குச் சிரிப்பு வெடித்துக் கிளம்பியது. பத்து கிராம் குரு மருந்து பத்து கிராம் தங்கத்தை மட்டுமே கொடுக்கும். ஒரு கிலோ வரும்னு மூணு லட்சத்தைக் கொடுத்தவன்கள் கதியை நினைத்தேன். சுவாமி இந்நேரம் இமயமலைக்குப் பறந்து விட்டிருப்பார்.

"நான் பி.எஸ்ஸி. கெமிஸ்ட்ரி" சாமி சொன்னது நினைவுக்கு வந்தது. ●

“

கதை இல்லாமல் எந்த படத்திற்கும் திரைக்கதை எழுத முடியாது. இன்று கதை என்பது ஒரு வரிதான். சம்பவங்கள்தான் முக்கியம்.

”





**த**மிழ் சினிமாவுக்கு என்ன புதுசு என்று கோடம்பாக்கத்தில் நின்று கேட்டால் உடனே கிடைக்கும் பதில் - திருட்டு விசிடி. ஆனால், இன்று சினிமா பார்க்க வருகிற ரசிகர்களே புதியவர்கள், புது இரத்தம் பாய்ச்சப்பட்டவர்கள் என்கிறார், கடந்த ஆண்டின் மெகா வெற்றிப் படமான ஜெமினியை இயக்கிய சரண்.

“**ப**ண மதிப்பு குறைந்து கொண்டே வருகிறது. இன்று சின்ன தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளவே அதிக பணம் தேவை. இதனால் வயது வித்தியாசம் இல்லாமல், மன அழுத்தம் எல்லோரையும் நெட்டித் தள்ளுகிறது. எதிர்ப்படும் சவ ஊர்வலத்திற்குக் கூட ஒரு கணம் அஞ்சலி செலுத்த முடியாமல் ஓடிக் கொண்டேயிருக்கும் குளோபலைசேஷன் வாழ்க்கை முறை, கிராமத்தின் வேர்களையும்கூட விட்டு வைக்கவில்லை.

“அடசலன்ட், கல்லூரி மாணவர்கள், பெட்டிக்கடை, டீக்கடையில் வேலை செய்பவர்கள், மெக்கானிக்குள், வாழைப்பழ வண்டி போட்டிருப்பவர்கள் போன்ற, இளம் உதிரித் தொழிலாளர்கள்தான், இன்று திரையரங்கைத் தேடி வரும் ‘ஓபனிங்’ ரசிகர்கள். விறுவிறுப்பான கிரிக்கெட்டும் அதிரடி வீடியோ கேம்களும் இவர்களின் ஃபேவரைட். இவர்களிடம் வாசிக்கும் பழக்கம் என்பது சுத்தமாய் இல்லை. இதனால் வெகுஜனப் பத்திரிகைகளில் வரும் இலக்கியத்தின் பரிச்சயம்கூட இவர்களுக்குக் கிடையாது! விளைவு! தொலைக்காட்சித் தொடர்கள் திணிக்கும் அழுகை, நாடக உணர்வு எதையும் எதிர்கொள்ள இவர்கள் தயாராக இல்லை.

“இன்று அம்மா, மகன் இடையே ஒரு பாசமான செண்டிமெண்ட் காட்சி வந்தால்கூட ஓவென்று கத்துகிறார்கள். இதனால் ஜெமினியில் மனோரமாவின் பாத்திரத்தை வழக்கமான அம்மாவாக நான் வடிக்கவில்லை. இன்று ஓர் இயக்குனரின் முதல் படம் மாதிரி அடுத்த படம் இருக்கக் கூடாது. இது எனக்கு மட்டும்தான்



# "அதிர்ச்சி வேணும்!"

என்றில்லை. வெற்றி பெற்ற அத்தனை பேரும் எதிர்கொள்கிற சவால். முன்பு போல தனக்கென்று தனிப்பட்ட பாணிகளை உருவாக்கிக் கொள்கிற இயக்குனர்களை முத்திரை குத்தி, அவரது படங்களை 'ஒரே மாதிரி' என்பதற்காகவே ஒதுக்கி விடுகிறார்கள். இப்படிப்பட்ட ரசிகர்களை இரண்டரை மணி நேர சினிமாவில் சிந்தாமல் சிதறாமல் சேர்க்க வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு பத்து நிமிடத்திற்கும் ஒருமுறை ஓர் அதிர்ச்சி கொடுக்க வேண்டியிருக்கிறது. இதனால் இப்போது வரும் படங்களில் கதை இல்லை என்ற குற்றச்சாட்டு எழுந்திருக்கிறது.

"கதை இல்லாமல் எந்த படத்திற்கும் திரைக்கதை எழுத முடியாது. இன்று கதை என்பது ஒரு வரிதான். சம்பவங்கள்தான் முக்கியம். மு மு க்கும் மந்திரம் மாதிரியான 'ஓ போடு!' பாடலை படம் வெளி வரும் முன்பே பிரபலப்படுத்தி, அதை, படத்தின் இடைவேளைக்குப் பிறகு இடம் பெற வைத்தேன். அந்தப் பாடல் வருவதற்கு முன் கதையின் பெரும் பகுதியைக் காட்டி ரசிகனை உட்கார வைக்க வேண்டியிருக்கிறது. ரசிகனுக்கும் இயக்குனருக்குமான இந்தப் போராட்டத்தில், இயக்குனருக்கு அதிக 'ஹோம் ஒர்க்' காத்திருக்கிறது.

"நான் தொடக்கம் முதலே ஹோம்ஒர்க் மீது அதிக நம்பிக்கையுள்ள இயக்குனராக இருந்து வருகிறேன். இதனால் வருடத்திற்கு ஒரு படம் என்பதே போதுமானது. இப்போது மாதவனைக் கதாநாயகனாகக் கொண்டு 'ஜே.ஜே' என்ற படத்தை இயக்கத் தயாராகிவிட்டேன். படத்தை ஆஸ்கார் ரவிச்சந்திரன் தயாரிக்கிறார். ஜே.ஜே படம் வெளியான பிறகு அஜித் மீண்டும் எனது இயக்கத்தில் நடிக்கிறார்" என்கிறார் சரண்!

- ஜெயந்த்

மத்திய அரசு ஊழியரான ராஜாவின் மகள் செல்வி படிப்பில் கெட்டிக்காரி. இரண்டாவது வகுப்பு படிக்கும் இந்தச் சுட்டிப் பெண், படிப்பில் எப்போதும் முதல் ராங்க். மந்தைவெளியில் உள்ள பிரபலமான பள்ளியில் படித்து வரும் செல்விக்கு இப்போது ஏழு வயது. "ரொம்ப இன்டலிஜென்ட்" என்று செல்வியின் தகப்பனார் சொல்கிறார். அது உண்மைதான். ஆனால் செல்விக்கு வந்திருக்கும் நோய் அவரைக் கண் கலங்க வைக்கிறது.

"செல்விக்கு வந்திருக்கும் நோயின் பெயர் ம்யூகோ பாலிசாக்கரிடோசிஸ். இதைச் சுருக்கமாக எம்பிஎஸ் என்பார்கள். குழந்தையின் உடலில், தானாகச் சுரக்கும் ஒருவித என்ஸைம் பற்றாக் குறைவினால் இந்த நோய் உண்டாகிறது!" என்கிறார் ராஜா.



# புதிய நோய்க்குப் புது அமைப்பு!

இந்த நோயின் அறிகுறிகள் என்னென்ன?

1. தலை பெரியதாக இருக்கும் 2. முக அமைப்பிலேயே வேறுபாடு தெரியும் 3. நாக்கு பெரிதாக இருக்கும் 4. கண்ணின் கருவிழியில் வெண்மைப் படலம் படிந்து பார்வை மங்கும் 5. காது கேட்கும் திறன் குறையும் 6. மார்புக் கூடும், வயிறும் முன்னால் துருத்தி நிற்கும் 7. சுவாசப் பாதையில் நோய் தாக்கும் 8. இதய வால்வுகளில் பிரச்னை ஏற்படும் 9. முறையான எலும்பு வளர்ச்சி இராது 10. கை, கால் மூட்டுக்கள் பாதிக்கப்பட்டு முழுதும் இயங்க இயலாது. போதிய அளவு நீட்டி மடக்க முடியாமல் இருக்கும் 11. முதுகுத் தண்டுவடம் வளைந்திருக்கும் 12. கல்லீரல், மண்ணீரல் அளவு சாதாரண அளவைவிடப் பெரியதாக இருக்கும். 13. அடி வயிற்றுக்குக் கீழே குடலிறக்கம் ஏற்படும். 14. கை, கால்களில் அதீத முடி வளர்ச்சி 15. வயதுக்கேற்ற உயரம் வளராதிருக்கும்.

அயல்நாடுகளில் எல்லாம் இதுபோன்ற அல்லது ஆடிஸம், கான்ஸர், ஹீமோஃபீலியா போன்ற நோய்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கான அமைப்பு ஒவ்வோர் நகரிலும் இருக்கும். தங்கள் பிரச்னைகளை இந்த அமைப்பிடம் பகிர்ந்து கொண்டால், அவ்வப்போது கண்டுபிடிக்கப்படும் மருந்துகள் பற்றியும், நோயின் தன்மையைப் பொறுத்து எப்படி சமாளிப்பது என்பது பற்றியும் தகவல்கள் தருவார்கள்.

அதிர்ஷ்டவசமாக, அப்படி ஓர் அமைப்பை உருவாக்கி, பாதிக்கப் பட்டவர்களுக்கு உதவ 'மெடிஸ் கேன்' டாக்டர் சுரேஷ் முன் வந்திருப்பது ஆறுதலான விஷயம். இந்த எம்பிஎஸ் ஆதரவு மையம், 203 அவ்வை சண்முகம் சாலையில், சென்னை - 14ல் இயங்கத் தொடங்கியிருக்கிறது. முன்னால் கூறிய அறிகுறிகள் கொண்ட குழந்தைகளின் பெற்றோர், என்ன செய்வது, எங்கே போவது என்று தவிக்கும் நிலைக்கு ஆளாகாமல், இந்த ஆதரவு மையம் வெளிநாடுகளில் இயங்கிவரும் பிற மையத்துடன் தொடர்பு கொள்ளலாம். இந்த எம்பிஎஸ் ஆதரவு மையங்களுடன் தொடர்பு கொண்டு, புதிய அறிவியல் முன்னேற்றம் குறித்த தகவல்களைத் தெரிவிக்கும்.

இந்த நோய்க்கு மருந்துகள் கண்டுபிடிக்கப்படவில்லையா?

'பயோமாரின்' மருந்து நிறுவனம் 'ஆரிப்ஸேஸ்' என்ற புதிய மருந்தைத் தயாரித்து, எம்பிஎஸ் - நிலை 1, எம்பிஎஸ் - நிலை 6 என்ற இரு நிலைகளில், நிலை 6க்கு மட்டும் ஆராய்ச்சி மற்றும் சோதனை அளவில் வெளிக் கொண்டு வந்திருக்கிறது.

இந்த நோய் பற்றி மேலும் விவரங்கள் தெரிந்து கொள்ள வசதியாக வெப்-தளங்கள் புதிதாக உருவாகியுள்ளன. (mpssociety.org, mpssociety.co.uk)

**- சித்தார்த்**

* தகவல் டீம்






# ஃபோன் பண்ணுங்க போதும்!

தெரிந்தவர் டெல்லியிலிருந்து வருகிறார். ஸ்டேஷனுக்குச் சென்று அழைத்துவர வேண்டும். தொலைபேசியில் ஸ்டேஷனைத் தொடர்பு கொண்டு, சரியான நேரத்தில் இன்றைக்கு ரயில் வந்து சேருமா என்ற விவரத்தை அறிந்து கொண்டு வீட்டைவிட்டுக் கிளம்புவதுதான் புத்திசாலித்தனம்.

ஆனால் பல நேரங்களில் ரயில்வே ஸ்டேஷனின் நம்பர் கிடைக்காது. கிடைத்தாலும் பதிவு செய்யப்பட்ட ஒரு குரல், எல்லா ரயில்கள் பற்றிய விவரங்களையும் ஜெட் வேகத்தில் சொல்லிக் கொண்டு போகும்.

இதுபோன்ற சிக்கலைக் களைகிறது சமீபத்தில் அறிமுகமாகியிருக்கும் ஒரு தொழில் நுட்பம். தொலைபேசியின் மூலம் கணினியுடன் பேசி, வண்டி வரும் நேரத்தின் அப்போதைய நிலவரத்தை அறிந்து கொள்ளலாம்.

ரயில்கள் வந்து சேரும் நேரம் மட்டுமல்ல. அட்டவணைப்படி அவை புறப்படும் நேரம், போக்குவரத்து இடையூறுகளின்போது ஏற்படும் காலமாற்றங்கள், சிறப்பு ரயில்கள் பற்றிய தகவல்கள் போன்ற தகவல்களையும் அறிந்து கொள்ளலாம்.

மேற்படி சேவையை தென்னக ரயில்வே, லேட்டிஸ் பிரிட்ஜ் இன்ஃபோடெக் பிரைவேட் லிமிடெட் என்ற நிறுவனத்துடன் இணைந்து அளிக்கிறது.

இந்த நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் மோகன் ராமைத் தொடர்பு கொண்டோம்.

"இந்தியாவிலேயே முதன் முறையாக சென்னைக் கோட்டத்திற்கு உட்பட்ட ரயில்களின் நிலையினைக் காணும் வசதியை இணைய தளத்தில் அமைத்தார்கள். மக்களிடையே பெரும் வரவேற்புப் பெற்றது இந்த ஏற்பாடு. ஆனால் இணைய தளத்தைப் பயன்படுத்தும் வாய்ப்பை, குறைவானவர்கள் தானே பெற்றுள்ளனர்? எனவே இந்தச் சேவையை தொலைபேசி மூலமும் அறியும் வண்ணம் நடைமுறைப்படுத்த முடிவெடுத்தோம்!" என்றவர் இந்த ஏற்பாட்டின் சிறப்புகளைப் பட்டியலிட்டார்.

"பொதுவாகப் பயன்படுத்தக் கூடிய அத்தனைவிதமான வார்த்தைகளையும் ஏற்றுக் கொண்டு பதிலளிக்குமாறு கணினியை வடிவமைத்திருக்கிறோம். உதாரணமாக பெர்ல் சிட்டி, முத்துநகரம், தூத்துக்குடி இப்படி எந்த வார்த்தையைப் பயன்படுத்தினாலும் இந்த சிஸ்டத்தில் விவரம் கிடைக்கும். சென்னையிலிருந்து கிளம்பும் மற்றும் தொட்டுச் செல்லும் எந்த ரயில் தொடர்பான விவரத்தையும் பெறலாம்.

"ரயில் பயணிகளின் சேவையை மேலும் கூட விரிவு படுத்தியிருக்கிறோம். ரயில் பற்றிய விவரம் கேட்டறியும்போதே தேவைப்படும் உணவு மற்றும் கால் டாக்ஸியைக் கூட நீங்கள் முன்பதிவு செய்து கொள்ளலாம். அதாவது ஸ்டேஷனுக்குச் செல்லும்போதே, அங்குள்ள சிற்றுண்டியகத்தில் நீங்கள் தொலைபேசியில் கேட்டிருந்த சிற்றுண்டி தயாராக இருக்கும். ஸ்டேஷனுக்குப் போகவோ, பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பும்போதோ, கால் டாக்ஸியைப் பதிவு செய்து கொள்ளலாம். கையில் உங்கள் பதிவு எண் அட்டையைக் காட்டியபடி சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் இதற்கே உரிய இடத்தில் கால் டாக்ஸி காத்திருக்கும்" என்றார் மோகன் ராம்.

வருங்கால திட்டத்தில் தொலைபேசி மூலமாகவே, போகுமிடத்தில் ஹோட்டலில் தங்க, அறைகளை முன்பதிவு செய்யும் வசதியும் செய்யப்படும். இப்போது வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ள நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய தொலைபேசி எண் 2539 4888.

- ஜி.எஸ்.எஸ்.



# ஜில்லு மல்லு

—கதிர்



என்ன நடக்குன்னே தெரியலை... நீ ஜாலியா டீ.வி பாத்துக்கிட்டிருக்கே
போர் செய்திகள்
அமெரிக்கா—ஈராக் போர் பத்திதானே சொல்ற? இவ்வளவு நேரம் அதானே பார்த்துக்கிட்டிருந்தேன்.




என்ன, ஆக்ஷன் டீ.வில படம் பாத்தா மாதிரி அலட்சியமா சொல்ற...?
போருக்கு எதிர்ப்புத் தெரிவிச்சு நாங்க 'ஃபேஷன்' ஷோ நடத்தப் போறோம்.




போச்சுடா!
டமார்.. டும்!




நீ ஒவ்வொரு முறை டூ வீலருக்குப் பெட்ரோல் போடும்போதும், அந்தக் காசுலே ஒரு பங்கு யுத்தத்துக்குதான் போகுது!




நீ ஒவ்வொரு முறையும் கோக், பெப்ஸினு தள்ளும்போதுதான் அந்தக் காசு யுத்தத்துக்குப் போகுது!




அவங்க 'பழம்' விட்டாலும் இவங்க சண்டை தொடரும் போலிருக்கே!

அனோஷ்கா சங்கர், சினிமா உலகுக்குப் புதுவரவு! 'டான்ஸ் லைக் எ மேன்' என்ற படத்தில் நடிக்கிறார்.

'அனோஸ் கான்னா யாருப்பா?' என்று புருவம் உயர்த்துபவர்களுக்கு... பண்டிட் ரவிசங்கரின் மகள். ஐந்து கிராமி அவார்டுகளை அள்ளிய நோரா



# அட, அனோஷ்கா!

ஜோன்ஸின் சகோதரி. புகழ் பெற்ற சிதாரிஸ்ட்.

"இசைதான் என் லட்சியம், நோக்கம், ஆசை, மூச்சு எல்லாம். ஆனா மற்ற துறைகள்லயும் இறங்குவேன். இசை என்னைக் கட்டுப்படுத்தாது. என்னோட தோழி பமீலா ரூக், படத்தோட கதையைச் சொன்னா. பிடிச்சிருந்தது. காரணம் பரதம் சம்பந்தப்பட்ட கதை. பரதமும் கலைதானே?" என்று பழைய லாஜிக்கால் நியாயப்படுத்துகிறார் புதுமுகம் அனோஷ்கா.

"நடிக்க சம்மதிச்சுட்டேனே தவிர, அது ஒண்ணும் வெட்டிக் கொடுக்கற கேக்கை சாப்பிடற மாதிரி ஈஸியில்லை. ஒரு சவால்தான். படத்துக்காகப் பரதம் கத்துக்கிட்டேன். டிபிக்கல் இந்தியப் பெண் போல பேசி நடிக்கறதுதான் கஷ்டமாயிருக்கு. நிறைய ஒர்க் பண்றேன்" என்று சொல்லும்



அனோஷ்காவிடம் 'இனி மியூசிக் இரண்டாம் பட்சமா?" என்றால், வேகமாகத் தலையசைக்கிறார். "நடிப்புல முழுசா இறங்கிடமாட்டேன். சிதார்தான் எனக்கு எல்லாம்" என்கிறார்.

- ஏக்ஜி

# பால்காய்ச்சியாச்சு!



**எம்.**எல்.ஏ. ஹாஸ்டலின் எட்டாவது மாடியில் சாத்தான்குளம் சட்டமன்ற உறுப்பினர் நீலமேகவர்ணத்துக்கு வீடு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த வீட்டில் முன்பு குடியிருந்தவர் ஆண்டிப்பட்டி தொகுதி எம்.எல்.ஏவாக இருந்து, அம்மாவுக்காக ராஜினாமா செய்த தங்கத் தமிழ்ச் செல்வன்! சமீபத்தில் பால் காய்ச்சி புது வீட்டில் சென்னை வாழ்க்கையைத் துவங்கியிருக்கும் நீலமேகவர்ணத்தைச் சந்தித்தோம். மனைவி ஜெயாவை அறிமுகப்படுத்தினார். "இனி சென்னையிலும் உங்களுக்கு வீட்டுச் சாப்பாடு தான்" என்று நாம் சிரித்துக் கொண்டே சொன்னபோது, உடனே மறுத்தார் எம்.எல்.ஏ. "இல்லைங்க... இந்த வீடு பெரும்பாலும் தொகுதியிலிருந்து வரும் கட்சிக்காரங்க தங்கத்தான். வீட்டுல அவுங்க ஊருக்குப் போயிருவாங்க. அங்க இன்னும் ஒரு பெண் கல்யாணத்துக்கு இருக்கு" என்றார்.

நீலமேகவர்ணத்துக்கு வருமானம் தென்னை விவசாயம் மூலம்தான். "இரண்டு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாச்சு, பையனுக்குக் கல்யாணம் ஆகி, ஈக்காடுத்தாங்கலில் கடை வச்சிருக்கான். எதையும் எதிர் பார்க்கறதில்லை. கைக்காசு செலவழித்துத்தான் அரசியல் பண்ணி பழக்கம்" என்கிறார் நீலமேகவர்ணம். சென்னைக்கு வந்து போகும் போது வீட்டுக்கு எதுவும் வாங்கிச் செல்ல மாட்டாராம். "நாளைக்குப் பணம் இல்லாம போனா குழந்தைகள் ஏமாந்து போயிடுவாங்க, அதனால் எப்போதும் இந்தப் பழக்கம் இல்லை" என்கிறார்.

"சாத்தான்குளம் தொகுதியில் முன்பு ஒரு குடம் குடி தண்ணீர் ஒரு ரூபாய். இப்போ நிலைமை மாறிப் போச்சு. ஸ்ரீ வைகுண்டம் கூட்டுக் குடிநீர் திட்டம் செயல்படுகிறது. இது தவிர அம்மா, இந்த பின்தங்கிய தொகுதியை அப்படியே மாற்றிக் காட்டுவாங்க பாருங்க" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் நீலமேகவர்ணம்.

"சட்டமன்றத்தில் கன்னிப் பேச்சு எப்போது?"

"தயார் பண்ணிட்டிருக்கேன். அம்மா சொல்வாங்க."

— கௌசி

படம்: ராஜன்

'அம்மாவுக்கு நிச்சயமாப் பிடிக்கும்' - செண்பகம் திருப்தியோடு, அம்மிக் குழவியைச் செங்குத்தாக நிறுத்தி, துவையலை வழித்து எடுத்துக் கிண்ணத்தில் திரட்டினாள். பட்டுப் போல மசிந்து கைக்கு வழவழப்பாக இருந்தது.

அம்மா ராமக்கனி, ஒரு துவையல் பிரியை. 'துவையல் இருந்தால் போதும்; வேற தொடுகறியே வேணாம், உங்கம்மா கும்பா கும்பாவா சாப்பிடுவா' என்று அப்பா கேலி செய்வாங்க, 'அப்பா உயிரோடு இருக்கும் வரை'. அப்பாவின் குரல் அடங்கி ஒரு வருஷமாகிப் போச்சு. கேலி பண்ண அப்பா இல்லாமப் போயிட்டாங்கிறதுக்காகவோ, என்னவோ, அம்மாவின் நாக்கும் செத்துப் போச்சு. துவையலைத் தேடலை.

இன்னிக்குத் துணிந்து துவையலை அரைத்திருக்கிறாள் செண்பகம். இதுவரை, வீடு, வாசல் என்று உள்ளேயே முடங்கிக் கிடந்த அம்மா, முதன்முதலாப் பதனீர் காய்க்க மனைவிளைக்குப் போயிருக்கிறாள். அவள் மனம் ஒப்பிச் சாப்பிட வேண்டுமே. அதுக்காகத்தான் அம்மாவிடம் கேட்காமலேயே துவையல் அரைத்தாள் செண்பகம். இன்னொரு நம்பிக்கை. தான் அரைத்ததாலேயே அம்மா மறுக்காமல் சாப்பிடுவாள்.

திடீர்னு ஒரு சந்தேகம். 'இன்னிக்கு எப்படி இருக்குதோ?' ஒரு துளி துவையலை எடுத்து நாக்கில் வைத்து ருசி பார்த்தாள் செண்பகம். ராமருக்காகச் சேகரித்த பழங்களை சபரி கடித்துப் பார்த்த மாதிரி. 'வ்வா! சூர்னு இருக்கு!' திருப்தி.

'ப்ய்ங்ங்' - ஊர்ச் சாலையில் மினி பஸ்ஸின் ஹாரன் ஒலிக்கும் ஓசை. சோம்பேறித்தனமாக, தூங்கிக் கொண்டு கிடக்கும் இந்த தேரி யூரை, சத்தம் போட்டு கலக்கிப் புழுதி கிளப்ப, கொஞ்ச காலமாக வந்து போகும் சிற்றுந்து. செண்பகத்துக்கு, அது கடிகாரம்.

'ஐயோ, மணி பத்தாச்சே! அம்மா பசி தாங்க மாட்டாளே!' 'பயிரிப் பயிரி' (பதறிப் பதறி என்பதன் கிராமியத்திரிபு) பழைய கஞ்சியைப் பானையிலிருந்து எடுத்து, ஒரு தூக்குப்

# சில்வுக் கருப்பட்டி

1

பாத்திரத்தில் போட்டாள். நல்லவேளை, பழையது 'நொசு நொசு'ன்னு ஆகிவிடவில்லை. அம்மாவுக்குப் பிடிக்கிற மாதிரி பயிறு பயிறாக இருக்கு. தூக்குச் சட்டியையும், துவையல் கிண்ணத்தையும் ஒரு சின்ன ஓலைப் பெட்டியில் வைத்து எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

'நிலைமைக்கார வூட்டுப் பொண்ணுக, சமைஞ்சா, கல்யாணம் ஆகும்வரை அவங்களை வெளியே தெருவே பார்க்க முடியாது'. இது அந்தச் சமூகக் கட்டுப்பாடு. ஊரின் எதிர்பார்ப்பு.

காலம் காலமாக வீட்டு வாசலை விட்டு வெளியே போகாத அம்மா, இப்போ பதனீர் காய்க்க 'விளை'க்குப் போயாச்சு. வேலை யாட்கள் வைத்துப் பதனீர் காய்ந்த காலம் இப்போது மாறியாச்சு. இந்தக் குடும்பத்தின் பொருளாதாரத்தைத் 'துள்ளத் துடிக்க' விட்டுவிட்டு போனப்புறம் நெருக்கடிகள், நிர்ப்பந்தங்கள். சம்பிரதாயங்கள், பவுசுகள் எல்லாம் நீர்த்துப் போயாச்சு. அதனால் அம்மா விளைக்குப் போயிருக்கிறாள்.

## தாமரை மணாளன்



'இனிமே நான் மட்டும் வீட்டுக்குள் அடங்கி யிருந்தால், அது பம்மாத்து'.

சாப்பாட்டுப் பெட்டியைக் கைகளுக்குள் இடுக்கிக் கொண்டு காலடியைப் பெயர்த் தாள்.

'அக்கா!' - கூப்பிடும் குரல். அடுத்த வீட் டுப் படலைக்கு அப்பாலிருந்து இரண்டு பெண் விழிகள் தெரிந்தன.

வள்ளி. செண்பகத்தின் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து, கைவேலைகள் செய்து கொடுத்தும், கடைகண்ணிக்குப் போய்க் கொண்டுமிருந்த சின்னப் பொண்ணு. 'வள்ளி' என்றால், செண் பகத்துக்கு, பனிச்சென்று புளியங்காய்தான் நினைவுக்கு வரும்.

வீட்டிலிருந்து சற்றுத் தொலைவிலிருந்த புளிய மரத்திலிருந்து இளம் புளியம் பிஞ்சு களை, செண்பகத்துக்காகப் பறித்து வருவாள் வள்ளி. அந்தப் புளியம் பிஞ்சுகளை உரலில் போட்டு இடித்து உப்பு மிளகாய்ப் போட்டு செண்பகம் பக்குவப் படுத்துவாள். இருவரும் கூடித் தின்பார்கள். தின்னத் தின்னக் கூத் தாடுவாள், வள்ளி.

இப்போது ஒரு மாதமாக, புளியங்காய்ச் சங்கதி இல்லை. காரணம், வள்ளியும் வீட்டுக்கு வெளியே வருவதில்லை. 'பெரிய மனுஷி'யாகிவிட்டாள், ஒரு மாதத்துக்கு முன்.

அந்த வள்ளியின் குரல் கேட்டு, வாஞ் சையோடு திரும்பிப் பார்த்தாள், செண்பகம். "என்ன, வள்ளி?"

"அக்கா, நீங்க வெளியே போறீங்க போலிருக்கு."

"ம்..."

"வரும்போது, எனக்குக் கொஞ்சம் புளியங்கா பறிச்சுக் கொண்டாரீங்களா?" என்று கேட்டாள், வள்ளி.

வள்ளியைப் பார்த்துத் தலையை ஆட்டி விட்டு, பனங்காட்டை நோக்கி நடந்தாள். 'யார் கண்ணிலேயும் அநாவசியமாகப் பட்டு விடக் கூடாதே' என்ற பதற்றம் அவள் கால் நடையை வேகமாக இயக்கியது. வியர்க்க விறுவிறுக்க, தங்கள் 'மனைவிளை'ப் பக்கம் வந்து விட்டாள்.

தூரத்தில், வெள்ளைப் புடைவையைத் தோளோடு போர்த்திக் கொண்டு விடிலி (பதனீர் காய்க்க அடுப்பு போட்டிருக்கும் தற் காலிகக் குடிசை) பக்கமாக, ஒரு பனையடி யில் அம்மா ஒடுங்கி உட்கார்ந்திருப்பது, தெரிந்தது.

அம்மாவைக் கண்டதும் படபடப்பான வேகத்தை நிதானமாக்கி, மெல்ல நடந்து

"நாம மாமூல் வாங்குறோம்னு பத்திரி கையிலே ஜோக் எழுதறாங்க சார்!"

"அப்படியா! நம்ம சந்தோஷத்திலே ஜனங்களும் சந்தோஷப்படுறாங்களா? பலே! பலே!"

- எம். திவாகரன்

---

வந்தாள் செண்பகம்.

"அம்மா!"

மகளின் குரலை அங்கே கேட்டதும், திடுக்கிட்டு நிமிர்ந்தாள் தாய் ராமக்கனி அம்மாள்.

செண்பகம் தயக்கத்துடன், "அம்மா, மணி பத்தாச்சு. நீ இன்னும் சாப்பிடலையே... அதான்" என்று, தூக்குச் சட்டியைத் தாயின் முன்பாக வைத்தாள்.

தாய் ஏதாவது மறுப்பு சொல்லிவிடும் முன், அவளுடைய முகபாவத்தை அளந்த வாறே, "அம்மா, உனக்குப் பிடிச்ச துவையல் அரைச்சிருக்கேன். பழையதும் விதை விதையா நல்லா இருக்கு. சாப்பிடம்மா" என்றாள் வார்த்தைகள் கெஞ்சின; கொஞ்சின.

தூக்குச் சட்டியை வாங்கிப் பார்த்த தாய், "ஆமா, உனக்கு?" என்று மகளை நிமிர்ந்து பார்த்தாள். அப்போதுதான், 'தானும் சாப் பிடவில்லை' என்பது செண்பகத்துக்கு உறைத்தது.

"பானையிலிருந்த அவ்வளவு கஞ்சியை யும் அப்படியே ஊத்தி எடுத்துக்கிட்டு வந்திருக்கியேம்மா. என் ஒருத்தியோட வயிறு மட்டும்தான் பாழாப் போவுதா. நீ உட்காரு. நான் அள்ளி ஊட்டுறேன்." வாஞ்சையோடு அழைத்த தாயின் கண்கள் கலங்கின. மகளுக்கும்தான்.

"எனக்குக் கஞ்சி வேண்டாம்மா. நீ சாப் பிடணும்னுதான் நான் துவையல் அரைச் சேன். நீ சாப்பிடு. நான், நம்ம பனைப் பயினியை குடிக்கேன். ஆசையா இருக்கு."

அச்சமயம், குடுவையில் பதனீர் இறக்கிக் கொண்டு வந்தார், அவர்களுடைய பனை களில் பனையேற்று வேலை செய்யும் அரி கிருஷ்ணன். அவருக்குச் சொந்த ஊர் கன்யா குமரிப் பக்கம். பனையேற்று சீசனுக்கு வருடா வருடம் இவர்களைத் தேடி வந்து வேலைகளைப் பொறுப்பாக கவனிக்கும் வாடிக்கைக்காரர்.

"நம்ம அம்மணி ஆசைப்படும்னுதான் தேன் மாதிரி பயினி இறக்கிட்டு வந்திருக் கேன். சாப்பிடு தாயி!" என்ற அரிகிருஷ்ணன் பனை ஓலையை வெட்டி, அதில் கிண்ணம் போல் பட்டை பிடித்து செண்பகத்திடம்



கொடுத்தார். அவள் ஏந்திக் கொள்ள பதனீரைத் தெளித்து ஊற்றினார். கூடவே அவருடைய பாசமும் சொரிந்தது.

சந்தோஷமாகக் குடித்தாள் செண்பகம். அப்பா, தாத்தா காலத்திலிருந்து தங்களுக்குச் சொந்தமான பனையிலிருந்து இறக்கிய பதனீர் ஆயிற்றே. அப்பா விட்டுச் சென்றிருக்கும் ஒரே சொத்தான பனைவிளை அதுதான்.

ராமக்கனி அம்மாளைப் பார்த்து, "பெரியம்மா, நீங்க வந்திருக்கிங்களே, பதனீர் காய்க்க வருவாளே, வேலையாள் மாரியம்மா, அவ வரலையா?" என்று கேட்டார் அரிகிருஷ்ணன்.

"இல்லே, அவ இனிமே வர மாட்டா அவ மகனுக்கு பட்டணத்திலே ஏதோ வேலை கிடைச்சிருக்காம். இவளை வரச் சொல்லி லெட்டர் போட்டிருக்கானாம். போறா." என்ற ராமக்கனி அம்மாள் சட்டென்று குரல் கம்ம, "எனக்குத் தான் அப்படி லெட்டர் போட, ஆம்பளைப் புள்ளே இல்லே." என்றாள், ஏக்கத்துடன்.

"எதுக்கம்மா கவலைப் படறீங்க. ஆம்பளை என்னம்மா ஒசத்தி? எத்தனை ஆம்பளைப் பயலுக, பெத்தவங்களைத் தெருவிலே உட்டுட்டுப் பொண்டாட்டி முந்தானையைச் சுத்துறானுவ. இந்தக் காலத்தில பொம்பளைப் புள்ளைங்க தான் கஞ்சி ஊத்தும். நானும் ஊர் உலகத்தில பாத்துட்டேன். நம்ம செம்பவம் தங்கச்சி இருக்கும்போது என்ன கவலை" என்றார் அரிகிருஷ்ணன்.

"என்ன இருந்தாலும், அவ பொண்ணு தானே. தட்டிக் கூவ முடியுமா? அவங்கப்பா ஊருக்கெல்லாம் உபகாரியா இருந்தாவ. கடைசியில எனக்கு இந்த வெள்ளைச் சீலையையும் இவளுக்கு வெறுங்கழுத்தையும் விட்டுட்டுப் போயிட்டாவ." குரல் இறுகியது. முந்தானையால் கண்ணீரைத் துடைத்தாள் ராமக்கனி.

"அம்மா, வெசனப் படாண்டாம்! அய்யா நாராயணர் இருக்காரு. யாருக்கும் எந்த நொம்பலமும் இல்லாமக் காப்பாத்துவாரு... அய்யா உண்டும்." என்றார் அரிகிருஷ்ணன். அவர் சாமித் தோப்பு பகவான் வைகுண்ட சாமி பக்தர். நெற்றியில் வெள்ளையாய் ஒற்றை நாமம் சாத்தும் 'அய்யா வழி'க்காரர்.

அவர் தொடர்ந்து, "பெரியம்மா, நீங்க ஒத்தையில கெடந்து, தீயில வெந்து பயினி காய்க்காண்டாம். எம் பொஞ்சாதியை ஒங்க ஒத்தாசைக்கு வரச் சொல்லுதன்." என்றார்.

"வேணாம், அரிகிருஷ்ணா. வேலைக்கு ஆள் வச்சு பயினி காய்க்க எங்களுக்கு வசதி இல்லே." என்றாள் ராமக்கனி.

"எனக்கு எல்லாம் தெரியும்மா பெரிய அய்யா இருக்கும்போது, நாங்க வேணும்ங்கிறதை வாங்கிச் சாப்பிட்டிருக்கோம். நீங்க காசு பணம் தராண்டாம். ஒங்க திருப்திக்கு, தெனம் ரெண்டு கருப்பட்டியை அவளுக்குக் குடுங்க. போதும்." என்றார்.

ராமக்கனி மௌனமாக இருந்தாள். சம்மதத்துக்கு அறிகுறி.

திடீரென்று "அத்தை!" என்ற குரல் வந்தது.

கண்ணன், கையில் ஒரு துணிப்பையுடன் வந்து கொண்டிருந்தான்.

அவன், செண்பகத்தின் அத்தை மகன். அப்பா ராசலிங்கத்தின் உடன் பிறந்த தங்கை பூமணி அம்மாளின் மகன். பத்து கல் தொலைவிலுள்ள 'படுக்கப் பத்து' ஊரிலிருந்து வந்திருக்கிறான்.

"அத்தை, மினி பஸ்ல வந்தேன். நேரா நம்ம வீட்டுக்குப் போனேன். பூட்டியிருந்துச்சி. நீங்க எல்லாரும் விளங்காட்டுக்கு வந்திருக்கீங்கன்னு சொன்னாங்க. அதான் இங்கே வந்துட்டேன்." என்று தன் பயணக் கதையை விவரித்தான், கண்ணன்.

ராமக்கனி அம்மாள், மகள் செண்பகத்தைக் கண்டிப்பதுபோல் பாவனையாக, "பார்த்தியா, கூறுகெட்ட பொண்ணு கதவைப் பூட்டிட்டு வந்துட்டுது. பாரு, வீட்டுக்கு வந்த சொந்தக்காரப் புள்ளே, விளைக்குத் தேடி வரும்படி ஆயிட்டுது. ஏம்பா, கண்ணா! வீட்ல மயினி, அதான் ஒங்கம்மா, உன் தங்கச்சி செல்வி எல்லாரும் சௌக்கியமா?" என்று சமாளித்தாள்.

"நல்ல சௌக்கியம், அத்தை!" ஒரு விஷயமா உங்ககிட்டே பேசணும்னு எங்கம்மா இன்னைக்கு சாயங்கால பஸ்ஸுக்கு இங்கே வருவா. நான் ஒரு ஜோலியா உடன்குடிக்குப் போனவன், நேரா இங்கே வந்துட்டேன்." என்றான் கண்ணன், இனம் புரியாத உற்சாகத்துடன்.

"அதுக்கென்னப்பா, உன் மாமா வீட்டுக்கு நீ வர்றதுக்கு கேக்கணுமா? எல்லா விஷயமும்



அப்புறம் பேசிக்கிடலாம். நீ மொதல்ல பயினி குடி." என்றாள் ராமக்கனி.

அரிகிருஷ்ணன், இன்னொரு ஓலைப் பட்டையைப் பிடித்து கண்ணனுக்கும் பதனீர் ஊற்றினார். அவன் குடித்தான். குடிக்கும் போது, ஓரக் கண்ணால் தன் மாமன் மகள் செண்பகத்தைப் பார்த்தான். இப்போது, பதனீர் இன்னும் இனிப்பாக இருந்தது.

"செம்பவம், அத்தானைக் கூட்டிட்டு வீட்டுக்குப் போ. நான் பயினியைக் காய்ச்சிட்டு வாறேன்." என்றாள் ராமக்கனி.

"எல்லாரும் சேர்ந்து போவமே, அம்மா. வேணும்னா அத்தான் மட்டும் வீட்டில போய் இருக்கட்டும். சாவியைக் குடுத்து விடுதேன்." என்று தயங்கினாள் செண்பகம்.

கண்ணன் எதற்காக வந்திருக்கிறானோ, தனியாக அவனுடன் போனால் ஏதாவது ஏடாகூடமாகப் பேசுவானோ என்று செண்பகத்துக்குள் ஒரு நெளிவு.

"என்னடி, இது புதுசா? அவனைக் கூட்டிட்டுப் போறதுக்கு ஏன் இப்படி இழுக்கிறே. அவன் யாரு? நெனைவு தெரிஞ்ச நாள் முதலா நீங்க ஒண்ணா மண்ணா திரிஞ்சவுங்க தானே! வீட்டுக்கு வந்த புள்ளையை வெளங்காட்டிலேயேவா நிறுத்தி வைப்பாங்க. கூட்டிட்டுப் போ... போய் முருங்கையில ரெண்டு காய் பறிச்சு புளிக்கொழம்பு வை. கண்ணன் பிரியமாச் சாப்பிடுவான்." அம்மா துரத்தினாள்.

இருவரும் வீட்டை நோக்கி நடந்தார்கள்.

செண்பகம் ஒற்றையடிப் பாதை வழியே நடந்தாள். அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டு ஜோடியாக அவளோடு போக வேண்டும் என்பதற்காக, பாதையை விட்டு விலகி நடந்தான், கண்ணன்.

செண்பகத்துக்கு எரிச்சல். "ஏன் அத்தான், இப்படி பாதையை விட்டு நவுந்து முள் குத்துறாப்பில நடக்கிறீங்க. நல்ல பாதையில ஒண்ணு முன்னால போங்க; இல்லாட்டி பின்னால வாங்க." என்றாள்.

தன் மனத்தைச் சொல்ல முடியாமல், பின் தங்கி நடந்தான் கண்ணன்.

வழியை ஒட்டி புளிய மரம். காய்த்துத் தொங்கிக் கொண்டிருந்தது.

"அத்தான், கொஞ்சம் புளியங்காய் பறியுங்களேன்!" என்றாள் செண்பகம்.

'அவள் இமயமலையைப் புரட்டச் சொல்ல மாட்டாளா, சாய்த்து விடலாம்' என்கிற துடிப்பில் இருந்த கண்ணன், படு உற்சாகமாக, புளிய மரத்தில் தாவி ஏறி, கொத்து கொத்தாகப் புளியங்காய்களை உலுப்பி அள்ளிக் கொண்டு வந்து விட்டான்.

வீட்டை நோக்கி நடை தொடர்ந்தது. இப்போது கண்ணனுக்கு, 'அவள் கேட்டாள்; சாதித்தோம்' என்ற மிடுக்கு. நடையில் தெரிந்தது.

வீட்டை நெருங்கி, படலைத் திறக்கும் முன், "வள்ளி!" என்று குரல் கொடுத்தாள் செண்பகம்.

பக்கத்து வீட்டுப் படலை இடைவெளி வழியே வள்ளியின் முகம் தெரிந்தது.

"நீ புளியங்கா கேட்டே இல்லே! இவிய ஒரு செமைக்கு உலுப்பிக் கொண்டாதிருக்காவ. அம்புட்டும் ஒனக்குத்தான்!" என்று கண்ணனிடமிருந்து புளியங்காய்களை வாங்கி, அப்படியே வள்ளியிடம் கொடுத்தாள் செண்பகம்.

பொசுபொசுவென்று வந்தது கண்ணனுக்கு.

கதவைத் திறந்து இருவரும் வீட்டுக்குள் நுழைந்ததும், "செண்பகம், உனக்குன்னு எவ்வளவு கஷ்டப்பட்டு, சிராய்ப்பையெல்லாம் தாங்கிக்கிட்டு புளியங்காயைப் பறிச்சேன். அதை அவகிட்டே கொடுத்துட்டியே!" என்று குமுறினான் கண்ணன்.

செண்பகம் நிதானமாக, "இப்ப என்ன? யாருக்குத் தேவைப்பட்டுதோ அவளுக்குப் போய்ச் சேர்ந்தாச்சு. எனக்கு வேணாம்!" என்றவாறு, துரட்டியை எடுத்துக் கொண்டு முருங்கைக் காய் பறிப்பதில் கவனமானாள். கண்ணன் பக்கம் திரும்பவே இல்லை.

"அவளுக்கு 'வேணாம்'னா, புளியங்காயை மட்டும்தான் சொல்கிறாளா... அல்லது..?"

குழம்பி நின்றான் கண்ணன்.

(தொடரும்)

ஈராக் போர் பற்றிய கவலை... அதைச் சாக்காக வைத்து கம்மர்கட்டி லிருந்து கடலெண்ணெய் வரை எதன் விலை வேண்டுமானாலும் ஏறுகிறதே என்ற கவலை... ப்ரைவேட் காலேஜ் களெல்லாம் தங்களிஷ்டத் துக்கு ஃபீஸை நிர்ணயிக் கலாம் என்று அரசு அறிவித்துவிட்டதே, இனி என்ஜினீயரிங்கும் மருத் துவமும் என்ன விலை விற்குமோ என்ற கவலை... தற்செயலாகக் கொலை யுண்ட மூன்று தீவிரவாதி கள் லஷ்கர்-இ-தொய்பா ஆசாமிகள் என்பதும், மீண்டும் மும்பையில் தொடர் குண்டு வெடிப் புக்குத் திட்டமிட் டிருந்தார்கள் என் பதும் வெளிப்பட்ட தால் உண்டான கவலை... இப்படிப் புதுப் புதுக் கவலை கள் மும்பையை உலுக்கிக் கொண்டு தானுள்ளன. ஆனால் நாட்பட்ட சில கவலைகளும்... அதுவும் பத்துமாத காலக் கவலைகளும் சிலருக்கு உண்டே? உதாரணத்திற்கு மாதுரி தீட்சித் திற்குப் பிரசவ நேரம் நெருங்கிவிட்டதே. இன்னும் மும்பையிலிருக்கும் தாய் வீட்டிற்கு வரவில்லையே என்று எத்தனை உள்ளங்கள் தவித்தனவோ..? ஹூம்... மும்பைப் பத்திரிக்கையாளர்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்! அந்த அதிர்ஷ்டம் டென்வர்காரர்களுக்கு அடித்துவிட்டது. பிள்ளையாண்டான் அவசரக் குடுக்கையாக இரண்டு வாரமுன்பே அமெரிக்காவிலேயே பிறந்துவிட்டான். பேரனைப் பார்க்க இங்கிருந்து தாத்தா பாட்டி ஓடியிருக்கின்றனர். பெற்றோர் சந்தோஷக் குவியலாயிருக்கின்றனர். தந்தை, பிள்ளைக்கு பங்கீ ஜம்பிங், டென்னிஸ், பாஸ்கெட் பால் எல்லாம் திட்டமிட்டிருக்கிறாராம். குழந்தை 'ஏ.பி.ஸி.டி.' சொல்ல ஆரம்பித்துவிட்டதா என்கிறீர்களா? இப்போதைக்கு, 'நேனேவின் வாரிசு நானே' என்கிறதாம்!

'வாரிசு நானே' எனும்போது வெறும்

# அடி அல்லது அடி பணி!



* மாதுரி



* லதாவுடன் சச்சின்

பணத்துக்கு மட்டுமா? குலம், கோத்திரம், சாஸ்த்திரம், சம்பிரதாயம், பழக்க வழக்கம் எல்லாவற்றுக்கும் தானே வாரிசு? ஆனால் பார்ஸி மதத் தலைவர்கள் புதுச் சட்டம் வகுத்திருக்கிறார்களே? இனி பார்ஸி இனத்தைவிட்டு வேறு இனத்தில் மணம் புரிபவர்களை ஜாதிப் பிரஷ்டம் செய்து விடுவர். அவர்கள் 'அத்யாரி' களில் (பார்ஸி கோயிலில்) அடி எடுத்து வைக்கக் கூடாது. 'டெம்பிள் ஆஃப் சைலன்ஸ்' எனப்படும், பார்ஸிக்காரர்களின் மயான பூமியில் இவர்களுக்கு அனுமதி இல்லை. பார்ஸி இனம் எண்ணிக்கையில் குறைந்து வருவதைத் தடுக்க இந்தச் சட்டம் என்கிறார்கள். இதை அடுத்து பிரபல பார்ஸிகள் குரல் கொடுத்து வருகிறார்கள். டி.வி., சினிமா நடிகை தானாஸ் கரீம் ஓர் இஸ்லாமியரை மணந்திருப்பதால் பார்ஸியினத்திலிருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறார். 'இஸ்லாமாவது என்னை ஏற்றுக் கொண்டதே' என்று அங்கலாய்க்கிறார். 'என் அண்ணனும் பார்ஸி அல்லாத பெண்ணை மணந்திருக்கிறார். அதனால் அவர் குழந்தைகளை பார்ஸிகளாக வளர்க்க முடியாது' என்று கொதிப்பவரின் நியாயமான கேள்வி... "இப்படிப்பட்ட சட்டத்தால் பார்ஸிகளின் எண்ணிக்கை குறைகிறதா? பெருகுகிறதா?"

---

"உங்க வீட்டு வேலை செய்யணும்னா ஒரு கண்டிஷன்..."

"என்னது?"

"ஐயா வி.ஆர்.எஸ்.ல வந்ததும் என்னை நிறுத்திடக் கூடாது!"

- சீர்காழி வி.ரேவதி



குறைகிறதா? பெருகுகிறதா? என்ற சர்ச்சைக்கே இடமில்லாமல் பெருகிவரும் விஷயம் ஒன்று மும்பையில் இருக்கிறதென்றால், அது சந்தேகமேயில்லாமல் ஆஸ்பத்திரிகள்தாம்! லதாஜிக்கு நன்றிதான் சொல்ல வேண்டும். தந்தை தீனாநாத் மங்கேஷ்கர் நினைவாக அவர் கட்டும் மருத்துவமனையை மும்பையில்லாமல் புனேவில் அமைத்ததற்கு. ஆனால் அதற்கான 'பெனிஃபிட் மாட்ச்' நடைபெற்றது மும்பையில். நடத்தித் தந்தவர் சச்சின்.

'ரன்களைக் குவிக்க வேண்டுமென்றால் நான் லதாஜி பாடிய வேகப் பாடல்களில் ஒன்றை நினைவு கூர்வேன்' என்று சச்சினும், 'துரித கதியில் பாடவேண்டுமென்றால் நான் சச்சின் ஸிக்ஸர்களை நினைத்துக் கொள்வேன்' என்று மெலோடி க்வீனும் ஒருவருக்கொருவர் வெயிலுக்கேற்ற 'ஐஸ்' வைத்துக் கொண்டனர். 'நான் விளையாட்டாகத்தான் ஒரு பெனிஃபிட் மாட்ச் விளையாடும்படிக் கேட்டேன். உடனே ஒப்புக் கொண்டுவிட்டாரே' என்று இசைக் குயில் தழுதழுக்க, "லதாஜி அம்மா மாதிரி. அம்மா கேட்டால் முடியாது என்று சொல்ல முடியுமா?" என்று தமிழ் நாட்டுக் காற்றடித்ததுபோல் மெய் சிலிர்த்திருக்கிறார் சச்சின். ஏதோ பாட்டும், 'பாட்'டும் இணைந்தால் சரி!

சரியாக நடந்து கொள்ளாவிட்டால் 'சாரி' சொல்லித்தான் ஆக வேண்டும்... அது மத்திய அமைச்சர் சாஹிப் சிங் வர்மாவாகவே இருந்தாலும் கூட. பாருங்களேன். மும்பையிலிருந்து டில்லி செல்ல விருந்த ஜெட் ஏர்வேஸ் விமானம் கொஞ்சம் தாமதமாகக் கிளம்பியதால் இவர் சகட்டு மேனிக்கு ஊழியர்களிடமெல்லாம் வசை பொழிந்திருக்கிறார். அதில் ஒரு பெண்மணியிடமும் தவறாக நடந்து கொண்டிருக்கிறார். உணவு ஏற்றி வந்த வண்டியில் விமானம் வரை பயணித்திருக்கிறார். 'என்கொயரி' நடப்பதற்கு முன்பே 'ஜெட்' ஊழியர்கள் இவரிடம் மன்னிப்புக் கேட்டுவிட்டார்கள், நிர்வாகத்தின் நிர்பந்தத்தால். ஆனால் பெருந்தலைகள் நிமிர, தேர்தல்கள் வேறு நெருங்க, வாஜ்பாயி தலையீட்டால் வர்மா 'ஜெட்'டுக்கு மன்னிப்பு தெரிவித்தார்.

- **ஜெயஸ்ரீ ராஜ்**





• கவிதா



• இரா. சம்பத்

• பிரபா

**பி**ட்சாவும், குக்கீஸும் சாப்பிட்டு வயிறு வளர்க்க கற்றுக் கொண்டிருக்கும் இந்திய தேசத்தின் கலாசாரத்தை எது பிரதிபலிக்கிறது? ஆடைகளா? அணுகுமுறையா? இந்தத் தலைப்பைத் தேர்ந்தெடுத்த திருவண்ணாமலை அருணைப் பொறியியல் கல்லூரியின் மாணவ, மாணவியர் போட்டி போட்டுப் பிய்த்து உதறினார்கள் பேச்சில்.

இந்த நான்காவது பட்டிமன்றத்தின் நடுவராகப் பொறுப்பேற்று, அடிக்கடிச் சிரிக்கவும், நொடிக்கொருதரம் சிந்திக்கவும் வைத்தார் பேச்சுப் புயல் பெரியார் தாசன்!

**கே. ப்ரியதர்ஷினி – ஆடைகளே!**

● ஆள் பாதி; ஆடை பாதி என்று அனுபவித்துச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள். கலாசாரத்தை ஒருவன் தனது ஆடையால் வெளிப்படுத்த முடியவில்லை என்று சொன்னால், அவன் எப்படி அணுகுமுறையால் வெளிப்படுத்த முடியும்?

● கலாசாரம் என்பது உள்ளத்து உணர்வுகளின் பிரதிபலிப்பு: அத்தகைய உணர்வுகளைப் பிரதிபலிக்க ஆடைகள் மனிதனுக்கு ஊடகம். ஒரு பெண் திருமண வீட்டிற்குப் போகிறாள். தழையத்




• ஆசிரியர் சீதாரவி, பெரியார்தாசன், கல்லூரித் தலைவர் ஏ.வி. வேலு, இயக்குனர் பொன்முத்து

தழையப் பட்டுப் புடைவைக் கட்டி, தலை நிறையப் பூச்சூடிப் போகிறாள். துக்க வீட்டிற்கும் இதே தோற்றத்தோடு போனால் என்ன நடக்கும்? யோசித்துப் பாருங்கள்.

● ஒரு தேசத்தின் கலாசார வளர்ச்சியைத் தெரிந்து கொள்ளும் வரலாற்று ஆவணம் எதுவென்றால், அது ஆடைகளும், ஆபரணங்களும்தான். கையில் குழல் பிடித்து மகுடத்தில் மயிற்பீலி அணிந்திருந்தால்தான் அவர் ஸ்ரீ கிருஷ்

## ஏட்டிக்குப் போட்டி

# கலாசாரத்தை ஆடைக்குள் அடக்க முடியுமா?



• பெரியார்தாசன்

ணன். அவரே கையிலே மௌனத் ஆர்கனும், கண்களில் ரேபான் கண்ணாடியும் அணிந்திருந்தால் ஏற்றுக் கொள்வோமா? அவர் வாழ்ந்த காலத்தை இந்த ஆடை பிரதிபலிக்கவில்லை என்று அதை நகைச்சுவையாகத் தான் எடுத்துக் கொள்வோம்.

### இரா. சம்பத் - அணுகுமுறையே!

● மாற்றம் என்பதுதான் மானுடத் தத்துவம். நிமிஷத்திற்கு ஒரு ஃபாஷன் அறிமுகப்படுத்துகிற ஃபாஷன் டீ.வி காலம் இது. குக்கிராமத்து குப்பம்மா தொடங்கி, மும்பையில் வசிக்கிற மிஸ் இந்தியா வரைக்கும், அழகு பற்றிய விழிப்புணர்வோடு வாழ்ந்து கொண்டிருக்கிற காலம். இப்படித்தான் ஆடை என்பது படிப்படியாக மாறிக் கொண்டே வந்திருக்கிறது.

● பெண்களில் தொண்ணூற்றெட்டு சதவிகிதம் பேர் இன்று சுடிதார் அணிகிறார்கள். ஆண்கள் அறுபது சதவிகிதம் பேர், பேண்ட் சட்டை அணிகிறார்கள். இதனால் இந்தியக் கலாசாரம் அழிந்து விட்டது என்று அர்த்தமா? இன்றைக்கும் இந்தியாவின் கலாசாரம் உலக அரங்கிலே போற்றப்படுகிறது, பாராட்டப்படுகிறது என்றால், அதற்குக் காரணம் நமது அணுகுமுறைதானே?

● தட்ப வெப்பத்திற்கு ஏற்ப, அதிகாரத்திற்கு ஏற்ப, அந்தஸ்துக்கு ஏற்ப, ஆடையை மாற்றிக் கொள்வதுதான் மனித இயல்பு. அதுவே அணுகுமுறையை ஒருவன் அடிக்கடி மாற்றிக் கொண்டால், அவனை கலாசாரம் மிக்கவனாக அங்கீ



• பிராபாவதி



• சங்கீதா



• ப்ரியதர்ஷினி

கரிக்க மறுக்கிறது, இந்தச் சமூகம். அப்படிப்பட்டவனுக்குப் பச்சோந்தி என்று பட்டம் சூட்டி அஃறிணையாக்கி விடுகிறது.

● ஆடையே இல்லாத கலாசாரத்தை மகாவீரர் அறிமுகப்படுத்தியபோது மக்கள் எதிர்த்தார்கள். அதை 'ஜைனம்' என்கிற அணுகுமுறையாக வழங்கிய போது ஏற்றார்கள். விவேகானந்தரும் காவி அணிந்திருந்தார். கம்பி எண்ணிக் கொண்டிருக்கிற பிரேமானந்தாவும் காவி அணிந்திருந்தார். விவேகானந்தரை தெய்வம் என்று போற்றுகிறது சமுதாயம்... பிரேமானந்தாவை கூவம் என்று தூற்றுகிறது... ஏன்? அணுகுமுறை!

### பி. சங்கீதா - ஆடைகளே!

● ஆடை என்பது கலாசாரத்துக்கு கலாசாரம் வேறுபடும். தேசம் முழுமைக்கும் ஒரு கலாசார ஆடை உண்டு. மாநிலத்திற்கென்று கலாசார ஆடை உண்டு. அவ்வளவு ஏன்? இந்துக்களின் புனித ஆடை காவி. கிறிஸ்துவர்களின் புனித ஆடை வெண்மை. இஸ்லாமியர்களின் புனித ஆடை பச்சை. இவை மூன்றும் சேர்ந்ததுதானே நமது தேசியக் கொடி! இது நமது கலாசாரத்தை வெளிப்படுத்தவில்லையா?

● எனது வீட்டிற்குப் பக்கத்திலே ஒரு முதிர்ந்த சுதந்திரப் போராட்ட தியாகி. அவரிடம் போய், 'தாத்தா, எங்கள் கல்லூரி சுதந்திர தின விழாவுக்கு வந்து கொடியேற்ற வாருங்கள்... இளைஞர்கள் படிக்கிற கல்லூரி என்பதால் வரும்போது ஜீன்ஸ் - டீ சர்ட் அணிந்து வாருங்கள்' என்றால் ஒப்புக் கொள்வாரா? கதர் அணிவது, அவரைப் பொறுத்தவரை ஆடையல்ல, எளிமையின் தத்துவம். அது தான் அவருக்கு வாழ்க்கை.

● நடுவர் அவர்களே, கருத்தம்மா படத்தில், பழுப்பு ஏறின அழுக்கு வேட்டி அணிந்து, ஒரு ஏழை விவசாயியாக நடித்தீர்கள். "ஐயா! நான் ஒரு பேராசிரியர்... இப்படியொரு ஆடை அணிந்து நடித்தால் அவமானம்" என்று பேண்ட் சட்டையோடு நீங்கள் நடித்திருந்தால் உங்கள் கதாபாத்திரம் எடுபட்டிருக்குமா?

"இன்னொரு முறை கண்டிப்பா அமைச்சரவை மாற்றம் வரும்னு எப்படிச் சொல்றீங்க?"

"இதுவரைக்கும் இருபத்தாறு முறை மாற்றம் நடந்திருக்கு; தலைவிக்கு ராசியான எண் ஒன்பது ஆச்சே!"

- சீர்காழி வி. ரேவதி



### பி. கவிதா - அணுகுமுறையே!

● ஒரு நாட்டின் கலாசாரத்தைத் தெரிந்து கொள்ள அந்த நாட்டின் கலை ஊடகங்களைப் பார்த்தால் புரியும். இவை போலத்தான் ஆடைகளும் ஒரு சிறு ஊடகம். கலாசாரம் ஒரு கடல். அதை ஆடைக்குள் அடக்க நினைப்பது அறியாமை.

● பாரதிக்கு முண்டாசுக் கவி என்றொரு பெயரே உண்டு. ஆனால் பாரதி அறியப்பட்டது அவரது கவிதைகளுக்காகத்தானே தவிர, முண்டாசுகட்டி, கோட் அணிந்திருந்தார் என்பதற்காக அல்ல, சரி, பாரதியை விட்டு விடுவோம்... திருவள்ளுவருக்கு வருவோம். திருவள்ளுவர் காலத்தில் புகைப்படம் கிடையாது.நேரில் பார்த்தவர்கள் இல்லை. இதனால் இவர் இப்படி இருந்திருக்கலாம் என்று யூகித்து, ஒரு முடிவு செய்து ஒரு தோற்றத்தை அவருக்குக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் தமிழனுக்கு மட்டுமல்ல, ஒட்டு மொத்த உலக சமுதாயத்திற்கும் எப்படி வாழ்வது என்று குறுகத் தறித்த குறளில் அணுகுமுறைகளை கொட்டிக் கொடுத்துவிட்டுப் போனதால் அல்லவா, வான் புகழோடு வள்ளுவன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்?

● உறவினர் வீட்டிற்குப் போகிறோம். நல்ல விலையுயர்ந்த ஆடை அணிந்திருக்கிறார்கள். நம்மை வரவேற்று உட்கார வைத்து, மணிக்கணக்கில் பேசி அனுப்புவதா நல்ல அணுகுமுறை? குடிசை வீட்டில் வசிக்கிற ஏழை என்றாலும் முதலில் கொண்டு வந்து தருகிற அந்த ஒரு குவளை நீரில் அல்லவா இருக்கிறது நமது விருந்தோம்பல்? அதுதானே நமது அணுகுமுறை? முன்பின் தெரியாத வெவ்வேறு

கலாசாரத்தைச் சேர்ந்த இருவர் சந்தித்துக் கொள்கிறபோது, உறவின் கதவுகளைத் திறந்து விடுவது இந்த அணுகுமுறைதானே?

### ஏ. பிரபாவதி – ஆடைகளே!

● ஆடை இல்லா மனிதன் அரை மனிதன் என்று சொல்லிக் கொண்டிருப்பவர்கள் நாம். ஆழமாக நோக்கினால் புரியும், மனிதனது எண்ணங்களைத் தூண்டி விடுவது, செயல்களைத் தீர்மானிப்பது அவனது உடல் மொழியை நிர்ணயம் செய்வது, அவன் அணிந்திருக்கும் ஆடைகள் தான். வேட்டி கட்டிய மனிதனிடம் எளிமையும் உண்டு. கம்பீரமும் உண்டு. புடைவை கட்டிய பெண்ணிடம் அடக்கமும் உண்டு. வேகமும் உண்டு.

● நிர்வாணத்தை அணிந்திருந்த மனிதன் ஆடைகளை என்று அணிய ஆரம்பித்தானோ, அன்றே அவன் கலாசாரம் மிக்கவனாக, பண்பாடு உடையவனாக நாகரிகம் கற்றுக் கொண்டவனாக மதிக்கப் பட்டான். ஆடை அணிகளைப் பயன்படுத்தத் தொடங்கிய பிறகே கற்கால மனிதன், தற்கால மனிதன் என்று வரலாறு அவனைப் பகுத்துப் பார்க்கிறது.

ஒரு பாதிரியார் ஜீன்ஸ், டீ சர்ட் அணிந்து அற்புதமாகப் பிரசங்கம் செய்தார். பிரசங்கத்திற்குப் போய் வந்தவரைப் பார்த்து, போக முடியாதவர் கேட்டார். "பிரசங்கம் எப்படி இருந்தது?" "நன்றாகத்தான் இருந்தது. ஆனால் ஏதோ ஒன்று உறுத்தியது, இடித்தது!" அந்த உறுத்திய ஒன்று பாதிரியார் தரித்திருந்த ஆடை அல்லவா? எத்தனை சிறப்பான பிரசங்கம் என்றாலும் அவர் அணிந்திருந்த ஆடையால் அது எடுபடாமல் போய்விட்டது. இதுதான் நடைமுறை.

### பிரபா - அணுகுமுறையே!

● தேர்வு எழுதப் போகிறோம். சரியான விடைகளை எழுதாமல் விடைத்தாளை அலங்காரம் செய்து கொடுத்து விட்டு வந்தால் தேர்வு முடிவு என்னவாக இருக்கும்?

● திருவண்ணாமலையிலே விளங்குகிற ரமண மகரிஷி அரையாடைதான் அணிந்திருந்தார். ஆனால் அவர் வாழ்ந்து காட்டிய முறையை நாம் கொண்டாடுகிறோமே ஏன்...? அவரது அணுகுமுறையல்லவா!

ஒரு புகழ் பெற்ற ஆங்கிலக் கவிஞர் தமிழ்நாட்டிற்கு வந்திருந்தார். கோட், சூட் அணிந்துகொண்டு போய், கூட்டம் கூட்டமாய் அவரை எல்லோரும் பார்த்துவிட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். எளிமையான வேட்டி – சட்டையில், அந்த கவிஞரைப் பார்க்கப் போயிருந்தார் நமது கண்ணதாசன். அவரை யாரும் உள்ளே கூப்பிடவில்லை. உடனே கண்ணதாசன் என்ன செய்தார் தெரியுமா? "The outstanding poet of Tamilnadu is standing out" என்று ஒரு காகிதத்தில் எழுதிக் கொடுத்து அனுப்பினார். இதைப் படித்துப் பார்த்த ஆங்கிலக் கவி அலறியடித்து ஓடி வந்து நமது கவிஞரை உள்ளே அழைத்துப் போனார். இங்கே தமது தமிழ்ப் புலமையைக் காட்டாமல், வந்திருப்பவர் ஓர் ஆங்கிலக் கவிஞர் என்று உணர்ந்து ஆங்கிலத்தில் குறிப்பெழுதி அனுப்பியது புத்திசாலித்தனமான அணுகுமுறை.



"அந்த வீட்டில் கொள்ளையடிச்சவன் தத்துவம் படிச்சு தேறினவனாத்தான் இருக்கணும் சார்!"

"எப்படி கண்டுபிடிச்சே?"

"போகும்போது கதவில் 'எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது; எது இன்று உன்னுடையதோ, அது நாளை மற்றவனுடையதாகிறது" என்று எழுதிட்டுப் போயிருக்கறான்!"

- வடவள்ளி ஆர்.எஸ். மணி

### பேராசிரியர் பெரியார்தாசன் - தீர்ப்புரை

கலாசாரம் என்பது மதமா, கல்வியா, அறிவா? எதுதான் கலாசாரம் என்று நம் நாட்டில் முடிவாகாத நிலையில் இப்படியொரு அரிய தலைப்பை மாணவர்கள் கையிலெடுத்து, அற்புதமாக வாதிட்டிருக்கிறார்கள். கலாசாரத்தை வெறும்




• பட்டிமன்ற மேடையில்...

ஆடைகளுக்குள் அடைத்து விட முடியுமா? ஆனால் இப்படியொரு முடிவுக்கு வந்துவிடலாம். கலாசாரத்தின் புறநிலைக் குறியீடு ஆடை என்றால், அகத்தின் குறியீடு அணுகுமுறை.

இங்கே திருவள்ளுவரின் தோற்றம் குறித்துப் பேச்சு வந்தது. திருவள்ளுவருக்குப் பெர்முடாஸ் போட்டு, பிரெஞ்சு பாணி குறுந்தாடி வைத்தால் கந்தலாகப் போய்விடும்... மலேசியாவிலிருந்து வந்திருந்த ஒரு தமிழர் கேட்டார்.. குமரி முனையிலே வள்ளுவர் நடனமாடுவது போல ஒரு சிலையை வைத்து விட்டீர்களே என்று. அவருக்கு நான் சொன்னேன்.

கால் பகுதி நடனமாடுவது போல இருக்கிறது என்றால் அது நளினமாக காமத்துப் பாலைக் குறிக்கிறது. புடைத்த தோள் வலிமையான வீரத்தை வெளிப்படுத்தும் அரசியல் பகுதியான பொருட்பாலைக் குறிக்கிறது. அவரது அடர்ந்த கொண்டை இல்லற நிலைக்கும், நீண்ட தாடி துறவற நிலைக்கும் அடையாளம் என்றேன். குமரியிலிருக்கும் வள்ளுவர் சிலையை நான் தோற்றத்திலிருந்து அணுகவில்லை. கருத்துக்களின் அடிப்படையில் தோற்றத்தை அணுகினேன். அதனால் தோற்றத்திற்குப் புது விளக்கம் கிடைத்தது. ஒருகால் திருக்குறளைப் படிக்காமல் இருந்திருந்தால், இது கிடைக்காமல் போய் இருக்கலாம்.

மனித நேயத்தை, தாய்மையை, எளிமையை வெளிப்படுத்தும் முகமாகத்தான் அன்னை தெரசா, வெள்ளுடை அணிந்தார். மருத்துவமனையிலே நர்சுகளுக்கு வெள்ளைத் துணி கொடுத்ததும் இதே நோக்கோடுதான். ஆக தோற்றம் முக்கியத்துவம் பெறுகிறது நிச்சயமாக. ஒவ்வொரு இடத்திற்கும் ஓர் உடை அணிந்து செல்கிறோம் என்றார்கள். ஆனால் எல்லாவற்றையும் ஒரே நேரத்தில் அணியவும் முடியாது. அப்படியானால் என்ன செய்வது? அணிகிற உடை எதுவாயினும், அணுகுமுறை சிறந்து விளங்கவில்லை என்றால், அவனை கலாசாரம் மிக்கவனாக மனிதர்கள் எடுத்துக் கொள்வதில்லை.

மனிதன் கால்களால் நடப்பவன். அதனால் அவனை கால்நடை என்று சொல்லி விடுவதில்லை. விலங்குகளும் கால்களால் நடக்கின்றன. ஆனால் மனிதன் மனத்தாலும் நடப்பவன். மனப்படி நடப்பவன். பார்க்கத் தகுந்ததில் சிறந்ததை மட்டும் தேர்ந்தெடுத்துப் பார்ப்பது சிறந்த தமிழ்க் கலாசாரம் என்று வைத்துக் கொண்டால், அது மற்றவர்களுக்குத் துன்பம் தரக் கூடியதாக இருக்கக் கூடாது. பேசும் பேச்சு சிறந்ததாக இருக்க வேண்டும் என்றால் அது கனியாக இருக்க வேண்டும். காயாக இருக்கக் கூடாது என்கிறார் வள்ளுவர். இனிய சொற்கள் நிறைய இருக்கும்போது, ஏன் கடும் சொற்களைப் பேசுகிறீர்கள் என்று கேட்கிறார்.

ஆக நீங்கள் பார்க்க விரும்புகிற, பேச விரும்புகிறவைதான் உங்களைப் பிரதிபலிக்கக்கூடியவையாக இருக்கின்றன. என்னைத் தமிழகத்தின் தலை சிறந்த பேச்சாளர்களில் ஒருவர் என்று சொல்கிறார்கள். ஆனால் இளம் வயதில் பத்து வார்த்தைகள் கூடப் பேசத் தெரியாத திக்குவாய்க்காரனாக இருந்தேன் என்றால் நம்ப முடிகிறதா? தொடர்ச்சியான பயிற்சியாலும், முயற்சியாலும் இந்தக் குறையை வென்று, நான் உங்கள் முன்னால் பேசிக் கொண்டிருக்கிறேன். அப்படியானால் நீ எதை முயற்சிக்கிறாயோ... அதுவாகவே நீ ஆவாய் என்பதே அனுபவத் தத்துவம். அணுகுமுறைக்கும் இது பொருந்தும். அணுகுமுறையில் நாம் எதைப் பின்பற்றுகிறோமோ, அதுவே நமது கலாசார வழக்காக மாறி விடுகிறது. ஆக கலாசாரத்தைப் பிரதிபலிப்பது... ஆடைகளைக் காட்டிலும் அணுகுமுறையே!

தொகுப்பு: ஆர்.சி. ஜெயந்தன்
படங்கள்: ஸ்ரீஹரி





# மைக்ரோ சிப் டாக்டர்!

ஒரு மருத்துவமனையின் அவசரச் சிகிச்சை பிரிவு. விபத்தில் அடிபட்டு, பேச்சு மூச்சு இல்லாமல் கொண்டு வந்து போட்ட ஒரு நபரை எதிர்கொள்கிறார் மருத்துவர். அவர்கூட யாரும் வரவில்லை. அவரது மருத்துவ சரித்திரம் தெரியாமல், அவருக்குச் சர்க்கரை வியாதியா, ரத்த அழுத்தமா, எந்த மருந்துக்காவது அலர்ஜியா? என்னவென்று தெரியாமல் சிகிச்சை அளிக்க வேண்டிய மருத்துவர் எப்படித் திண்டாடுவார், நினைத்துப் பாருங்கள்...!

மாறாக, அந்த அத்யாவசியத் தகவல்கள் எல்லாம் அடங்கிய விவரம் அந்த நோயாளியின் உள்ளங்கையிலேயே ஒட்டப்பட்டிருந்தால், மருத்துவருக்குச் சிகிச்சை அளிப்பது எவ்வளவு சுலபம்? இந்த உள்ளங்கை நெல்லிக்கனி ஐடியாவைச் செயலாக்க ஓர் இலகுவான "சிப்" ஒன்றை ப்ளோரிடாவைச் சேர்ந்த அமெரிக்க நிறுவனம் ஒன்று அறிமுகப்படுத்தியிருக்கிறது.

ஒரு பச்சரிசி சைஸில் இருக்கிறது அந்தச் சில்லு. அதில் நோயாளிக்கு இருக்கும் சர்க்கரை வியாதி, அவருக்கு பெனிசிலின் மருந்தால் அலர்ஜி, அழகான நர்ஸை பார்த்தால் ரத்த அழுத்தம் எகிறும் சாத்தியக்கூறு, என்று அத்தனை தகவல்களையும் புகட்டி வைத்துக் கொள்ளலாம். அதை நோயாளியின் உடம்பில் ஓர் ஊசி போடும் பத்து விநாடி நேரத்தில் கையில் பொதித்து விடலாம். விபத்தில் அடிபட்ட அவசர நோயாளியோ, சாதாரண செக்கப்புக்கு வந்த நபரோ, யாராயிருந்தாலும் அந்த மைக்ரோ சிப்பு பொதித்த ஆசாமியாய் இருந்தால் ரொம்ப எளிது. அந்த மைக்ரோ சிப்பைப் படிக்க ஒரு விசேஷ ஸ்கேனர் இருக்கிறது. அதை அதன் மேல் நீவினால் அது எழுப்பும் ரேடியோ அலைவரிசை சிக்னலில், அந்த மைக்ரோ சிப்பின் தனித்தன்மையான சங்கேத எண்ணைப் படித்து, அது இணைக்கப்பட்ட இணையம் சார்ந்த தளத்தில் இருக்கும் நோயாளி பற்றிய விவரங்களைக் கொட்டி விடும். ஒரு நொடியில் சிகிச்சை ஆரம்பித்துவிடலாம்.

இந்த சில்லின் பெயர் வெரி சிப்ஸ். இந்தத் தகவல் வங்கி அரிசியை உடம்பின் உள்ளே வைத்துத் தைக்க ஆகும் செலவு சுமார் இருபதாயிரம் ரூபாய். வருடா வருடம் இதற்கு பத்து டாலர் சந்தா கட்டணும் அவ்வளவே.

ப்ளோரிடாவில் மூன்று பேர் அடங்கிய ஒரு குடும்பத்திற்குச் சில மாதங்களுக்கு முன்பு இந்த சில்லுகள் வைத்துப் பரீட்சித்திருக்கிறார்கள்.

இதற்கு ஏகமாய் எதிர்ப்பு இருக்கிறது. இந்தச் சௌகரிய வஸ்துவுக்கு என்ன எதிர்ப்பு?

முதலாவதாய் இதற்காக ஸ்கேனர், கம்ப்யூட்டர் என்று இதை செயல்படுத்தவே ஒரு அரை வண்டி கருவிகள் நிறுவுவதில் பாதி மருத்துவமனைகளுக்குச் சம்மதம் இல்லை. முக்கியமாய் இந்தத் தகவல்களைத் தரும் சிறிய கருவிகளைச் செய்யும் போட்டி நிறுவனங்கள் இதை ஒத்துக் கொள்வதாய் இல்லை.

இரண்டாவது இந்தச் சில்லு. ஜி.பி.எஸ். என்னும் கண்காணிக்கும் நுட்பத்தோடு இணைக்கப்பட்ட வசதி கொண்டது. இதன் மூலம் இந்தச் சில்லு பதித்தவர்களை அவர்கள் இருக்கும் இடத்தைக் கணிக்க வசதியிருக்கிறது. அதைக் கேட்டு பாதிப் பேர் பயந்துவிட்டார்கள். சிப் பொதிந்திருப்பவர்கள், "இன்னைக்கு ஆபிசில் தலைக்கு மேல வேலை இருக்கு. பத்து மணிக்குதான் வருவேன்'' என்று மனைவியிடம் பொய் சொல்லிவிட்டு பார் போய் பியர் அடிக்க முடியாது. மனைவி கண்டு பிடித்துவிடுவார் (ஜி.பி.எஸ். இல்லாமலே மனைவிகள் கண்டு பிடிப்பார்கள்... என்பது வேறு விஷயம்!) ஏற்கெனவே சிறைச்சாலையில் கைதிகள் கையில் பொதித்து அவர்களைக் கண்காணிக்க இந்தச் சில்லு பரீட்சார்த்த முறையில் உபயோகப்படுகிறது. இந்த சிப்பை பொதித்து வைத்துக் கொண்டால் தங்களைச் சதா மோப்பம் பிடிப்பார்கள் என்ற கிலி எல்லாருக்கும் பரவிவிட்டது.

மனிதர்களுக்கு 'பார் கோட்' போட்டு, கடையில் விற்பனை செய்யும் பொருள் மாதிரி பாவிக்கும் இதன் இயந்திரத் தன்மையை, பாதிப் பேர் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் இது காலத்தின் கட்டாயம் என்கிறார்கள் இதை அறிமுகப்படுத்திய நிறுவனத்தார். இந்த நுட்பத்தைப் பிரபலப்படுத்த, அந்த ப்ளோரிடா நிறுவனம் ஸ்கேனர்கள் மற்றும் இதர கருவிகளை, கட்டணம் வசூலிக்காமல் வழங்குகிறது.

போகிற போக்கில், மருத்துவமனையில் டாக்டருக்குப் பதிலாக அறையில் உட்கார்ந்திருக்கும் ரோபாட்டிடம் கையை நீட்டி, அது நம்மை ஸ்கேன் செய்து மாத்திரை எழுதித் தரும் நிலை வந்தால் ஆச்சரியமே இல்லை.

**- ஆனந்த் ராகவ்**



"இனி நீங்க சாப்பாட்ல அரிசி, கோதுமை, மட்டன், சிக்கன்லாம் சேர்க்கக் கூடாது!"

"ஏன் டாக்டர்?"

''அப்பதான் நீங்க என்னோட பில் பாக்கியைத் தரமுடியும்!''

- எஸ்.முகம்மது யூசுப்





''கொடுத்த கடனைத் திரும்பக் கேட்டால் என்ன சால்ஜாப்பு சொல்றதுங்கிறதுக்கு ஒரு விவஸ்தையே இல்லாம போயிடுச்சு...''

''ஏன், இப்ப என்ன புதுசா சொல்றான், முருகேசன்?''

'' 'அமெரிக்கா-ஈராக் யுத்தத்தால மனசொடிஞ்சு போயிருக்கேன். இப்ப என்னை எதுவும் கேட்டு இன்னும் நொந்து போகச் செய்யாதே'ன்றான்!''

- உ. ராஜாஜி



OFFER OFFER

நன்றி! நன்றி!! நன்றி!!!

10வது ஆண்டு பூர்த்தி!

# ஆத்ரேயா

★ ரெடிமேட் ரவிக்கைகள் ★ பெட்டி கோட்ஸ் ★ நைட்டீஸ்



10வது ஆண்டுவிழா கொண்டாடும் இந்த நேரத்தில் எங்களுக்கு அமோக ஆதரவு தந்த அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் பத்திரிக்கை துறையினருக்கும் தொலைகாட்சி நிறுவனத்தார்களுக்கும் மற்றும் எங்களிடம் பணிபுரியும் அனைத்து உழைப்பாளர்களுக்கும் எங்களது மனப்பூர்வமான நன்றியை தெரிவித்துக் கொள்கின்றோம். இதே போல என்றும் தொடர எல்லாம் வல்ல இறைவன் பாதம் பணிகின்றோம்.

## சிறப்புச் சலுகை

**10.04.2003 முதல் 21.04.2003 வரையில்**

- உங்களது பீரோவில் உள்ள அனைத்து பழைய ரவிக்கைகளுக்கும் விடை கொடுக்கும் நாள்
- **ஒரு பழைய** ரவிக்கையை கொடுத்து **ஒரு புதிய ஆத்ரேயா ரெடிமேட்** ரவிக்கையை ரூ.12 தள்ளுபடி செய்து எடுத்துச் செல்லவும்
- எவ்வளவு ரவிக்கைகள் வேண்டுமானாலும் **எந்த நிலையில் இருந்தாலும்** கொண்டு வாருங்கள்.
- ஆத்ரேயாவில் தள்ளுபடி போன்ற விஷயங்கள் எப்பொழுதாவது ஒரு முறைதான் வரும் என்பது உங்களுக்கு ஆனந்தமே.






™ **ATHREYA GARMENTS**

House of Blouses

No.1, Jambulingam Street, (Valluvar Kottam High Road), Nungambakkam,
Chennai - 600 034. ☎ 28226586 Fax : 091-044-25360076
Website : www.athreyawoman.com E-mail : ols@md3.vsnl.net.in

CHARY'S

| | | |
|---|---|---|
| SINGAPORE | : | MUSTAFFA (OLD) NALLI Pvt. Ltd., |
| UAE | : | LULUCENTRE |
| KARAIKAL | : | EVE'S PARK, BARATHIYAR STREET, |

OFFER OFFER



# ஏறு நூறு

# 7

கல்லூரிப் படிப்பு முடித்ததும் வேலை தேட ஆரம்பித்தான் சேகர். தினசரிகளில் ஏதாவது விளம்பரம் வருகிறதா என்று பார்ப்பான். உறவினர்கள், நண்பர்கள் மற்றும் பார்க்கிறவர்களிடம், "ஏதேனும் ஓபனிங் இருந்தா சொல்லேன்?" என்பான் எப்போதாவது. அத்தோடு சரி.

கேரியர் பிளானிங் அல்லது கேரியர் பற்றி முடிவு எடுக்கிறவர்கள், சேகர் மாதிரி இருக்கலாமா?

கூடாது. கசியும் தகவல்களை மட்டும் வைத்துக் கொண்டா ஒருவர் வேலையைத் தேடுவது?

கேரியர் பற்றியும், வேலை வாய்ப்புத் தரும் நிறுவனங்கள் பற்றியும் முழுமையாகத் தகவல்கள் திரட்டி, முறையாகச் செயல்பட வேண்டாமா?

கேரியர் பற்றித் தீர்மானிக்கும் முன்னால், கீழே தரப்பட்டுள்ள விஷயங்கள் பற்றிச் சிந்தியுங்கள் :

## பணியின் தன்மை

ஒரு குறிப்பிட்ட வேலை என்றால், அதில் உள்ள பொறுப்புகள்,

ஆர். கண்ணன்

# வெளியே இருக்கும் வேலை வாய்ப்புகள்!



அடிப்படை அம்சங்கள், பணிபுரியத் தேவையான கல்வித் தகுதி, கையாள வேண்டிய கருவிகள் என்று பல பிரிவுகள் உண்டு. ஒரு குறிப்பிட்ட வேலைக்கான தகவல்களை ஒரு நாள் சேகரித்துப் பாருங்கள். உதாரணமாக, ஒரு காஷியர் பதவி. இதில் எது எதற்கெல்லாம் வவுச்சர்கள் எழுத வேண்டும், பணமாக எவ்வளவு தொகை வரை கொடுக்கலாம்? காசோலைகள் எதற்கெல்லாம் கொடுக்க வேண்டும்? லெட்ஜரிங் எந்தெந்த தலைப்புகளில் செலவுகளைப் பதிவு செய்யலாம்? கம்ப்யூட்டரில் பதிவு செய்வதானால், ஒவ்வொரு செலவு இனத்துக்கான 'கோடு' என்ன? தினசரி பணக் கையிருப்பு சரிபார்க்க வேண்டுமா அல்லது வாரக் கடைசியில் 'டேலி' பண்ண வேண்டுமா? எத்தனை விவரங்கள் இருக்கின்றன! இல்லையா? இதையே நீங்கள் ஒரு கம்பெனியில் காஷியராகச் சேர்ந்தால் தினம் தினம் அலுப்புச் சலிப்பு இல்லாமல் செய்து வருவீர்களா' என்று அலசிப் பாருங்கள். இதுபோன்ற தகவல்கள் ஒரு குறிப்பிட்ட பணியைப் பற்றி நீங்கள் நன்றாகத் தெரிந்து கொள்ள உதவும். இன்டர்வியூக்களில் பதில்கள் சொல்ல வசதியாக இருக்கும்.

## தேவையான திறன்

அன்றாட வேலை என்ன என்று தெரிந்து விட்டால், பிறகு அதற்குத் தேவையான திறன்களைக் கண்டறிய வேண்டும். கம்ப்யூட்டர் அறிவு, அக்கவுன்ட்ஸ் அறிவு போன்ற திறமைகளை அதற்கான கோர்ஸ் மூலம் பெற முடியும். ஆனால் 'ஸாஃப்ட் ஸ்கில்ஸ்' எனப்படும் ஒருவரோடு ஒருவர் பழகிப் பங்குகொள்ளும் பணி, ஒரு குழுவை வழிநடத்திச் செல்லும் திறன் இவற்றை மனத் தளவில் வளர்த்துக் கொண்டு, அதில் திறமை பெற வேண்டும்.

## தொழில்துறை வாய்ப்புகள் :

உங்கள் படிப்புக்கு ஏற்ற வேலை வாய்ப்புகள் என்னென்ன என்று கண்டறிவது மிக மிக முக்கியம்.

என்னுடைய கல்வித் தகுதியோடு ஒரு குறிப்பிட்ட கோர்ஸில் நான் சேர்ந்தால் என்ன பலன் கிடைக்கும்? எனக்கு என்னென்ன வாய்ப்புகள் கூடுதலாகக் கிடைக்கும்? அம்மாதிரி கோர்ஸை எடுத்துக் கொண்டு தனி நபர்களிடம், அவர்கள் எந்த வேலைகளில் இருக்கிறார்கள் என்று விசாரியுங்கள். ஒரு முடிவுக்கு வர, இத் தகவலும் உங்களுக்கு உதவும்.

## தொடர்பான கேரியர்கள் :

உங்களுக்கு இருக்கிற கல்வித் தகுதியோடு மட்டுமே கிடைக்க வாய்ப்புள்ள வேலைகளைப் பற்றியும் விசாரியுங்கள். ஒருவர் சட்டம் படித்து விட்டதால், வழக்கறிஞராகத்தான் வேலை பார்க்க வேண்டும் என்ற கட்டாயம் இப்போது இல்லை. மனிதவள மேம்பாட்டுத் துறையின் பல பிரிவுகளில் ஏதாவது ஒன்றில் வேலை பார்க்கலாம்.

## பணிகள் பற்றிய தகவல்கள் :

உங்கள் கேரியர் சாய்ஸுக்கு உகந்த வேலையில் சேர வேண்டுமானால் பல தரப்பட்ட பணிகள் பற்றிய தகவல்கள் உங்கள் வசம் இருக்க வேண்டும். கேரியர் வலைத் தளங்களைப் பாருங்கள். இவற்றின் அடிப்படையில், ஓரளவுக்கு என்னென்ன கேரியர்கள் இருக்கின்றன என்று புலப்படும். எல்லா கேரியர்களிலும் இருக்கிற லாப-நஷ்டங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுங்கள்.

## படிக்க வேண்டியவை :

இதுதான் உங்கள் கேரியர் என்று திட்டவட்டமாகத் தெரிந்த பின் என்ன படிக்கலாம், எங்கே படிக்கலாம்? என்று தீர்மானிக்கலாம்.

பல வித வாய்ப்புகளையும் அலசுங்கள்.

எல்லா கோர்ஸ்களிலும் மூன்று வகை வாய்ப்புகள் இருக்கின்றன.

டிகிரி கோர்ஸ்

டிப்ளோமா கோர்ஸ்

கரெஸ்பாண்டென்ஸ் கோர்ஸ்.

கோர்ஸைத் தீர்மானித்தவுடன், எந்தெந்த கல்லூரிகளில் இவை கிடைக்கும் என்று முடிவு எடுத்து, விதிமுறைகள் என்னென்ன என்பதைச் சேகரியுங்கள்.

## தகவல்கள் பெற :

ஒவ்வொரு பணியிலும் உள்ளவர்களைக் கேட்டுத் தகவல்கள் சேகரிப்பது உத்தமம். அப்புறம் இருக்கவே இருக்கின்றன இன்டர்நெட், புத்தகங்கள், நூலகங்கள், ரெஃபரன்ஸ் குறிப்புகள்.

வேலை வாய்ப்புகள்; பணிகள் பற்றி முழுமையாகத் தெரிந்து வைத்துக் கொள்வது, சரியான சாய்ஸ் கிடைக்க நிச்சயம் உதவும்.

**(அடுத்த வாரம் : இரு முனைகளை இணையுங்கள்)**

உங்கள் சந்தேகங்களை வினாக்களை kalki@careersindia.com என்ற ஈமெயிலுக்கு அனுப்புங்கள்.

படங்கள்: யோகா

"எல்லை தாண்டி வருகிற தீவிரவாதியை என்ன செய்யலாம்?..."

"ஹை ஜம்ப்ல வந்தீங்களா... லாங் ஜம்ப்ல வந்தீங்களான்னு கேட்கலாம்."

— லதா



# காதலா இது காதலா?

ஜெய்ஸ்ரீராஜ்

''எனக்கு இப்ப ஃபோன் வரும், நான் ஸீட்ல இல்லைன்னு சொல்லிடு பூர்வி'' – பக்கத்து மேஜையைப் பார்த்து குரல் கொடுத்தாள் ஸ்வேதா.

"யார்கிட்டருந்துப்பா?..." பூர்வி இவள் பூர்வீகத்தை முற்றும் உணர்ந்தவள்; அதனால் 'ஓகே' என்று மும்பைவாலியின் அலட்சியத்துடனேயே அந்த வேண்டுகோளை ஸ்வீகரிக்க முடியவில்லை! என்ன ஏது என்று தன் பூர்விகமான வளசரவாக்கத்தை நினைவு படுத்தும் வகையில் வளவளத்தாள்.

''பிரபீஷ்தான்'' ஸ்வேதா பதில் சொல்லிவிட்டு தன் ஃபைலில் மூழ்கியதும், ஏஸி அலுவலகத்தில் கூட பூர்விக்கு வியர்த்துக் கொட்டியது.

''ஏம்பா... இவனுக்கும் 'கல்டி' குடுக்கப் போறியா?'' கழட்டிவிடப் போறியா என்பதன் மும்பைத் தமிழாக்கம் இது. "ஏய்... ஏய்.... நெல்லுக்கு உமியுண்டு, பல்லுக்குச் சொத்தையுண்டு, கள்ளுக்கும் மீதனால் உண்டுப்பா... இருந்திருந்து ஒரு பாய் ஃப்ரெண்டு தேறியிருக்கான்; அவனை இப்படி எடுத்தெறியுறது நல்லா இருக்கா?" - வலுக்கட்டாயமாகத் தன்னைத் தமிழ்ச் சங்கக் கூட்டங்களுக்கு அழைத்துச் செல்வதற்கு, பூர்வி இப்படி ஸ்வேதாவைப் பழி தீர்த்துக் கொள்வதுண்டு, அதாவது, துள்ளு தமிழில் மேற்கோள்களை அள்ளி வீசி அவளை மடக்கப் பார்ப்பது....

"புல்லிதழ் பூவுக்குமுண்டுன்னு தெரியும்மா, அந்தப் புல்லைக் களைஞ்செறிஞ்சுட்டு, பூவை மட்டும் சூட்டிக்கப் பார்க்கறது தப்பில்லையே?'' துள்ளு தமிழை தெள்ளு தமிழால் அடிக்கத் தெரிந்தவள் ஸ்வேதா. அவளிடம் வாய் கொடுத்து மீள முடியாதென்று நிறுத்திக் கொண்டாள் பூர்வி.

ஃபோன் எப்போது அடிக்கும், தன் பொய்ச் சுமைகளில் ஒன்று எப்போது ஏறும் என்று காத்துக்கிடக்கத் துவங்கினாள். இடைப்பட்ட காலத்தில், போரடிக்காமலிருக்க, குட்டி 'ஃப்ளாஷ் ஃபார்வர்டை' (ஃப்ளாஷ் பேக்'குக்கு எதிர்மறை அதுதானுங்களே?) கற்பனைத் திரையில் ஓட விட்டாள்.

ஸ்வேதாவின் அம்மா அதில் தோன்றி, 'என்னமோடீம்மா... எதுக்கு, இப்படி சாட்டிங், பாட்டிங் எல்லாம் இருக்கோ தெரியல்ல' என்று அங்கலாய்த்தாள்.

"பாட்டிங் பத்தி ஒண்ணும் சொல்லாதிங்க ஆண்ட்டி, வேர்ல்ட் கப்ல காலை வாரிட்டாங்களே; சாட்டிங்னால என்ன தொல்லை சொல்லுங்க...'' இது பூர்வி.

''ஒண்ணா? ரெண்டா? எடுத்துச் சொல்ல...'' என்று வியோனி பட்டிமன்ற ஸ்டைலில் பாடத் துவங்கி, "சாட்டிங்கறது டேட்டிங்ல முடிஞ்சா நல்லாருக்கும்...'' என்று நீட்டி முழக்கி, ''ஆனா...'' என்று கொக்கி போட்டாள் அம்மா.

"பார்ட்டிங்ல முடியறதாக்கும்?" என்று

முடித்தாள் பூர்வி.

"கேட்டா ஸ்போர்ட்டிங்கா எடுத்துக் கோன்றானே? ரொம்பத் துருவினா அந்தக் கண்றாவியை நீயே படிச்சுக்கோன்னு யிருப்பாளே? எந்த அளவுல இருக்கு?" பூர்வி எதற்குப் பயந்தாளோ, கடைசியில் அந்தக் கேள்வியைக் கேட்டே விட்டாள் ஸ்வேதாவின் தாய்.



'ஸேவ்' பண்ணி வச்சுடறா...!" அம்மா முணுமுணுத்தாள்.

"அப்பப் படிச்சுப் பாத்துட வேண்டியதுதானே ஆண்ட்டி?"

"நம்மை படிச்சுக்கோன்னு சொன்னா, அதுல படிச்சுப் பாக்கறதுக்கு ஒண்ணுமே இருக்காதுங்கறது அசடுக்குக் கூடத் தெரியுமேடீம்மா?"

"ம்... ஆமாம்மாம்...!" தன் அசட்டுத் தனத்துக்குத் தானே ஒரு குட்டு குட்டிக் கொண்டாள் பூர்வி.

"ஏதோ இந்த பிரபீஷ் விஷயத்துல தான் கொஞ்சம் முன்னேறியிருக்கு; அந்தப் பையன் இவகிட்ட, ஃபோன்ல அப்பப்ப பேசறான்; உன்கிட்ட சொல்லி

"ம்... அதுவா ஆண்ட்டி... எவ்ரிதிங் இஸ் ஃபைன்" பூர்வி மென்று விழுங்குகையில், டெலிஃபோன் மணி அடித்து, நிகழ் காலத்துக்கே அவளை இழுத்தது. 'பட்'டென்று ஆண்ட்டியிடமிருந்து 'எஸ்கேப்' ஆகிவிட்டாள்.

ரிஸீவரை எடுத்து 'ஹலோ' என்றதும், "நான் பிரபீஷ் பேசறேன்; மிஸ் ஸ்வேதா இருக்காங்களா?" என்றது ரிஸீவர்.

"அவங்க வீட்ல இல்லையே? இப்பதான் ஏதோ கான்ஃபரன்ஸ¬ன்னு சொல்லிட்டிருந்தாங்க...!" தயாரித்தபடி இயற்கையாகப் புளுகிவிட்டு, "நான் அவ ஃப்ரெண்டு பூர்விதான் பேசறேன். எனி

மெஸேஜ்?" என்று கூடுதலாய் அக்கறைப் பட்டாள்.

"ம்... இன்னிக்கு ஈவினிங் ஆறரைக்கு ஷண்முகானந்தாவுல ஒரு 'ஷோ' இருக்கு, ரெண்டாவது ரோவுல 18ம் நம்பர் ஸீட், ஸீக்ரீன் ஸல்வார்ல வரச் சொல்லுங்க"... பிரபீஷ் ஃபோனை வைத்ததும் பூர்வி மலர்ச்சியுடன் ஸ்வேதாவை நோக்கினாள். அவன் சொன்னதை ஒப்பித்து விட்டு, "போகப் போறதானே?" என்றாள் எதிர் பார்ப்புடன்.

"நிச்சயமா... ஆனா கடல் பச்சை நிற ஸல்வார்ல இல்லை; மஞ்சள்ல அரக்கு பார்டர் போட்ட ட்ரெஸ்ல" என்று நிதானமாகச் சிரித்தாள் ஸ்வேதா.

அடுத்து வந்த நாட்களில் நிகழ்ந்த நிகழ்வுகள் பூர்வியின் ஆச்சர்யத்தையும் குழப்பத்தையும் அதிகரித்தன.

"நேபு ஹாலில் ஒரு ஃபாமிலி கெட்-டு-கெதர். பெண் பார்க்கும் படலம் என்கற அனாவசிய டென்ஷனைத் தவிர்க்கலாம், கார் அனுப்புகிறேன்; வீட்டிலிருந்து யாரை வேண்டுமானாலும் துணைக் கழைத்துக் கொண்டு அவசியம் வரவும், எங்கள் வீட்டில் மற்ற நாட்டுப் பெண்கள் மூக்குத்தி போட்டிருப்பதால் அம்மா உங் களையும் போட்டுக் கொள்ளச் சொல்ல லாம், மறுக்க வேண்டாம்...' வழக்கம் போல அவனிடமிருந்து மெஸேஜை எடுத் துக் கொண்டு, 'நைஸ் ஜெண்டில்மேன்' என்ற நற்சான்றிதழுடன் அதை ஸ்வே தாவுக்குத் தெரிவித்தாள் பூர்வி.

"காரெல்லாம் அனுப்ப வேணாம்னு சொல்லிடு; அப்பா ஊர்ல இல்லை, அண் ணனைக் கூட்டிட்டு நான் என் சௌகர் யப்படி போய்க்கிறேன்...!' சட்டென்று அகன்று விட்டாள் ஸ்வேதா, அவள் மூக்கில் ஒட்ட வைத்த மூக்குத்தியைக் கூட பிறகு பார்க்கவில்லை இவள்.

மறுமுறை "எங்க அத்தை பொண் நடத்தற 'பரத நாட்டிய கலாமந்திர்' ஸ்டு டண்ட்ஸோட டான்ஸ் பாலேக்கு.... இந் தாங்க இன்விடேஷன். நீங்க ஃப்ரீலான்ஸ் பண்ற 'கலைத் தென்றல்'ல அதைப் பத்தி 'ஓஹோ'ன்னு வரணும்னு எங்களுக் கெல்லாம் ஆசை...!" என்று நேரடியாக அழைத்து விட்டுச் சென்றான்.

ஸ்வேதாவும் சென்றிருந்தாள். கலைத் தென்றலில் விமர்சனமும் வந்தது. "நவ ரசத்தின் இடத்தில் பாதரசத்தின் பள பளப்பும் மினுமினுப்பும்தான் தெரிந்தன. பங்கேற்றவர்கள் ஒவ்வொருவரும் எதிர் காலத்தில் விஞ்ஞானியாக, விமானியாக, இன்ஜினீயராக.. இத்யாதிகளாக ஆக வேண்டும் என்று ஆசைப்பட்டனர். ஒருவர் கூட சிறந்த நடனமணியாக வேண்டும் என்று சொல்லவில்லை; நல்லவேளை... பரதம் பிழைத்தது" என்று எழுதி விட்டு, அந்த அபத்தக் களஞ்சிய மான நாட்டிய நாடகத்தை, 'செந்தில் கவுண்டமணியைத் தோற்கடிக்கும் ஸூப்பர் காமெடி ஷோ' என்று வேறு வர்ணித்திருந்தாள். முத்தாய்ப்பாக, "கோவாவிலிருந்து என் கஸின் சிஸ்டர் உங்களைப் பார்க்கணும்னு ரொம்ப தொணதொணக்கிறாங்க, கூட்டிட்டு வரேன்; அவகிட்ட அனாவசியமா வச்சுக் காதீங்க; வம்பு பார்ட்டி" என்று மின் அஞ்சலில் 'வார்னிங்' கொடுத்துவிட்டு

## கம்ப்யூட்டர் பேட்!

உலகக் கோப்பை பந்தயங்கள் முடிவடைந்துவிட்டன என்றாலும் கிரிக்கெட் தொடர்பான வேறொரு விஷயத்துக்காக மீண்டும் செய்தியில் இடம் பிடித்திருக்கிறது தென்னாப்பிரிக்கா.

டாக்டர் ரிச்சர்ட் ஸ்ட்ரெச் மற்றும் பேராசிரியர் ஜெரால்ட் நூரிச் ஆகிய இரு தென்னாப்பிரிக்க ஆராய்ச்சியாளர்களும் புதிதாக ஒரு கிரிக்கெட் பேட்டைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

வில்லோ மரத்திலிருந்து வழக்கமாக உரு வாகும் கிரிக்கெட் பேட்டுகளிலிருந்து இது பெரிதும் மாறுபட்டது. இதில் நாற்பத்தி யெட்டு அழுத்தப்புள்ளிகள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் கம்ப்யூட்டருடன் இணைக்கப்பட்டுள்ளன.

வரும் பந்தை பேட்டின் மூலம் எதிர் கொள்வதில், தாம் என்னென்ன தவறுகள் செய்கிறோம் என்பதை ஒரு பேட்ஸ் மேனுக்கு உணர்த்துவதில் இந்த பேட் பேருதவியாக இருக்கும் என்று கருதப்படு கிறது. பேட்டின் நடுப்பகுதியைக் கொண்டு பந்தை அதிகமாக அடிப்பதற்கு இந்தத் தொழில் நுட்பம் உதவிகரமாக இருக்கும்.

மேற்படி கம்ப்யூட்டரில் உருவாகும்

உருவங்களைக் கொண்டு பந்து பேட்டின் எந்த இடத்தில் பட்டு எவ்வளவு விசையுடன் வெளியேறியது என்பதை அறிந்து கொள்ள முடியும்.



சில கிரிக்கெட் பயிற்சியாளர்கள் இது போன்ற தொழில் நுட்பம் தங்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்று கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

புதிய பேட்டில் உள்ள முக்கிய பலவீனம் என்னவென்றால், பல ஒயர்களுடன் இணைக்கப்பட்டிருக்கிறது இந்த பேட். அதாவது இயல்பான விளையாட்டுச் சூழலில் இதை இப்போதைக்குப் பயன்படுத்த முடியாது. விரைவில் டெலிமெட்ரிக்ஸ் என்ற தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி தாங்கள் புதிய மாடல் பேட் ஒன்றை உருவாக்கி விடுவோம் என்றும் அப்போது இதில் எந்த ஒயரும் தொங்காது என்பதால் பலவித சௌகரியங்கள் உண்டு என்றும் டாக்டர் ஸ்ட்ரெச் அறிவித்திருக்கிறார்.

- அருண்

ஒரு பெண்ணை அவன் அழைத்து வரவும், அவள் ஸ்வேதாவுடன் மும்பையில் ஹைஸ்கூல் வரை சேர்ந்து படித்தவளாகிப் போனதும், இருவரும் அரட்டை அடித்து, பேச்சுவாக்கில் பிரபீஷை வாரியதும்....

இதையெல்லாம் பார்த்தபிறகு, பிரபீஷ் - ஸ்வேதா உறவுக்கு மனத்துக்குள் முற்றும் போட்டாள் பூர்வி.

எதிர்பார்த்தது போல பிரபீஷிடமிருந்து ஃபோன் வந்தது, ஸ்வேதாவே எடுத்தாள். 'உங்ககிட்ட நம்ம ரிலேஷன்ஷிப்பைப் பத்தி கொஞ்சம் பேச வேண்டியிருக்கு; இன்னிக்கு சாயங்காலம் ஜுஹூ பீச்ல சந்திப்போமா? நம்ம எதிர்காலத்தை நிர்ணயிக்கிற முக்கியமான சந்திப்பா இது இருக்கும்னு நினைக்கிறேன்!' அவன் குரலில் காட்டமிருந்தது.

''ஓ...ஷ்யூர்...!'' இப்படி கலக்கமில்லாமல் பதற்றமில்லாமல் ஸ்வேதாவால் எப்படி இயங்க முடிகிறதென்று பூர்வி அதிசயித்தாள். மனசுக்குள் சித்தி விநாயகர், மஹாலக்ஷ்மி, கொச்சி குருவாயூரப்பன், ஃபனஸ்வாடி பாலாஜி எல்லோருக்கும் நன்றிக்காக எஸ்.எம்.எஸ். விடுத்தாள்.

பிரபீஷும் ஸ்வேதாவும் பேல் பூரி, பானி பூரி, 51வகை தோசைக் கடைகளைத் தாண்டி, அந்த மும்பை கூவத்தில், சற்று ஒதுக்குப்புறமான இடத்தைத் தேடி அமர்ந்தனர்.

அவன் மௌனமாக வார்த்தைகளைத் தேடிக் கொண்டிருந்தான்; மணலைக் கையில் இறுக்கிப் பிடிப்பதும், அது பக்கவாட்டிலிருந்து கீழே விழுவதுமாக நேரம் நகர்ந்து கொண்டிருந்தது.

அவன் செய்கையையே கவனித்துக் கொண்டிருந்த ஸ்வேதா, 'பிரபீஷ்... கொஞ்ச நேரம் அந்த மண்ணை சும்மா லூசா, திறந்த கையிலே ஏந்துங்க பார்ப்போம்' என்றாள். அவன் குழப்பத்துடன் வெறும் கையில் மணலை ஏந்தியபோது, அது சிந்தாமல் சிதறாமல் அப்படியே கையில் நின்றது.

"நீங்க கேட்க நினைச்ச கேள்விகளுக்கெல்லாம் பதில் உங்க கையில் இருக்கு பிரபீஷ்'' ஸ்வேதாதான் துவங்கினாள். ''கையில கெட்டியா மணலை மூடியிருக்கையில் அது ரெண்டு பக்கத்துலருந்தும் 'எஸ்கேப்'பாகி உங்க கையில கிடைக்காம போயிடுச்சு; கையைத் திறந்து வைச்சிருக்கும்போது அது உங்க கையிலேயே இருந்தது பார்த்தீங்களா? காதலும் அப்படித்தான்; நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும்னு நினைக்கிறது முதல் வகை, நான் பேச நினைப்பதை நானும், நீ பேச நினைப்பதை நீயும் பேச முடியும்னு நினைக்கறதுதான் இரண்டாவது வகை. இதுல எது உண்மையான உசத்தியான வகைன்னு நான் சொல்லித்தான் நீங்க தெரிஞ்சுக்கணுமா?''

அவன் புரிந்து கொண்டு கனிவுடன் சிரித்தான். ''நாம டின்னருக்கு எங்க போகலாம்?'' என்றான்.

பூர்வி 'ஃப்ளாஷ் பேக்'கில் மலர்ந்தாள் என்ற கொசுறுத் தகவல் தேவையா? ●

# சீரியல் செல்வர்!

**மெகா தொடர் உலகின் முடி சூடா மன்னர் என்றே அழைக்கலாம் விஸ்டா விஷன் அழகன் தமிழ்மணியை! சினிமாவுக்கு இன்று மாபெரும் சவாலாய் விளங்கும் மெகா தொடர்கள், தாய்க்குலத்தின் குறிப்பிடத்தக்க, பொழுதுபோக்காய் மாறுவதற்கு முன்னோடியாக இருந்தவை, இவர் தயாரித்த தொடர்கள். நம்பர் ஒன் இடத்தை எட்டிப் பிடிக்க எப்படிப் போராடினார்?**

அப்பா அழகப்பத் தேவர் சென்னையில் சின்னஞ்சிறு பட்டாணிக் கடை வைத்திருந்தார். அதில் கிடைத்து வந்த லாபம் சாப்பாட்டுச் செலவுக்கே போதுமானதாக இருக்கவில்லை. ஆயினும் அம்மா தனபாக்கியத்தம்மாள் எங்களை ஒருவேளை கூட பட்டினி போட்டதில்லை. ஒரு கட்டத்தில் அவரது நிர்வாகத் திறமைக்கே சவால் விடுகிற மாதிரி, அழையா விருந்தாளியாக, வீட்டிற்குள் வறுமை புகுந்தது. கூடவே கம்யூனி

சப் பாரம்பரியமுள்ள குடும்பம் என்கிற பெருமையும் இருந்தது.

மாதம் ஒருமுறை மழை வருகிறதோ இல்லையோ, அஞ்சலில் வீடு தேடி வரும் 'சோவியத் நாடு' பத்திரிகை மனத்தை நனைக்கும். தினசரி வரும் ஜனசக்தியின் தலையங்கம் நெஞ்சுக்குள் நெருப்பு மூட்டும். இதனால் இயக்கத்தில் ஈடுபாடு வந்தது. மாணவப் பருவத்தில் நியூசெஞ்சுரி புத்தகக் கடைக்குச் சென்று ரஷ்ய மொழிபெயர்ப்புப் புத்தகங்களையும், சித்தாந்த நூல்களையும் வாங்கி வந்து, படித்துக் கொண்டே கடற்கரையில் கடை பரப்பி விற்று வந்தேன். அதில் கிடைக்கிற சொற்ப லாபத்தைப் படிப்புச் செலவுக்கும் பயன்படுத்திக் கொண்டேன்.

மாநிலக் கல்லூரியில் இளங்கலை பயின்று கொண்டிருந்தபோது, அரசியல் விமர்சகர் சோலையின் கட்டுரைகளும், ஜெயகாந்தனின் சிறுகதைகளும் கல்கியின் புதினங்களும் என்னைப் பத்திரிகைத் துறையினர் மீது பார்வை திருப்ப வைத்தன. எனது இருபத்து நான்காவது வயதில் தந்தையார் இறந்து போக, சொந்தக் காலில் நிற்க வேண்டிய கட்டாயம். உடனே 'நவசக்தி' பத்திரிகையில் செய்தியாளனாகச் சேர்ந்தேன். புதிய புதிய முகங்களைச் சந்திக்கவும், பலரது அனுபவங்களைத் தரிசிக்கவும் வாய்ப்பு மிகுந்த உன்னதமான பத்திரிகைப் பணியில் சில காலம் கரைந்து போனேன். நவசக்தி பத்திரிகைக்குப் பிறகு மக்கள் செய்தி, அண்ணா, புரட்சி மலர் என்று பல தினசரிகளில் செய்தியாளனாக வலம் வந்தாலும், நல்ல வாசகனாக என்னைத் தக்க வைத்திருந்தேன். அதன் விளைவாக விதையென விழுந்தது ஓர் எண்ணம்.

நல்ல இலக்கியத்தைச் சுமந்து வெகுஜன வாசகனைச் சென்றடையக் கூடிய ஒரு பத்திரிகை இல்லையே, அதை ஏன் நாமே வெளியிடக் கூடாது, என்று முடிவு செய்தேன். கையிலிருந்த சொற்பப் பணத்தோடும், கடன் கொடுத்து கைகொடுத்த நண்பர்களின் உதவியோடும் 'நயனதாரா' இலக்கிய மாத இதழைத் தொடங்கினேன். ஜெயகாந்தனின் 'கரு' நாவலைச் சுமந்து முதல் இதழ் வெளிவந்தது. சு.சமுத்திரம், மகரிஷி, லட்சுமி ராஜரத்னம், சுஜாதா போன்ற வெகுஜன எழுத்தாளர்களின் தரமான படைப்புக்களைத் தாங்கி வந்த பத்திரிகைக்குப் பாராட்டுக்கள் தேடி வந்தன. ஆனால் போட்ட பணம் மட்டும் வரவில்லை. பொருளாதார ரீதியாக நலிவடைந்த நயனதாராவின் ஆயுட்காலம், ஓராண்டுக்குள்ளேயே முடிந்து போனது. இதுதான் எனக்கு முதல் அடி. தொடர்ந்து குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய நெருக்கடி. தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக் கழகத்தின், பொது விநியோக அங்காடிகளுக்கு, ஆள்சேர்ப்பு நடை பெறுவதை அறிந்து, அங்கே வேலை தேடினேன். என்னை 'நேர்கண்ட' ஐ.ஏ.எஸ். அதிகாரியை பழக்க தோஷத்தில் 'காம்ரேட்' என்று அழைக்கப் போய், அவர் என்னை 'எழுந்து வெளியே போ' என்று சொல்வதற்குப் பதிலாக, 'வேலைக்குப்போ', என்று உடன்டி நியமனம் செய்தார். கூடவே "தொழிலாளர்களைத் திரட்டி, தொழிற் சங்கத்தை உருவாக்கு! வேறு வேலை எதுவும் செய்ய வேண்டாம்" என்று ஒரு காம்ரேட்டாக அன்புக் கட்டளை பிறப்பித்தார். அப்புறமென்ன? வேலைக்குச் சென்ற முதல் நாளே, கையில் 'செங்கொடி' பத்திரிகையோடு போய், தொழிலாளர்களைச் சந்தித்தேன். ஓடி ஆடி சங்கத்தைக் கட்டமைத்தோம். வந்த வேலை முடிந்து விட்ட திருப்தியில் அங்காடிப் பணியிலிருந்து வெளியேறினேன்.

எங்கே போய்ச் சுற்றிவிட்டு வந்தாலும் நிம்மதியாய் இளைப்பாறும் ஆலமர நிழலாக பத்திரிகை மீண்டும் அரவணைத்துக் கொண்டது. இந்த முறை 'அலை ஓசை' பத்திரிகையில் பணியாற்றும் போது தூயவன், எஸ்.பி.முத்துராமன் போன்ற இயக்குனர்களின் தோழமையால், சினிமா ஊடகத்தின் மீது சிந்தனை திரும்பியது. எனது மூத்த சகோதரர் ராகவன் தம்பி, இளைய



சகோதரர் சிவராமதாஸ் முன்னின்று தயாரித்த 'மலையூர் மம்பட்டியான்' படத்தில் நானும் இணைந்து பணியாற்றினேன். அந்தப் படத்தின் அபார வெற்றி, எனக்குள் தாராளமாய்த் தன்னம்பிக்கையை நிறைத்தது. கிடைத்த அனுபவத்தை வைத்துக் கொண்டு, தனியொரு ஆளாகப் படத் தயாரிப்பில் இறங்கினேன். சூப்பர் ஸ்டாரை வைத்து 'அன்புள்ள ரஜினிகாந்த்' படத்தை எடுத்தேன். தொடர்ந்து 'சோலைக்குயில்', 'சித்திரைப் பூக்கள்', 'வைதேகி காத்திருந்தாள்' என்று நல்ல படைப்புகளை மட்டுமே கொடுத்து வந்தேன். சினிமாவிற்குள் நுழைந்த பிறகு, எனக்குள்ளிருந்த கம்யூனிஸ்ட் சாகாமல் இருந்ததால் அங்கேயும் சும்மா இருக்காமல், தமிழ்த்



"சுண்டல் ரெண்டு ரூபாய்தானே... எதுக்குப்பா இருபது பைசா அதிகமா கேக்கறே?"
"அது, வால்யூ ஆடட் டாக்ஸ், சார்!"
– அ. கொளஞ்சி

திரைப்படத் தயாரிப்பாளர் சங்கத்தைக் கட்டமைக்கும் முயற்சியில் வெற்றி கண்டேன்.

பொதுவாக எனது எல்லா, படங்களையும், விநியோகஸ்தர்களுக்கு முன்கூட்டியே விலைபேசி விற்று வந்ததால் (out rate), லாபம் கிடைக்கவில்லை. ஆனால் தரமான படங்களைக் கொடுக்கிற தயாரிப்பாளர் என்கிற பெயரும், கௌரவமும் என்னை உற்சாகமாக வைத்திருந்தது. அதே உற்சாகத்தோடு 'தர்மபத்தினி' படத்தைத் தயாரித்தேன். இளையராஜா இசை அமைத்து, மிகப் பெரிய வெற்றியை ஈட்டிய அந்தப் படத்தின் படப்பிடிப்பு முடிந்து, முதல் பிரதியும் தயாராகி விட்டது. ஆனால் படவெளியீட்டுக்குத் தேவையான பிரதிகளை பிரிண்ட் செய்ய கையில் பைசா கூட இல்லை. நான் நம்பியிருந்த ஃபைனான்சியர் காலைவாரி விட்டுப் போய்விட்டார். என்னை நம்பி பணம் போட்ட விநியோகஸ்தர்களின் நம்பிக்கையைச் சிதைக்க விரும்பாமல் வெள்ளைக் காகிதங்களில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டு, பல லட்சங்களைக் கடன் வாங்கி, பிரதிகளை பிரிண்ட் செய்து, எல்லாப் பகுதிகளுக்கும் அனுப்பி வைத்தேன். ஆனால் தென்னார்க்காடு வடார்க்காடு மாவட்ட விநியோகஸ்தருக்கு படப் பிரதியைப் பிரிண்ட் போட்டுக் கொடுக்கப் பணம் போதவில்லை. வேறு வழியே இல்லாமல், மனைவியின் கழுத்தில் எஞ்சியிருந்த நகைகளை வாங்கி விற்று, ஜெமினி கலர்லேபில் பணத்தைக் கட்டி, கடைசிப் படப் பெட்டியை வாங்கி அனுப்பி வைத்துவிட்டு, நிம்மதிப் பெருமூச்சோடு காரில் அமர்ந்தேன். கார் நகர மறுத்தது. காரணம் காரில் பெட்ரோல் இல்லை. பேருந்தில் ஏறி வருவதற்குக் கூட கையில் பணமில்லை. எனவே அங்கிருந்து நடந்தே வீடு வந்து சேர்ந்தேன்.

வீட்டில் எனது இரண்டு குழந்தைகளுக்கு அம்மை கண்டு, வாழை இலையில் படுக்க வைத்திருந்தாள் எனது மனைவி. எனது கதாசிரியர் வீடு தேடி வந்தார். உடல் நலமில்லாத எனது குழந்தைகளைப் பற்றி நலம் விசாரிக்க வருகிறார் என்ற ஆறுதலோடு நான் அமர்ந்திருந்தேன். வந்தவர், "எனது வீட்டில் டீ.வி. பெட்டி இல்லை. எனக்கு நீங்கள் தரவேண்டிய மூவாயிரம் ரூபாய்க்கு, உங்கள் வீட்டில் இருக்கும் டீ.வி. பெட்டியை எடுத்துக் கொள்கிறேன்" என்று வெந்த புண்ணில் வேல் பாய்ச்சினார்.

இது போன்ற கசப்பான அனுபவங்களோடும், மீள முடியாத கடனோடும் சினிமாவிலிருந்தே விலகியிருந்த என்னை, விநியோகத் துறையில், நுகர்வோர் மனநிலை குறித்து ஆய்வுகள் மேற்கொண்டு வரும் நண்பர் ஒருவர் சந்தித்தார். "வீட்டு வேலைகளை முடித்துவிட்டு, பெண்கள் சற்று ஓய்வாக இருக்கிற மதிய நேரத்தில் மெகா தொடர் ஒளிபரப்பினால், தவிர்க்காமல் பார்ப்பார்கள்" என்று, தாம் மேற்கொண்ட ஆய்வு பற்றிச் சொன்னார். அவர் கண்டறிந்து சொன்ன காரணங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியவையாக இருந்தன. பகல் நேரத்தில் சீரியல் ஒளிரப்பு என்பது தற்கொலைக்குச் சமம் என்று பலரும் எச்சரித்

# குரலில் மென்மை; கருத்தில் உறுதி!

⊙ யதார்த்தமான உணர்வுகளுடன் மனதை வருடி நிறைவுற்றது வெண்ணிலாவின் 'யாரிடம் சொல்வேனடி தோழி' தொடர்.
சிவகங்கை - 630 311, மரகதம் சம்பத்

⊙ கணவன் - மனைவி இருவரிடத்திலும் புரிந்து கொள்ளுதல் என்ற சொல் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது? எளிமையான நடையில் வெண்ணிலா இதைச் சித்திரித்திருந்த விதம் முழுமதியையொத்திருந்தது.
நெய்வேலி - 3, க. ஸ்ரீகாந்த்

⊙ 'பரஸ்பரம் விட்டுக் கொடுத்தல் இல்லற வாழ்க்கையில் அவசியமான ஒன்று' என்பதை உணர்த்தும் விதமாய் இருந்தது யாரிடம் சொல்வேனடி தோழி.
குட்டலாடம்பட்டி, கொ. மூர்த்தி

⊙ ஆணுக்குப் பெண் அடிமை அல்ல என்பதை மிகச் சன்னமான குரலில் பதிய வைத்துள்ளார் ஆசிரியர். அஞ்சலி - சுந்தர் போன்ற தம்பதி அபூர்வம்தான்.



தஞ்சாவூர் - 12, ஜி. ராமதாஸ்

⊙ பூப்போன்ற வார்த்தைகள் மூலம் இரும்பைப் போன்ற கருத்தை நயம்பட நறுக்கென எடுத்துரைத்த வெண்ணிலா, நாவலாசிரியையாகவும் பரிணமித்து விட்டார்.
தோட்டப்பாளையம், திருமலை நாயகன்

தனர். இன்னொரு பக்கம் சினிமா தயாரிப்பாளராக இருந்து விட்டு சீரியலுக்குப் போனால், நம்மை ஒதுக்கி வைத்து விடுவார்கள் என்ற தாழ்வு மனப்பான்மையோடு இருந்த பல தயாரிப்பாளர்கள் என்னைத் தடுத்தனர். நான் துளிகூடத் தயங்காமல் விஸ்டா விஷன் நிறுவனத்தைத் தொடங்கினேன். இந்தியாவில் முதல் முறையாக நானூறு எபிசோடுகளோடு, பகல் பன்னிரண்டு மணிக்கு வெற்றிகரமாக வெளிவந்தது 'மங்கை' தொடர். அடுத்து 'அம்மா', 'அம்பிகை', இப்போது அவளும் பெண் தானே' வரை தொலைக்காட்சித் தொடர்கள் தான், வீழ்ந்த என்னைப் படிப்படியாய்த் தூக்கி நிறுத்தின. சினிமா தயாரிப்புக்கு வாங்கிய பல லட்சம் கடனை, தொடர்களில் கிடைத்த லாபம் மூலம், பத்தாண்டுக்களுக்குப் பிறகு தேடிப் போய்க் கொடுத்து விட்டு வந்தேன். இந்த நேரத்தில், சன் டி.வியில் எனது தொடர்களுக்கு நேரம் ஒதுக்கித் தந்த அதன் நிர்வாக இயக்குனர் தம்பி கலாநிதி மாறனின் தாயுள்ளத்தை, நன்றியோடு நினைத்துப் பார்க்கிறேன். தொடர்களின் மூலம் கிடைக்கிற லாபத்தில் ஆண்டு தோறும் பத்து லட்சம் ரூபாயை ஏழைப் பிள்ளைகளின் படிப்புச் செலவுக்காகக் கொடுத்து வருகிறேன். இறந்து போன எனது துணைவியார் நினைவாக ஸ்தாபிக்கப்பட்ட 'அன்னை வண்ணமதி அறக்கட்டளை' மூலம் இந்த உதவிகளை வழங்கி வருகிறேன். நடப்பாண்டு, சித்தாளாகப் பணிபுரியும் ஓர் ஏழைத்தாயின் மகளுக்குப் பொறியியல் பட்டப்படிப்பிற்கான முழுச் செலவையும் ஏற்றுக் கொண்டதில் மிகுந்த மனநிறைவு" என்று சொல்லும் அழகன் தமிழ்மணி, புகழ் பெற்ற கம்யூனிஸ்ட் தலைவரான மணலி கந்தசாமியின் பேரன்!

— ஸ்ரீ சக்கரம்

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்



சப்தமில்லாமல் ஆங்கிலப் படம் ஒன்றை எடுத்து வருகிறது ஓர் இளமைப் பட்டாளம். முழுக்க முழுக்க இந்திய மண் வாசம் வீசும் கதை. ஆனால் அகில உலக மார்க்கெட்டை குறி வைத்துக் களமிறங்கியிருக்கிறார்கள் இந்தத் துறுதுறுக்கள்!

படத்தின் தலைப்பு: "நான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்!" ஆங்கிலத்தில் Knock knock, I am looking to marry; படத்தை இயக்கும் அனிதா, அமெரிக்காவில் லாஸ் ஏஞ்சலஸ் நகரில், திரைப்படத் தொழில் நுட்பத்தில் பட்டப்படிப்பு முடித்தவர்.

"சின்ன வயசுலயே சினிமா மேல ஈடுபாடு. இங்கே வெங்கடேஸ்வராவில் என்ஜினீயரிங் முடிச்சுட்டு, அனிமேஷன் படங்கள் பற்றிய தொழில் நுட்பம் கற்றுக் கொள்ள விரும்பி, அமெரிக்காவுக்கு விண்ணப்பித்தேன். திரைப்படத் தொழில் நுட்பம் படிக்கவும் விண்ணப்பித்திருந்தேன். அனிமேஷன் துறைக்கு அட்மிஷன் கிடைக்கவில்லை. மூன்று வருஷம் சினிமா டெக்னாலஜி படிச்சேன். ஒரு படத்துக்கான ஸ்கிரிப்டை எப்படி எழுதுவதுங்கறதிலேர்ந்து, டைரக்‌ஷன், தயாரிப்பு நுணுக்கங்கள் வரை எல்லாமே அங்கே சொல்லிக் கொடுத்தாங்க. வெறும் புத்தகக் கல்வியா இல்லாமல் பிராக்டிகல் பயிற்சியாகவும் இருந்தது. பிறகு ஏன் இன்னொருத்தர்ட்ட அசிஸ்டென்ட்டாகப் பணிபுரிய வேண்டும்? நானே உட்கார்ந்து ஸ்கிரிப்ட் எழுதி களத்துல குதிச்சிட்டேன்" என்கிறார் அனிதா.

"அமெரிக்காவில் சொல்லித் தந்த திரைப்படத் தொழில் நுட்பத்தை வச்சு, இங்க படம் எடுக்கறது சரிப்பட்டு வருமா?"





"ஸ்கிரிப்ட் எப்படி எழுதணும், லைட்டிங் எப்படி இருக்கணும்! கேமரா கோணம்னா என்ன? டைரக்ஷன்னா எப்படின்னு விவரமாக் கத்துக்கிட்ட பிறகு, அதை எந்த மொழியில், எந்த நாட்டில் படம் எடுத்தாலும் ஒண்ணுதானே! நீச்சலடிப்பது எப்படின்னு கத்துக்கிட்ட பிறகு, எந்த ஊர் நீச்சல் குளமானாலும் நீச்சல் அடிக்கலாமே!"

"இந்தியக் குடும்பங்கள்ல நிகழும் கல்யாண விஷயத்தை உங்க படத்துக்குக் கருவாகத் தேர்ந்தெடுத்தது எப்படி?"

"நான் அமெரிக்காவில் படிச்சுட்டிருந்த போது என் உறவுக்காரப் பெண்ணுக்கு ஏற்பட்ட அனுபவங்கள்தான் இந்தக் கதையை எடுக்கக் காரணம். அங்க வேலை பார்த்துட்டிருந்த இந்தியப் பெண் அவள். நவநாகரிகமான வாழ்க்கைச் சூழ்நிலை நிலவினாலும், நம் ஊர் வழக்கம் போல அவளைப் பெண் பார்க்க யாராவது பையன் வீட்டார் வந்து போய்ட்டிருந்தாங்க. அவள், தன்னோட அனுபவங்களை எங்கிட்ட பகிர்ந்துக்குவா.

"அமெரிக்காவில், இந்தியத் திருமணங்கள் பற்றி விசித்திரமான அபிப்ராயம் உண்டு. முன்பின் பார்த்திராத ஆணும் பெண்ணும் குடும்பத்தினர் சூழ சந்திச்சு, திருமணம் நிச்சயமாகி, திருமணம் செய்து கொண்டு, அதெப்படி ஒண்ணா வாழத் தொடங்குறாங்க?ன்னு ஆச்சரியத்தோட இந்தியர்கள் கிட்ட அவங்க கேட்பதுண்டு. இது தவிர இன்னொரு விஷயமும் என்னை பாதிச்சது. போன தலைமுறையினர், பெற்றோர் நிச்சயித்த திருமணத்தை மறுப்பு சொல்லாமல் ஏத்துக்கிட்டாங்க. அடுத்த தலைமுறையினர், தமது வாழ்க்கையை நிர்ணயித்துக் கொள்ளும் உரிமை, தமக்கு மட்டுமே இருப்பதா நினைக்கிறாங்க.



# சென்னை.... ....ஹாலிவுட்?



இடையில் இருக்கும் என் போன்ற தலைமுறையினர் பாடுதான் திண்டாட்டம். பெற்றோரையும் மீற முடியலை. தன் சுதந்திரமும் காப்பாற்றப்படணும்னு நினைக்கிறாங்க. இந்த இந்தியத் தலைமுறையின் திருமணம்தான் என் படத்தின் கதை."

"ஹாலிவுட் பாணியில், முழு ஸ்கிரிப்ட்டையும் எழுதி முடிச்சுட்டுதான் ஷூட்டிங் ஆரம்பிச்சீங்களா?

"ஆமா! ஆறுமாதம் உட்கார்ந்து ஸ்கிரிப்ட் எழுதினேன். ஹாலிவுட் திரைப்பட ஸ்கிரிப்ட் பார்முலாவான 'ஒரு பக்கம் - ஒரு நிமிடம்' என்பதன்படி, ஒரு பக்கத்தில் இடம் பெரும் ஸ்கிரிப்ட், திரையில் ஒரு நிமிடக் காட்சியாக இருக்கும். ஸ்கிரிப்ட் இறுதி வடிவம் தயாரானவுடன், சரளமான ஆங்கிலம் பேசுபவர்களை மட்டுமே நடிக்க வைக்க முடிவு செய்தேன். சில மாடல் கோ ஆர்டினேஷன் ஏஜென்ஸிகள் மூலமாக நடிக நடிகையரை முடிவு செய்தேன். 'சொல்ல மறந்த கதை' ரதிதான் ஹீரோயின். எஸ்.எஸ். மியூஸிக் சேனலின் தொகுப்பாளரான சுஹாஸ்தான் ஹீரோ. அது தவிர படத்தில் சிறியதும், பெரியதுமாய் நிறைய கதாபாத்திரங்கள். சினிமா வாடை இல்லாத முகங்களாகப் போட்டிருக்கேன். சரியாய் மூன்று வாரம் ஷூட்டிங். பிறகு மூன்று பாடல் காட்சிகள். ஜூன் மாதக் கடைசியில் ரிலீஸ்.

"மூவி கேமரா இல்லாமல், வீடியோ கேமராவைப் பயன்படுத்துறீங்களே?"

"இது ஒரு டிஜிடல் தொழில் நுட்ப கேமரா. அமெரிக்காவில் சினிமாத் துறையில் இந்த டெக்னாலஜி ரொம்ப பாப்புலர். இந்த டிஜிடல் வீடியோ கேமராவில் படம் பிடித்து, அதை ஃபிலிமுக்கு மாற்றிக்கலாம். கச்சா ஃபிலிம் பயன்படுத்தாம, இந்தத் தொழில் நுட்பத்தைப் பயன் படுத்துவதால, தயாரிப்புச் செலவில் நாற்பது சதவீதம் வரை குறையும். இந்தத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி, குறைந்த பட்ஜெட்டில் நிறைய சினிமாக்கள் இங்கே எடுக்கப்படணும்ங்கறது தான் என் ஆசை!"



அனிதாவின் தந்தை, பென்டஃபோர் நிறுவனத் துணைத் தலைவரான சந்திரசேகர்!

**— எஸ். சந்திரமௌலி**

அட்டை, படங்கள்: ஸ்ரீஹரி



# சுபானு வருடப் பலன்கள்!

அக்னி சர்மா

**எல்லாம் வல்ல இறைவன் அருளால் எல்லோரும் எல்லா நலமுடனும் வளமுடனும் வாழப் பிரார்த்திக்கிறேன். இப்போது நிலவிவரும் யுத்தம் மற்றும் அதன் பாதிப்புகள் இறையருளால் சித்திரை மாதம் பதினாறாம் தேதிக்கு மேல் நலமாகும். ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் அரசியலில் எதிர்பாராத மாற்றங்கள் ஏற்படலாம். எல்லாமே நலமாகும். சுபானுவே வருக, சுகமெல்லாம் தருக!**



## மேஷம்:

வருஷ ஆரம்பமே உங்களுக்கு ஜோர்தான். இதுவரை இருந்து வந்த ஏழரை நாட்டான் நலமாக விலகுகிறார். ஆரம்பம் பூரம், வளர்பிறை சந்திரன் என்பதால் நல்ல திருப்பங்கள் உண்டாகும். என்றாலும் மே மாதம் வரை சில பிரச்னைகள் இருந்து வரும். இடமாற்றம் ஏற்படலாம். செலவினங்கள் கட்டுக்கடங்காது. அதேசமயம் சமூகத்தில் மதிப்பு உண்டாகும். ஜூலை மாதத்துக்கு மேல் மனத்தில் உற்சாகம் பொங்கும். உடல் ஆரோக்கியம் மேன்மையடையும். எதிர்ப்புகள் மறையும்.

அஸ்வினி நட்சத்திரக்காரர்களுக்கு சுப பலன்கள் கூடுதலாகும். மக்களால் மகிழ்ச்சி உண்டாகும். வேலையில் பதவி உயர்வும், நல்ல இடமாற்றமும் உண்டாகும். நீங்கள் வேலை தேடிக் கொண்டிருப்பவரா? நல்வாய்ப்பு கிடைக்கும். ஆகஸ்ட் மாதம் முதல் பண நெருக்கடி மறையத் தொடங்கும். பெண்களுக்கு எல்லா வகையிலும் சுப பலன்கள் கூடும். திருமணமாகாதவர்களுக்கு, திருமணமாகும். உங்கள் நட்சத்திரம் பரணியா? உங்கள் மனம் கல்வியை நாடும். படிப்புக்காக வெளிநாடு போக வாய்ப்புண்டு. உடன் பிறந்தவர்களால் சில பிரச்னைகள் ஏற்படும். உணர்ச்சிவசப்படாமல் சுமுகமாகப் பேசி சரி செய்து கொள்வது நல்லது. வருடத்தின் பின்பாதியில் நல்ல பலன்கள் ஏற்படும். கிருத்திகை நட்சத்திரமென்றால் இதுவரை தாமதமாகி வந்த காரியங்கள் இப்போது நிறைவேறும். இதுவரை விரோதமாக இருந்தவர்களும் மந்திரம் போட்டது போல் மாறி விடுவார்கள். கலைத்துறைக்காரர்களுக்கு புகழ் ஓகோதான். அரசியல்வாதிகளுக்குச் செல்வாக்கு அதிகமாகும்.

ஸ்ரீகணபதி வழிபாடு முக்கியம். பிரதி வெள்ளிக்கிழமை, செவ்வாய்க்கிழமை கணபதி தரிசனம் நன்மை தரும்.

## ரிஷபம்:

சுபானு வருடம் யோகமாகவே ஆரம்பமாகிறது. உடல்நலம்



மேன்மையடையும். திட்டமிட்டபடி காரியங்கள் நடக்கும். மே மாதம் வரை பலன்கள் நிதானமாகவே இருக்கும். கடந்த ஒரு வருடமாக சரியான வேலையில் இல்லாமல் தவிப்பவரா? கவலையை விடுங்கள். மே மாதத்தில் பிடித்தமான வேலையில் சேருவீர்கள். கோடை விடுமுறை உல்லாசமாகக் கழியும். தொழிலதிபர்கள், சட்ட வல்லுனர்களுக்கு வெளிநாட்டுப் பயண யோகம் உண்டு. கலைத்துறைக்காரர்களுக்கு உயர்வு நிச்சயம்.

கிருத்திகை நட்சத்திரக்காரர்கள் மிகவும் நன்மையடைவார்கள். தசா புத்தி நன்றாக இருந்தால் பலன்கள் மேலும் அதிகம். வேலையில் முன்னேற்றம் உண்டு. ஆசிரியர்கள் மற்றும் நிர்வாகிகள் வேலையில் உயர்வு பெறுவார்கள். குடும்பத்தில் அமைதி நிலவும். வேறென்னங்க வேண்டும்? ரோகிணி நட்சத்திரமென்றால் இதுவரை தாமதமாகி வந்த சுபகாரியங்கள் கைக்கூடும். திருமண வாய்ப்பு ஏற்படும். அம்மாவின் உடல் நலத்தில் அதிக கவனம் செலுத்த வேண்டும். முக்கியமாக அக்டோபர் மாதத்தில்! நவம்பருக்கு மேல் மிக அதிக ஆதாயம் கிட்டும். பெண்களைப் பொருத்த வரை இந்த ஆண்டு நகைகள், பிற சொத்துக்கள் என்று வாங்கி மகிழ்வார்கள். குழந்தைகளால் மகிழ்வு ஏற்படும். மிருகசீரிஷ நட்சத்திரமென்றால் சனி பகவான் உங்கள் நட்சத்திரத்தில் இரு மாதங்கள் சஞ்சரிக்கிறார். இரு சக்கர வாகனங்கள் ஓட்டுபவர்களும் காரை வேகமாக ஓட்டும் பழக்கம் கொண்டவர்களும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. யாருக்கும் மறந்தும் ஜாமீன் கையெழுத்துப் போடாதீர்கள். வீடு மாற்றம் ஏற்படலாம். ஆகஸ்ட் பதினைந்துக்கு மேல் மிகவும் யோகம்தான். 2004 தொடக்கத்தில் குடும்பத்தில் சுப நிகழ்ச்சி உண்டாகும். வீடு, மனை போன்ற ரியல் எஸ்டேட் வியாபாரத்தில் இருப்பவருக்கு அனுகூலமான வருடமிது.

சுந்தர காண்டம் மற்றும் விஷ்ணு சஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வது நல்லது. அல்லது அவரவர் இஷ்டதெய்வத்தை வேண்டிக் கொள்ளலாம். வெள்ளிக்கிழமைகளில் பசுமாட்டுக்கு அகத்திக்கீரை மற்றும் வாழைப்பழம் கொடுத்து வந்தால் கிரக தோஷம் நீங்கி நன்மை கிடைக்கும்.



## மிதுனம்:

இந்த ஆண்டில் உங்கள் குடும்பச் சூழ்நிலை அமோகமாக இருக்கும். வேலை செய்பவர்களுக்கு யோகம் தான். பதவி உயர்வு, இடமாற்றம் இரண்டுமே உண்டு. இரு சக்கர



வாகனங்களில் செல்பவர்கள் பார்த்து ஓட்டுங்க. திருட்டு (பிக்பாக்கெட் உள்பட) நடக்காமல் பொருள்களை பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். சிலிர்த்துக் கொண்டு நிற்காமல் பிறருடன் ஒத்துப் போவது உத்தமம்.

மிருகசீரிஷ நட்சத்திரக்காரர்களுக்கு சுப காரியங்களுக்கான முயற்சி பலனளிக்கும். திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு வருடத் தொடக்கத்தில் தனிச் சிறப்பு கிடைக்கும். பிரிந்த குடும்பத்தினர் ஒன்று சேருவார்கள். சிம்ம ராசியில் சனி சஞ்சாரம் என்றாலும் குரு இரண்டாம் இடத்தில் உச்சத்தில் இருப்பதால் எடுத்த காரியத்தைத் திறமையுடன் நிறைவேற்றி வெற்றி காண்பீர்கள். அலுவலகத்தில் மேலதிகாரியின் ஆதரவும் அங்கீகாரமும் கிடைக்கும். உடல் நலம் சீராக இருக்கும் என்றாலும் அக்டோபரிலிருந்து ஜனவரி மாதம் வரை

''மாடி வீடு கட்டப் போறேன்னு சொல்லிட்டு அண்டர் கிரவுண்டுல வீடு கட்றீங்களே...?''

''வாஸ்து நிபுணர்தான், ''வாஸ்துப்படி இந்த வீட்டுக்கு முதல் மாடியைக் கீழேயும், கிரவுண்ட் ஃப்ளோரை மேலேயும் கட்டணும்னு சொல்லிட்டார்!''

— சீர்காழி வி. ரேவதி

உடல் நலத்தில் கவனம் தேவை. பெரியவர்களின் ஆசியால் தடைகள் விலகும். ஆசிரியர்கள், சட்ட வல்லுனர்கள், தொழிலதிபர்கள் ஆகியோர் குறிப்பிடத்தக்க சிறப்பு பெறுவார்கள். மாணவர்களுக்கு ஓரளவு மறதியும் கவனக்குறைவும் ஏற்படலாம். விநாயகரைப் பிரார்த்தனை செய்தால் சரியாகும். பெண்களுக்கு நல்லதே நடக்கும். அக்டோபரிலிருந்து ஜனவரி வரை பண விஷயத்தில் நிதானம் தேவை. பிப்ரவரியிலிருந்து வருடக் கடைசி வரை அமோகமான பலன்கள் ஏற்படும். புனர்பூசம் நட்சத்திரம் அன்பர்களின் குடும்பத்தில் குதூகலம்தான்— முக்கியமாக மகன் மற்றும் மகள்களால். பெற்றோர்கள் நலமாக இருப்பார்கள். வேலையில் ஆனந்தம் கிடைக்கும். தொழில் முன்னேற்றம் உண்டு. அரசாங்க ஆதரவு குறைவின்றிக் கிடைக்கும். ஆகஸ்ட் மாதத்துக்கு மேல் பணவசதி ஏற்படும். வெளிநாடு போகும் வாய்ப்பும் உண்டு. மாணவர்களுக்குப் படிப்பில் முன்னேற்றம் உண்டாகும்.

மிதுன ராசிக்காரர்கள் லலிதா சஹஸ்நாமம் பாராயணம் செய்வதும் அம்மன் வழிபாடு செய்வதும் மிகவும் நல்லது. ராகு காலங்களில் ராகு கேதுவை வழிபடுவதும் ஏற்றது. விஷ்ணுசகஸ்ரநாமத்தை ஜெபிக்கவும்.



## கடகம்:

புதிய ஆண்டு நன்றாகத் தொடங்கும். ஆனால் உடல் நலத்தில்தான் சின்னச் சின்னக் கோளாறுகள். ஆகஸ்டிலிருந்து எல்லாவிதங்களிலும் நல்ல பலன்கள் உண்டாகும். சனி பன்னிரண்டில் சஞ்சாரம் என்பதால் பொருளாதார நிலை மேலும் கீழுமாக மாறி மாறி அலைக் கழிக்கும். யாருக்கும் ஜாமீன் போட்டு வைக்காதீர்கள். குடும்பத்தில் சில குழப்பங்கள் ஏற்பட்டு தானாக விலகும். குழந்தைகளின் நலத்தில் அதிகப்படி கவனம் இருக்கட்டுமே. ஆகஸ்ட் முதல் அலுவலக வேலை செய்பவர்களுக்கு யோகமான பலன். தொழில்களில் ஈடுபடுபவர்களுக்கும் நன்மைதான். ஆகஸ்ட் வரை மேலதிகாரிகளின் அதிருப்திக்கு ஆளாகலாம். கணவரின் (அல்லது மனைவியின்) உடல் ஆரோக்கியத்தை அலட்சியப்படுத்தாதீர்கள். குரு சிம்மராசிக்கு ஆகஸ்ட் முதல் மாறுவதால் குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கும். வருடத்தின் கடைசி நான்கு மாதங்கள் அமோகம்தான்.

பூச நட்சத்திரக்காரர்களுக்கு சுபானுவின் முதல் மூன்று மாதங்கள் கொஞ்சம் அலைச்சலைத் தரும். எதிர்பார்த்த காரியங்களில் கொஞ்சம் தாமதம் உண்டாகும். வயிறு சம்பந்தப்பட்ட கோளாறுகள் ஏற்பட்டால் மறக்காமல் மருத்துவ சிகிச்சையைப் பெற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் வயதில் முதியவரென்றால் உடல்நலத்தில் கவனம் செலுத்தவும். ஆயில்ய நட்சத்திரக்காரர்களுக்கு வெளிநாட்டிலிருந்து நல்ல செய்தி வரும். மகனோ மகளோ வெளிநாட்டிலிருந்தால் இந்தியாவுக்கு வருகை தருவார்கள். பணப்பிரச்னைகள் தீர்ந்துவிடும். நவம்பரிலிருந்து வருட இறுதிவரை யோகபலன்தான்.

ஆதித்ய ஹ்ருதயம், சூரிய நமஸ்காரம், ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ரநாமம் ஆகியவற்றை பக்தியுடன் கூறினால் நலம் பெறலாம்.

## சிம்மம்:



நீங்கள் அதிர்ஷ்டசாலிதான். வருடத் தொடக்க முதல் சனி 11ல் குரு 12ல் என்றாலும் சனியின் பலம் காரணமாக நல்லதே நடக்கும். கடந்த இரண்டு வருடங்களாக ஆட்டி வைத்த பிரச்னைகள் மறைந்துவிடும். கல்வியில் முன்னேற்றம் உண்டு. புதியவர்கள் அறிமுகத்தால் நல்லது உண்டாகும். நீங்கள் எடுக்கும் முயற்சிகள் எல்லாம் அமோக

''உங்க ஆபீசுக்கு விசிட் செய்த மேலதிகாரி சப்தம் போட்டாராமே?''
''வாங்கற லஞ்சத்துக்கு உருப்படியா வேலை பாருங்க'ளுதான்.''
_ எஸ். முகமது யூசுப்



''அவன் காங்கிரஸ் பிரமுகர் மகனாத் தான் இருக்கணும்...''

''எப்படி உறுதியாச் சொல்றீங்க?''

''எத்தனை சொல்லிக் கொடுத்தாலும் மோதாமல் ஒரு நாளும் இருக்க வேண் டாம்'னு உறுதியா சொல்றானே!''

– தஞ்சை தாமு



வெற்றிதான். குடும்பத்தில் தெய்வீக காரியங் களுக்குக் குறைவிருக்காது. வேலையில் முன்னேற்றம் உண்டு. தொழிலதிபர்களுக்குப் பெரிய வெற்றி காத்திருக்கிறது. அரசியல் வாதிகள் என்றால் ஜூலை முப்பதாம் தேதிக்கு மேல் உயர்வு கிடைக்கும், மதிப்பு உயரும். புது வாகனம், புதுவீடு போன்றவை வாய்க்கும். சுருக்கமாக, நினைத்ததை முடிப்பீர்கள்.

மகம் நட்சத்திரக்காரர்களுக்கு முதல் மூன்று மாதங்கள் மேன்மைகள் உண்டாகும். பிறகு எதிர்பாராத அலைச்சல்கள் உண்டா கும். பூரமென்றால் முதல் மூன்று மாதங் களில் பல உன்னதங்கள் உண்டாகுமென் றாலும், செப்டம்பர் முதல் ஜனவரி வரை தேவையற்ற இடமாற்றங்கள் ஏற்படக் கூடும் செலவினங்கள் வருவாயை மீறிச் செல்லும். உத்திர நட்சத்திரக்காரர்கள் முதல் ஆறு மாதங்களில் நிதானமாக முன்னேற்றங்கள் நடைபெறும். ஜனவரியிலிருந்த வருடக் கடைசி வரை எல்லா விஷயங்களிலுமே எச்சரிக்கையாக இருப்பதே நல்லது.

ஸ்ரீகணபதி, ஸ்ரீதுர்கையை வழிபட்டு மேன்மையடையுங்கள். ஸ்ரீலட்சுமி நரசிம் மரை பிரார்த்தனை செய்தால் சுகம் கிடைக் கும்.




## கன்னி:

இதுவரை இருந்து வந்த தடைகள், குறுக்கீடுகள் உடல் நலக்குறைவுகள் எல்லாமே போச்சு. துணிவு, தன்னம் பிக்கை, ஆரோக்கியம பெரு கும். ஆகஸ்ட் மாதம் வரை உங்கள் காட்டில் மழைதான். திட்டமிட்டபடி காரியங்கள் நடக்கும். படிப்பில் உற்சாகம் கூடும். பொரு ளாதாரம் மேன்மையடையும். தாயாரின் உடல்நலத்தில் அக்டோபர் நவம்பரில் கவனம் செலுத்த வேண்டும். கடன் தொல் லைகள் குறையும். என்றாலும் பண விஷ யத்தில் எச்சரிக்கை அவசியம். சகோதரர் களால் சொத்து விவகாரங்களில் பிரச்னை கள் உண்டாகக்கூடும். கூடியவரை சமாதான மாகப் பேசி சுமுகமாகப் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளப் பாருங்கள்.

உத்திர நட்சத்திரமா? குடும்பத்தில் குறை கள் மறைந்து ஒற்றுமை மலரும். ஹஸ்தமா? தனலாபம், புதிய தொழில் உண்டு. இதுவரை இருந்த தொல்லைகள் மறையும். வியாபாரி கள், தொழிலதிபர்களுக்கு முன்னேற்றம் தான். திருமணம், மகப்பேறு போன்ற நல்ல காரியங்கள் நடக்கும். வெளிநாட்டிலிருந்து மகன், மகள் வருகை, ஆனந்தத்திற்குக் கேட் பானேன்? சித்திரை நட்சத்திரக்காரர்களுக்கு எல்லா வகையிலும் முன்னேற்றம்தான். எதிர்பார்த்த பண உதவி கிடைக்கும். உத்தி யோகம் பார்ப்பவர்கள் ஆகஸ்ட் வரை அதிக கவனத்துடன் இருக்க வேண்டும்.

நவக்கிரகங்களை வலம் வருவது நல்லது. முக்கியமாக குருபகவானிடம் பிரார்த்தனை செய்வது மேலும் நல்லது.

## துலாம்:




கடந்த ஒன்றரை வருடங் களாக இருந்து வந்த நெருக் கடியான சூழல்கள் மாறிவிடும். நல்லது நடக்கும். உடல் ஆரோக்கியம், பொருளாதாரம் இரண்டிலுமே முன்னேற்றம்தான். கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியும். சகோதரர் களும் நண்பர்களும் உதவிக்கு வருவார்கள். உங்கள் புகழ் கூடும். குடும்பத்தில் அமைதி பொங்கும். அந்நிய இனத்தாரால் (முக்கிய மாக பிற மதத்தினர்) நன்மை உண்டாகும். வெளிநாட்டுத் தொடர்புகள் நன்மை பயக் கும்.

சித்திரை (3,4 பாதங்கள்) நட்சத்திரக் காரரா? அலுவலக வேலை பார்ப்பவர் என்றால் வருடத் தொடக்கத்தில் சில பிரச் னைகள் ஏற்பட்டு விலகும். பண விவகாரங்

களில் எச்சரிக்கை இருக்கட்டும். செப்டம்பர் மாதத்துக்கு மேல் மகன், மகளால் பெருமை உண்டாகும். சுவாதி நட்சத்திரமென்றால் குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கும். திட்டங்கள் நிறைவேறும். அரசியல்வாதிகள் ஆகஸ்ட்வரை நிதானம் காட்ட வேண்டும். அக்டோபருக்கு மேல் நல்ல பலன்கள்தான். தொழில் செய்பவர்கள் மற்றும் வியாபாரிகள் வளர்ச்சியடைவார்கள். சட்டம், காவல் மற்றும் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் துறையில் உயர்வு பெறுவார்கள். விசாக நட்சத்திரக்காரர்கள் முதல் மூன்று மாதங்கள் உடல்நலத்தில் கவனம் செலுத்த வேண்டும். உத்யோகஸ்தர்களுக்கு ஆகஸ்ட் மாதத்துக்குமேல் உயர்வு கிட்டும். வீடு, மனை, சொத்து விவகாரங்கள் 2004- ஜனவரி மாதத்துக்கு மேல் நல்ல முறையில்



கைவசமாகும். பெண்களுக்கு இந்த ஆண்டு சில சுகாதாரத் தடைகள் ஏற்பட்டு விலகும். நவம்பர் மாதத்திற்கு மேல் எல்லாவகையிலும் சுபம்தான்.

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமம் அல்லது அம்பாள் துதியை பக்தியுடன் பாராயணம் செய்வது நலம். வெள்ளிக்கிழமைகளில் தவறாமல் அம்மன் கோவிலுக்குச் சென்று வரவும். வருடத்தின் பின்பாதியில் நன்மைகள் கூடும்.




### விருச்சிகம்:

முதல் மூன்று மாதங்களுக்கு குருபகவான் நன்மைகள் செய்வார். சனி எட்டில் என்றாலும் தொல்லை தர மாட்டார். ஆகஸ்ட் முதல் ராகு கேது மாற்றம் என்பதால் செப்டெம்பர் முதல் நன்மை உண்டாகும். எதிர்பார்த்த பதவி உயர்வு தாமதமடையும். வேலை பளுவும் செலவினங்களும் அதிகரிக்கும். குடும்பத்தில் விசேஷங்கள் நடக்கும். மாணவர்கள் படிப்பில் அவசியம் அதிக கவனம் செலுத்த வேண்டும். சகோதரர்களால் செப்டம்பர் மாதத்தில் சில பிரச்னைகள் உண்டாகலாம்.

விசாகம் (4ஆம் பாதம்) எனில் மனை, வீடு வகைகளில் நன்மை ஏற்படும். பெண்களுக்குப் புதிய சொத்துகள் சேரும். அனுஷ நட்சத்திரக்காரர்கள் பொருளாதார மேன்மை அடைவார்கள். மக்களால் மகிழ்ச்சி உண்டு. உடல் நலம், பதவி உயர்வு கிட்டும். பயணத்தால் நல்ல பலன்கள் ஏற்படும். பெண்களுக்கு எல்லாவகையிலும் உற்சாகமான ஆண்டு இது. கேட்டை நட்சத்திரக்காரர்களுக்குத் தொழிலும் வியாபாரமும் சிறப்பாக நடக்கும். திருமணமாகாதவர்களுக்கு அக்டோபருக்குள் திருமணம் தகையும். மாணவர்கள் மேன்மை அடைவார்கள்.

''அந்த எக்ஸ்ரேயில் 'அப் நார்மலா' முதுகுத் தண்டு ரொம்ப வளைஞ்சிருக்குதே- யாருடையது..?''

''புதுசா தேர்வான எம்.எல்.ஏ.வுடையது டாக்டர்!''

— ஆர். ஜி. ஹரி

சுந்தர காண்டத்தை பாராயணம் செய்வதும், ஸ்ரீகணபதி மற்றும் ஆஞ்சநேயரை வழிபடுவதும் நன்மைக்கு வழி வகுக்கும். பிரதோஷ தரிசனம் பெரும் நன்மையைத் தரும்.



### தனுசு:

முதல் மூன்று மாதங்கள் மிகச் சாதாரணமாகவே இருக்கும். ஆகஸ்ட் முதல் நீங்கள் எடுக்கும் முயற்சியில் வெற்றி நிச்சயம். உடல் நலத்தில் முன்னேற்றம் உண்டாகும். குடும்பத்தினரிடம் நிலவி வந்த விரோதம் மறைந்து அமைதி உண்டாகும். திருமணம் போன்ற விசேஷங்கள் நடக்க வாய்ப்பு உண்டு. புதியவர்களால் நன்மை உண்டாகும். வெளிநாட்டுத் தொடர்புகளால் நன்மை பயக்கும். பொருளாதாரத்தில் சிக்கல் இருக்காது. போட்டி, பந்தயம், ஸ்பெகுலேஷன் ஆகியவற்றில் சில ஆதாயங்கள் உண்டாகும். புதிய தொழில், வியாபாரம் ஆகியவற்றைத்

தொடங்க வாய்ப்பு உருவாகும்.

மூல நட்சத்திர அன்பர்களின் கடன் தீர்வதுடன், புதிய சொத்துக்களும் வசமாகும். அரசாங்கத்தால் நன்மை உண்டு. நீங்கள் அரசியல்வாதியா? புதுப்பதவி கிடைக்கும், அனுபவியுங்க. சகோதரர்களால் உதவியும், மகன் மற்றும் மகளால் மகிழ்ச்சியும் கிடைக்கும். பூராட அன்பர்கள் வருடத் தொடக்கத்தில் புதிய பொறுப்புகளை ஏற்று மனத் திருப்தி கொள்வார்கள். ஆனால் புதிய தொழில் மற்றும் புது வியாபாரத்தில் முதலீடு போன்றவை வேண்டாமே. அக்டோபர் முதல் நற்பலன்கள் தெரியும். வெளிநாடு போகும் வாய்ப்பு உண்டு. உத்திராட நட்சத்திரம் (முதல் பாதம்) என்றால் ஆகஸ்ட் மாதம் வரை எதிலுமே நிதானம் தேவை. நவம்பருக்கு மேல் நல்லது நடக்கும்.

குரு கிரகப்ரீதி நல்லது. ஆஞ்சநேயருக்கு வடைமாலை சாற்றலாமே. அம்பாள் தரிசனம் நலம் தரும்.



### மகரம்:

இதுவரை இருந்து வந்த மனக்குறைகள் நீங்கி நல்ல பலன் ஏற்படும். தன்னம்பிக்கை அதிகமாகும். உடல்நலம் மேன்மை பெறும். மனத்தில் ஆக்கப்பூர்வமான எண்ணங்கள் உண்டாகும். நண்பர்கள், உறவினர்கள் சமயத்தில் கை கொடுப்பார்கள். இதுவரை பிரிந்திருந்தவர்கள் ஒன்று சேர்வார்கள்.

உத்திராடம் (2,3,4 பாதம்) நட்சத்திரக்காரர்களுக்கு சரளமான பணப்புழக்கம் இருக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி கூத்தாடும். பதவி உயர்வு கிடைக்கும். புது வீடு, புது வாகனம் போன்ற பாக்கியங்கள் உண்டாகும். பயணத்தால் அனுகூலம் உண்டு. தொழிலதிபர்கள், அரசியல்வாதிகள் மேன்மை பெறுவர். திருவோண நட்சத்திரக்காரர்களுக்கு எதிர்பாராத அதிர்ஷ்டம் கதவைத் தட்டும். தொட்டதெல்லாம் பொன்தான். குடும்பத்தில் குதூகலம். கடன் தொல்லை மறையும். எழுத்தாளர்கள், கலைஞர்கள் ஆகியோருக்குப் பாராட்டுகள் குவியும். அவிட்ட நட்சத்திரக்காரர்களுக்கு தெய்வீகத் தலங்களுக்கு யாத்திரை, தர்மப்பணிகள் ஆகியவை கிட்டும்.

ஸ்ரீதிருப்பதி ஏழுமலையானைப் பிரார்த்தனை செய்வதும், மகான்களை தரிசனம் செய்வதும் நன்மை பயக்கும்.



இராமநாதபுரம் மாவட்டத்தில் ஓடும் ஒரு பேருந்தின் பெயர்ப் பலகையில் எழுதியிருந்த ஊரின் பெயர்: சிக்கல்(வழி) சிரமம்.

தகவல்: முகவை. முத்துசாமி



### கும்பம்:

இதுவரை சிரமங்கள் வாட்டியதா? பொருளாதாரத்திலும் நெருக்கடியா? கவலை வேண்டாம். இவை இந்த வருடத்தில் கணிசமாகக் குறைந்து விடும். மனத்தில் உற்சாகம் ததும்பும். துணிச்சல் பிறக்கும். கல்வியில் ஆர்வம் அதிகரிக்கும். குடும்ப சங்கடங்களும் கருத்து வேறுபாடுகளும் மாயமாய் மறையும். கணவன் - மனைவி நெருக்கம் அதிகரிக்கும். சகோதரர்கள் உதவத் தயங்க மாட்டார்கள். பிரிந்த குடும்ப உறுப்பினர்கள் ஒன்று சேருவார்கள். வருடத்தின் முதல் மூன்று மாதங்கள் உடல்நலத்தில் கவனம் தேவை.

அவிட்ட நட்சத்திரக்காரர்களுக்குச் சில எச்சரிக்கைகள். விஷப் பிராணிகளால் பயம் உண்டாகலாம். உணவில் நச்சுப் பொருள்கள் கலந்து வயிற்று நோய் வரக் கூடும். எனவே உணவு விஷயத்தில் கவனம் தேவை. ஆகஸ்ட் முதல் அனைத்தும் நலமாகும். சதய நட்சத்திரக்காரர்களுக்கு மனை, வீட்டு யோகம் ஏற்படும். பெண்கள் மேலும் சில நகைகளை வாங்கிக் குவிப்பார்கள். சுபச் செலவு ஏற்படும். குல தெய்வப் பிரார்த்தனை நேரும். பூரட்டாதி உங்கள் நட்சத்திரமென்றால் குடும்பத்தில் மகிழ்ச்சியோடு புதிய பொருள் சேர்க்கை உண்டாகும். பெண்கள் என்றால் எண்ணம் நிறைவேறும். செப்டெம்பர் முதல் எதிலும் நிதானம்

தேவை. பொருளா தாரச் சரிவு ஏற்படக்கூடும். எச்சரிக்கை.

பெண்கள் சுமங்கலி பூஜை மற்றும் தம்பதி பூஜை செய்வதால் நன்மை கூடும். பொதுவாகவே ஸ்ரீதுர்கைக்கு அபிஷேக அர்ச்சனை செய்வதாலும் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமம் பாராயணம் செய்வதாலும் நலம் பெறலாம்.



## மீனம்:

இதுவரை இருந்த தெளிவான வாழ்க்கையில் சில மாற்றங்கள் உண்டாகும். உடல் நலத்தில் கவனம் தேவை. அசிரத்தை வேண்டாம். வேலையில் கூடுதல் பொறுப்பும் விரும்பாத இடமாற்றமும் ஏற்படலாம். ஆகஸ்ட் மாதம் முதல் குரு ஆறாம் இடத்துக்கு மாறுவதால் உங்கள் பழக்க வழக்கங்களில் பலவித இடையூறுகள் ஏற்படலாம். மனக்குழப்பங்களும் பயமும் உண்டாகக்கூடும். பொருளாதார நிலையில் சரிவு ஏற்படலாம். எனவே சிக்கனமாக இருக்கவும், குடும்பத்தில் சிறு குழப்பங்கள் ஏற்பட்டு நிவாரணமும் கிடைக்கும். கணவன் மனைவி உறவு சாதாரணமாக இருக்கும். இருவருமே மனம் திறந்து பேசி விட்டுக் கொடுத்து வாழ்ந்தால் குறை ஏற்படாது. சுப காரியங்கள் திட்டமிட்டபடி நடைபெறாமல் குறுக்கீடுகள் ஏற்படலாம். நிதானமும் தெய்வ பக்தியும் தன்னம்பிக்கையும் நெறியான வாழ்க்கையும் இருந்தால் தடைகள் விலகி நன்மை ஏற்படும். மாணவர்கள் படிப்பில் முழு கவனம் செலுத்த வேண்டும்.

பூரட்டாதி நட்சத்திரம் கொண்டவர்களில் சிலருக்குப் புதுமனை புகு விழா கொண்டாடும் சந்தர்ப்பம் அமையும். செப்டெம்பர் மாதம் வரை சராசரி பலன்கள் தடைப்படாது. அதற்குப் பிறகு எதிலும் கவனம் அவசியம். உத்திரட்டாதி நட்சத்திர அன்பர்களுக்குக் குடும்பத்தில் நன்மை ஏற்படும். எடுத்த காரியங்களில் வெற்றி கிட்டும். தொழில் புரிபவர்கள் ஆதாயம் அடைவார்கள். பெற்றோரின் உடல் நலத்தில் கவனம் தேவை. மருத்துவச் செலவு ஏற்படும். உடன் பிறந்தவர்களால் அளவான நன்மை ஏற்படும். வருடக் கடைசியின் மூன்று மாதங்கள் கால்வலி, மூட்டுவலி, வாய்ப்புண், ஜீரணக் கோளாறு போன்ற பாதிப்புகள் உண்டாகலாம். பெரியோரின் ஆசி மற்றும் மகான்களின் தரிசனம் நன்மை சேர்க்கும். ரேவதி நட்சத்திரக்காரர்களுக்குப் புதிய முயற்சிகள் வெற்றி தரும். குடும்பத்தில் தெய்வீக ஈடுபாடு அதிகமாகும். அலுவலகத்தில் ஒற்றுமை அதிகமாகும். தொழில் புரிவோர் சுபிட்சமடைவார்கள். அரசியல்வாதிகள் முதல் ஐந்து மாதங்களுக்கு நற்பலன்களை அடைவார்கள். பின் பாதியில் எச்சரிக்கை தேவை. 2004 பிப்ரவரி முதல் நல்லவை ஆரம்பமாகும்.

குலதேவதை பிரார்த்தனை மிகவும் அவசியம். திருப்பதி, வெங்கடாசலபதி மற்றும் ஸ்ரீலட்சுமி நரசிம்மரைத் துதித்து வணங்குவது நலம். ஸ்ரீ குரு ராகவேந்திரர் தலத்தைத் தரிசிப்பதும் அவரை பூஜிப்பதும் நன்மை தரும்.

## சிம்மாசனம்

**அரசர் அமரும் ஆசனம் (இருக்கை) சிம்மாசனம் என்று எப்போது அழைக்கப்பட்டது?**

இரணியனை வதம் செய்து, நரசிம்மப் பெருமான் பிரகலாத ஆழ்வானை அமரச் சொன்னார். அப்போது பெருமாளை அவ்வாசனத்தில் அமர்ந்து தூய்மைப்படுத்த வேண்டினான். பக்தனின் வேண்டுகோளை ஏற்று, நரசிம்ம பகவான் அந்த ஆசனதில் அமர்ந்து, பின் பிரகலாதனை அமர்த்தி முடிசூட்டினார். அன்றையில் இருந்து அரசர் அமரும் ஆசனம் "அரியாசனம்" (அரி-சிங்கம்) சிங்காசனம் அல்லது சிம்மாசனம் என்று அழைக்கப்படலானது. மேலும், 'சிங்கத்தை' அந்த ஆசனத்தில் செதுக்கவும் தொடங்கினார்கள்.

- மயிலாடுதுறை கல்யாணராமன்
சொற்பொழிவிலிருந்து
தகவல் : வி. சித்ரா.

'வாழ்த்துக்கள்'

நீண்ட முதல் கை, பக்கத்து சீட் பத்மஜாவின் கையாக இருந்தது.

"எப்படியோ போராடி மெட்டர்னிடி லீவ் வாங்கிட்டீங்க!"

"ஆமாம் பத்மஜா. மெட்டர்னிடி லீவ் என்பது சிறு குழந்தையை கவனிக்கத்தானே. தத்துக் குழந்தையா இருந்தா அதுக்குக் கவனிப்பு வேண்டாமா? பெத்த குழந்தைக்குத் தான் லீவ் கொடுப்பேன்னு பெரிசு வெறுப்பேத்திச்சு. நேரே சேர்மன் கிட்ட போயிட்டேன்."

"சூப்பர். பெரிசுக்கு முகத்திலே ஈயாடலை. அதுக்காக ஸ்பெஷல் வாழ்த்துக்கள்."

பத்மஜாவுக்கு நன்றி சொல்லிவிட்டு வருகையில் முரளி விழித்துப் பார்த்தான். தோளைக் குலுக்கினான். நகர்ந்து விட்டான். இது உன் விஷயம் என்பது போல. எனக்கும் இதற்கும் சம்மதமில்லை என்பது போல. சங்கீதாவும் ஒரு முறை தோளைக் குலுக்கிக் கொண்டாள். இப்படிச் செய்வது நன்றாக இருக்கிறது. எதிராளியை அலட்சியப் படுத்துவதை இதைவிட நாகரிகமாகச் சொல்ல முடியாது. முரளி, இந்தக் குழந்தை எனக்கு வேண்டும்... நீ கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்து கொள்வாய்...

அம்மாவிடம் பேசினாள். பலவீனமான குரலில் அம்மா சொன்னாள். 'அத்தை கிட்ட பேசியிருக்கேன் சங்கீதா. கூட வந்து ஒரு மூணு மாசம் இருக்கச் சொல்லியிருக்கேன். என்னால முடியாட்டாலும் அத்தை வருவா - அத்தை அடுத்த நாளே வந்து விட்டாள். குழந்தைகளுக்கு யாருடைய இரத்தம் என்று அவளுக்குப் பார்க்கத் தெரியாது. தட்டுக் கெட்டுப் பிறந்ததா, தவறாய்ப் பிறந்ததா என்று கேட்கத் தெரியாது. எல்லாக் குழந்தைகளும் அவளுக்குப் பெருமாளின் அம்சம்.

அத்தை வந்த பிறகு குழந்தை, மிதமான சூட்டில் தினம் குளித்தாள். கால்களில் போட்டு அத்தை குளிப்பாட்டுவதே ரொம்ப அழகாய் இருந்தது. வீட்டிற்கு இஸ்திரி போட்டுத் தருகிற வேணுவிடம் நெருப்புக் கங்கு வாங்கி சாம்பிராணி போட்டாள். லாக்டோஜன் கரைத்தாள். 'சாப்பிட்ட உடனே

# பூவைப் போல

படுக்கப் போடாதே. தோளில் போட்டு முதுகைத் தடவு' என்றாள். தூளி கட்டினாள். ஜலதோஷம் பிடித்தால் தேங்காய் எண்ணெயில் கற்பூரம் கலந்து பற்றுப் போட்டாள்.

வயசான ஒரு மனுஷி வேலை செய்கிறாளே, என்று மாமியாரும் கொஞ்சம் கொஞ்சம் கை கொடுத்தாள். ஒரு நாள் பாட்டில்களை ஸ்டெரிலைஸ் செய்தாள். மறுநாள் வெளியே போய் முக்கோண நாப்பிகளும், சிறுசிறு சட்டைகளும் வாங்கி வந்தாள். குழந்தையால் வீட்டில் வேலை, சங்கிலியாய் நீண்டது. வீடு முழுக்க டெட்டால் வாசம். ஓயாமல் தோய்க்க துணி. சங்கீதா அலுக்காமல் வேலை செய்தாள். ஒரு வார லீவ் முடிந்து அலுவலகம் போகும் அன்று தான் முடிவு செய்தாள். மூன்று மாத மெட்டர்னிட்டி விடுப்புக்குப் போராடுவது என்று. தன்னுடைய மானேஜர் மறுத்த போது, நேரே சேர்மனின் பார்வைக்கு ஒரு கடிதம் எழுதினாள்.

"சங்கீதா, ஹீ இஸ் பிஸி. பார்க்க முடியாது இப்போது' என்றார் சேர்மனின் உதவியாளர்.

"பாத்ரூம் போகவாவது வெளியே வருவார் இல்ல. அப்ப பேசறேன்" என்றாள்.

ஒரு மணி நேரம் கழித்து சேர்மன் புகை பிடிக்க வெளியே வந்தார். அவள் அலுவலகத்தில் ஆண்கள் புகை பிடிக்கும்

சங்கீதாவுக்கு அயர்வாக இருந்தது. இரவுகளில் குழந்தை தூங்காமல் அழும் போது, கூட விழித்திருப்பதன் அயர்வு. ஆனால் போன முறை மாதிரி இப்போது சமாளிக்க முடியுமா என்று பிரமிப்பாக இல்லை. தளர்வு ஏற்படும் போதெல்லாம் தன் கையைப் பற்றிய அந்த நொடியை நினைத்துக் கொண்டால் தளர்வு போய் விடுகிறது.

குழந்தையோடு திரும்ப வீட்டிற்கு வந்த அன்று மாமியார் பொரிந்து கொட்டினாள்.

'காலைப் பிடித்த சனி' என்று முனகல்.



# பூப்போல

இடத்திற்குப் பெண்கள் போவதில்லை. அது அவர்களின் ராஜ்ஜியம். அங்கேதான் அலுவலகப் பெண்களை அவர்கள் அலசுவார்கள். கிரிக்கெட் பேசுவார்கள். பெண்கள் எல்லாம் சீரியல்கள் பற்றிப் பேசும் அசடுகள்.

அவள் பச்சைக் குழந்தையை தத்து எடுத்திருக்கிறாள். பெற்ற பிள்ளைக்குத்தான் மெட்டர்னிடி தேவை என்று யார் சொன்னது? சட்டங்கள் ஒருவருக்கு உதவி செய்யத்தானே தவிர, உரிமைகளை மறுக்க அல்லவே... சேர்மன் அவளைப் பார்த்தார். அவர் ஆவன செய்வேன் என்று சொன்னாலொழிய அடுத்த சிகரெட்டை புகைக்க முடியாது போலிருந்தது. 'கடிதம் கொண்டு வா பார்க்கலாம்' என்றார். தயாராக கடிதத்தை நீட்டினாள். அங்கேயே கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். அதை தன் நிர்வாகியிடம் நீட்டி, அவர் முகம் சுருங்குவதை ரசித்தவாறு வெளியே வரும்போது தான் பத்மஜா வாழ்த்தினாள்.

எழுதிக்கோ... 'ஆறிரண்டும் காவேரி, அதன் நடுவே ஸ்ரீரங்கம்' அத்தை சொல்லச் சொல்ல எழுதிக் கொண்டாள். தாலாட்டுப் பாடாமல் எந்தக் குழந்தை தூங்கும்? காவேரி பொங்கிய காலத்தில் தாலாட்டு. இன்றைக்குப் பொருந்தாவிட்டாலும் இதமாய் இருந்தது. குழந்தை அழுகிறதாம். அழுத கண்ணீர் ஆறாய்ப் பெருகியதாம். ஆறாய்ப் பெருகி ஆனை குளித்தேரியதாம். குளமாய்ப் பெருகி குதிரை குளித்ததாம். இஞ்சிக்குப் பாய்ந்து, எலுமிச்சை வேரோடியதாம். மஞ்சளுக்குப் பாய்ந்து மருதாணி வேரோடியதாம். வாய்க்காலில் பாய்ந்து வழிப்போக்கர் கால் கழுவியதாம்.

பாரதி பாஸ்கர்

எதற்கு இத்தனை கண்ணீர் என்றால், அந்தை அரளிப்பூ பந்தால் அடித்தாளாம். சங்கீதா நினைத்து நினைத்துச் சிரித்தாள் - அந்தை சொல்லச் சொல்ல. திடீரென்று நினைவு வந்தது. இந்த மாதிரி சிரித்து, ஒரு மூணு நாலு வருஷமாவது ஆகியிருக்கும்.

"குழந்தைக்குப் பேர் வைடி பொண்ணே... அப்புறம் எல்லாரும் சுட்டி, பேபி, சூப்பின்னு எதாவது பேரை நிலைக்கப் பண்ணுவா."

எளிமையாகத் தொட்டில் போட்டாள். நெல் பரப்பி பேர் எழுதினாள்.

"என்ன பேர் சங்கீதா?"

"சஹானா" என்ற போது முரளி இவளை விழி உயர்த்திப் பார்த்தான். அது அவனுக்குப் பிடித்த ராகம். அன்று இரவு தூங்கிய குழந்தையின் கால்களில் கொலுசு மாட்டி வருடியவாறு உட்கார்ந்த போது, முரளி பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். யாருக்கோ சொல்வது மாதிரி சொன்னான்.

"நாங்க ஒரு நாலஞ்சு ஃபிரெண்ட்ஸ். பல வருஷமா ரொம்ப நெருக்கம். கல்யாணம் ஆனப்புறம் சிதறிப் போயிட்டோம். எல்லாரும் இள வயசா இருக்கறப்போ மனசுக்குப் பிடிச்ச பெண் எப்படி இருக்கணும்னு அவங்கவங்க கற்பனையைச் சொன்னோம் ஒரு நாள். ஒருத்தன் சொல்றான் - விடிகாலையிலே எழுந்து தலைக்குக் குளிச்சு, ஆவி பறக்கிற காஃபிய நீட்டி அவனை எழுப்பறாளாம் ஒரு பெண். அதுதான் அவனுக்குப் பிடிச்ச உருவகமாம். என்னை மாதிரியே பாட்டுப் பைத்தியம் இன்னொருத்தன். அவன் சொல்றான், பட்டுப்புடைவை, பூ, ஜிமிக்கியோட மேடையிலே பாடறாளாம் ஒரு பெண், எல்லாமே என் கணவருக்குச் சமர்ப்பணம்ங்கறாளாம். பெருமைக்குப் பெருமையும் ஆச்சு, காசுக்குக் காசும் ஆச்சு. இது அவன் உருவகம் - மூணாவது ஆள் ரொம்ப ஃபார்வேர்ட். இவனோட சட்டையையும் ஜீன்ஸையும் மாட்டிண்டு, நெற்றியில விழற முடிய கோதிண்டு, கார் ஓட்டிண்டு போகிற பெண் தான் இவனுக்கு வேணுமாம். எல்லாரும் என்னைக் கேட்டா. ரொம்ப உண்மையா பதில் சொன்னேன். ஆறு மாச கர்ப்பமா இருக்கா அந்தப் பொண்ணு. கை நிறைய வளையல் அடுக்கியிருக்கு. பக்கத்துல கொஞ்சம் கவலையோடும் அக்கறையோடும் நான் தாங்கிப் பிடிக்கறேன். இந்த உருவகம் தான் எனக்குப் பிடிச்சிருக்குன்னு சொன்னேன். ஒரே கேலி. பிடிச்ச பெண்ணை கல்யாணத்துக்கு முன்னாடி கர்ப்பமாக்கிட்டான் பாருன்னு பயங்கர கிண்டல். ஆனால் அதுதான் என் மனசில் இருந்தது. நமக்குக் கல்யாணம் ஆன நாளிலே இருந்து எதிர்பார்த்து ஏமாந்து, எதிர்பார்த்து ஏமாந்து, நான் ரொம்ப வெளியிலே சொல்லிக்கற ஆள் இல்லை. ஆனா நான், என் இரத்தம்னு சொல்லிக்க எதுவுமே கிடையாதுன்னு சதா ஒரு தோல்வி மனப்பான்மை. என்னைப் பார்த்து துப்புக் கெட்டவன்னு எல்லாரும் சிரிக்கறாப் போல ஒரு நினைப்பு. குப்பைத் தொட்டியில் போடற குழந்தைகள், சிக்னல்களிலே பிச்சைக்காக வாடகை விடற குழந்தைகள் இதெல்லாம் நம்மை மாதிரி குழந்தை இல்லாதவங்களுக்கு ஆளுக்கு ஒண்ணாய்ப் பிறக்கப் படாதா? கடவுள் என்ன அவ்வளவு கொடூரமான படைப்பாளியா?"

முரளிக்குக் குரல் கம்மிவிட்டது. 'இவ்வளவு வேதனையா உன் மனத்தில்' என்பது போல் சங்கீதா அவனைப் பார்த்தாள். பிறகு நிதானமாகச் சொன்னாள்.

"இதுதான் நமக்காக கடவுள் கொடுத்த குழந்தை. வேற இடத்தில் பிறந்திருக்கலாம். ஆனா இதுக்காக நாமும், நமக்காக இதுவும் காத்திருந்து அடைஞ்சு இருக்கோம். எந்த இடத்தில் பிறந்தோம்ங்கற சந்தேகத்தை விட்டுட்டா, இந்தக் குழந்தையை நமக்குன்னு கொண்டாடலாம். சீதையும், ஆண்டாளும் எந்த இடத்தில் பிறந்தவா? யாருக்குத் தெரியும்? அவங்களும் தத்துக் குழந்தைகள் தானே... அது மாதிரிதான் சஹானாவும்!"

முரளி திரும்பவும் ஏதோ பேசப் போனான். சங்கீதா அவனைப் பேச விடவில்லை. அவனை இறுக அணைத்துக் கொண்டிருந்தாள். கொஞ்ச நேரத்தில் சஹானா அழுத போது "நான் தூளி ஆட்டறேன். நீ போய் லாக்டோஜன் கரைச்சுண்டுவா!" என்றான் முரளி.

(தொடரும்)

---

''தலைவர் தொகுதியில எல்லாரிடமும் கண்டபடி கடன் வாங்கியிருக்கார்னு நெனைக்கிறேன்...''

''எதனால சொல்லறே?''

''என் 'கடன் பிறப்புகளே'ன்னுதான் பேச்சை ஆரம்பிக்கிறார்!''

- எம்.ஆர்.மூர்த்தி





# ஜாலி ஸ்கூல்!



• கௌசல்யா ஸ்ரீனிவாசன்.

"ச்சே, வீடு ஒரே போர், ஸ்கூலுக்காச்சும் போயிருக்கலாம். ஏன் தான் லீவு விடறாங்களோ...!" என்று ஒரு நாலாம் வகுப்பு வாண்டு கூறினால்... ஆச்சரியம்தானே! அப்படித்தான் கூறுகிறார்கள் மதுரை அக்ஷரா மெட்ரிகுலேஷன் பள்ளிக் குழந்தைகள்.

"எங்களுக்கு ஸ்கூல்னாதான் ஜாலி. ஸ்ட்ரிக்ட் இல்லை, அடிப்பது, திட்டுவது, அங்க போகாதே, இங்க நிக்காதே'ன்னு எந்த கண்டிஷனுமில்ல. எக்ஸாமும் இல்லை" என்கிறார்கள் இங்குள்ள குழந்தைகள்.

தேர்வே இல்லையா? பிள்ளைகள் நன்கு படிக்கிறார்கள் என்பதை எப்படித் தெரிந்து கொள்ள?

"பிரைமரி எஜுகேஷன் என்பதே அடிப்படைக் கல்வியைக் கற்றுத் தருவதுதான். அடிப்படையை ஆழமாக வேர் பிடிக்கச் செய்வதுதான் முக்கியமே தவிர, அதில் பரீட்சை என்பது தேவையற்றது. இதில் குழந்தைகளுக்குப் பயிற்சிதான் முக்கியம். அடிப்படைகளை நன்கு கற்ற பிறகுதான் தேர்வே வைக்கணும். ஆறாம் வகுப்பிலிருந்து எக்ஸாம்ஸ் உண்டு. அதற்கு முன் எக்ஸாம்ஸ் வைத்து, 'நீ நன்றாகப் படிக்கலை, மக்கு என்று ரேங்கிங் செய்வது குழந்தைகளின் மன நிலையை, எதிர்காலத்தை நிச்சயம் பாதிக்கும்" என்கிறார் பள்ளியின் தாளாளர் கௌசல்யா ஸ்ரீனிவாசன்.

"எங்கள் பள்ளியைப் பொறுத்த வரை எல்லா குழந்தைகளும் பரீட்சை பயமின்றி நன்றாகக் கற்கிறார்கள். ஹோம்வொர்க்கும் அப்படித்தான். பிரைமரி குழந்தைகளுக்கு மிகக் குறைந்த அளவே ஹோம்வொர்க் கொடுக்கிறோம். அதுவும் பெற்றோர்கள் சொல்லிக் கொடுக்கக்கூடாது. தெரிந்தால் செய்துட்டு வா, தெரியலைன்னா யார்ட்டயும் கேட்க வேண்டாம், நாளைக்கு நான் சொல்லித் தர்றேன்ங்கறோம்" என்கிறார்.

கடந்த ஆறு வருடங்களாக 'ஓர்க் ஷாப்' என்ற பெயரில் ஒரு முறையை கையாள்கிறார்கள். இதில் இரண்டாம் வகுப்பு முதல் ஆறாம் வரை ஒரு காலரி, ஏழு முதல் ஒன்பதாம் வகுப்பு வரை ஒரு காலரி. இந்த ஓர்க் ஷாப், கிட்டத்தட்ட இரண்டு மாத காலம் நடக்கிறது. ஒரு நாளில் காலையில் இரண்டு பீரியட்கள் ரெகுலர் பாடமும், மீதியுள்ள பீரியட்கள் 'ஓர்க்ஷாப்' ஆகவும் நடக்கிறது. இதில் கணிதம், அறிவியல், மொழி (தமிழ், ஹிந்தி, ஆங்கிலம்) என்று பிரிவுகள். மாணவர்கள் ஒவ்வொரு நாளும் ஒரு பிரிவுக்குச் செல்ல வேண்டும். அதில் இதுநாள் வரை அந்தப் பாடத்தில் என்னென்ன சந்தேகம் இருந்ததோ, அதைக் கேட்டுத் தெளிவு படுத்திக் கொள்ளலாம்.

"கல்வியில் சிறக்க மனவளர்ச்சி அவசியம். கண்டிப்பது கூட தனிமையில் கண்டிப்பதே நல்லது. பெரியவர்களுக்கு எப்படி 'ஈகோ' இருக்கிறதோ அது குழந்தைகளுக்கும் உண்டு. அதைப் பெற்றோர்களும், ஆசிரியர்களும் அடிக்கடி உரசுவதால் அவர்களது குணத்தில் மாற்றம் ஏற்படுகிறது" என்கிறார் கௌசல்யா.

பரீட்சை, டெஸ்ட், டென்ஷன் என்று மற்ற மாணவர்கள் பறந்து கொண்டிருக்க, இங்கு மட்டும் அமைதியாய் மிதக்கிறார்கள் சந்தோஷமாக!

- சத்யா வெங்கட்

# என்னாச்சு?

'டைட்டானிக்' நாயகி கேத் வின்ஸ்லெட் சமீபத்தில் ஒரு முடிவெடுத்திருக்கிறார். இது குறித்து அவருக்கே கொஞ்சம் வியப்பு!

டைட்டானிக்கில் பெரும் புகழ் பெற்ற இவர் அடுத்து நடித்த படம் 'ஹீடியஸ் கின்க்கி.' படம் வளர்ந்து கொண்டிருந்த போது அதன் உதவி இயக்குனர் ஜேம்ஸ் த்ரெபின்டன் மீது காதல் கொள்ள, இருவரும் திருமணம் செய்து கொண்டனர். மியா என்ற மகளும் பிறந்தாள். ஆனால் சென்ற வருடம் ஜேம்ஸை விவாகரத்து செய்து விட்டார் கேத்.

அதெல்லாம் சரி, கேத் எடுத்த புதிய தீர்மானம் என்ன என்கிறீர்களா? "டைட்டானிக்" வெளியாகி சூப்பர் வெற்றி பெற்ற நாளிலிருந்தே, கேத் இனி தொடர்ந்து ஹாலிவுட் படங்களில்தான் நடிப்பார் என்றும், லண்டனிலிருந்து அமெரிக்காவுக்குக் குடிபெயர்ந்துவிடுவார் என்றும் பலமாக எதிர்ப்பார்க்கப்பட்டது.

ஆனால் இதைக் கடுமையாக மறுத்துக் கொண்டிருந்தார் அவர். "ஹாலிவுட்டுக்கு இனி போகமாட்டேன். லண்டனை விட்டுப் பிரிந்து வாழ்வதை என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது" என்றார்.

டைட்டானிக் வெளியாகி ஆறு வருடங்களுக்குப் பிறகு "லைஃப் ஆஃப் டேவிட் கேல்"என்ற ஹாலிவுட் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டிருக்கிறார். இதையடுத்து 'என்னாச்சு இவருக்கு?' என்று ஆச்சர்யத்தில் இருக்கிறார்கள் லண்டன் வாசிகள்.

"ஹாலிவுட் படங்களின் வீச்சை முழுவதுமாக என்னால் ஒதுக்க முடியவில்லை" என்று கேத் கூறினாலும், தமது ஆறு வருட உறுதியிலிருந்து அவர் மாறுபட வேறொரு காரணமும் இருக்கக் கூடும் - விவாகரத்தைத் தொடர்ந்து பிரிட்டிஷ் மக்களும், அங்குள்ள பத்திரிகைகளும் இவர் மீது எழுப்பிய கண்டனங்கள்!

— ஜி.எஸ்.எஸ்.

# வட்டமேஜை

✉ 'வீட்டிலே ஒரு டாக்டர்' இலவச இணைப்பு பயனுள்ள பொக்கிஷம். அதில் இடம் பெற்ற அத்தனை ஜோக்குகளும் அருமை!
தூத்துக்குடி - 2, கஸ்ரத்.

✉ கண்ணெதிரே சுற்றுச்சூழல் பாழ்படு வதைக் கண்டும் காணாமல் இருக்கிறார்கள் எனும் பாலா ரிச்மேனின் கருத்து, நம்மவர் கள் சுற்றுச் சூழல் கண்காணிப்பில் கவன மின்றி இருப்பதை எச்சரித்தது.
சென்னை - 26, சி. மகேஷ்.

✉ கோப்பையைக் கைப்பற்ற அவர்கள்தான் தவறி விட்டார்கள் என்றால், நீங்களுமா? கிரிக்கெட் மேட்ச் பாணியில் 'அன்பு' படத்தை விமரிசனம் செய்து எங்களை நோக அடிச்சிட்டீங்களே?
பள்ளப்பட்டி, த. அசாருதீன்.

✉ காட்டாவூர் சிவன் கோயிலின் நிலை தான் இன்று தமிழகத்தில் பெரும்பாலான கோயில்களின் நிலை. ராஜமோகன் போன்ற துடிப்பான இளைஞர்கள் பழசுக்கு ஆதர வளிப்பது மகிழ்ச்சி அளிக்கிறது.
திருவாரூர், எஸ். பாலச்சந்தர்

✉ பெற்ற மகனிடம் கிடைக்காத, அன்புக் காக மட்டுமே ஏங்கி நிற்கும் வயோதிக வாழ்வில், பேரக் குழந்தைகளிடமிருந்து கிடைக்கும் ஆறுதல் வார்த்தைகளால் ஜென்ம சாபல்யம் அடைந்துவிட்ட திருப்தியை, பாலு சத்யாவின் 'காலி நாற்காலி'யில் ரசித்தேன்.
சென்னை - 116, எஸ். மைக்கேல்

✉ ஆமை, அமீனா...அபசகுன 'லிஸ்ட்'டில் இந்துத்வா இடம் பெற்றுவிட்டது. சாகித்ய அகாடமி யில் இந்துத்வா புகுந்தது ஒரு சாபக்கேடு.
திருவண்ணாமலை, ஆர். ஆர். சாமி

✉ ஈராக் போர் உண்மையிலே தனி ஒரு மனிதனை அழிப்பதற்காக உருவாக்கப்பட்ட போரே தவிர இது ஒரு நிஜப் போரல்ல! புனித போருமல்ல. மனித குலத்திற்கு முற்றிலும் எதிரான போர் என்பதே நிதர் சன உண்மை! அமெரிக்காவின் இத்தகைய மூர்க்கத்தனமான போக்கைத் துல்லியமாக விளக்கிய தலையங்கம் அருமை.
தூத்துக்குடி - 4, ஏ.எஸ். காந்தி.

✉ 'ஏனிந்த யுத்தம்?' கட்டுரையில் அமெரிக்கா – ஈராக் யுத்தத்தின் நிஜக் கார ணத்தை, துருவித் துணிந்து எழுதியதால் உண்மையைத் தெரிந்து கொள்ள முடிந்தது..




## நீங்களுமா?

மதுரை - 7 கோரா.

✉ 'வெளவால் வளர்த்தேன்' கட்டுரை படித்தேன். அடைக்கலம் புகுந்த சிறு உயிரினத்திடம் சுபாஷிணி காட்டிய அன்பு பாராட்டுக்குரியது.
நங்கநல்லூர், பி.பவானி.

இக்கட்டுரையின் மூலத் தகவலைத் தந்தவர் அடையாறு டி.எஸ். வேங்கடரமணி. இவர் தந்த செய்திக் குறிப்பு மற்றும் புகைப்படம் வைத்தே பேட்டிக் கட்டுரை அமைக்கப்பட்டது. – ஆர்.

# தூண்டும் செய்தி!

'காமெடி டைம்'மின் இரண்டாம் பாகத்தில் ட்ராஜெடி கலக்குமென யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும்? சானல்களுக்கும் கேபிள் ஆபரேட்டர்களுக்கும் நடைபெறும் 'யுத்தத்தில்' சென்னை மாநகரின் பாதி வீடுகளில் விஜய் டீ.வி. தெரியவில்லை. மீதி வீடுகளில் சன் நியூஸ், கே. டீ.வி. தெரியவில்லை. சன் குடும்பத்தில் பல சானல் கிளைகள் இருப்பதில் ஒரு வசதி. 'இன்று பாண்டியராஜனின் காமெடி டைம் கே. டீ.வியில். உங்கள் வீட்டில் கே. டீ.வி. தெரியவில்லையா? கேபிள் ஆபரேட்டரை அணுகுங்கள்' என்று தொடர்ந்து சன்னில் ஃப்ளாஷ் ஓடி நிகழ்ச்சிகளில் ஒன்றவிடாமல் எரிச்சலைக் கிளப்பியது. கலைஞர் கைதுக்குப் பிறகு தொடர்ந்து இப்படித் 'தூண்டும்' விதத்தில் ஒரே செய்தி 'சன்'னில் இடம் பெற்றதென்பது இதுவாகத்தான் இருக்கும்.

வெள்ளிக்கிழமைகளில் புதிய படங்களை 'வெள்ளி மின்னல்கள்' என்ற தலைப்பில் ஒளிபரப்பி புதிய வியூகம் வகுத்திருக்கிறது ராஜ் டீ.வி. இதனால் மாலை – இரவு மெகா சீரியல்கள், ராஜில் இனி வாரத்திற்கு நான்கு நாட்கள்தான். திரைப்படங்களால் நன்மையா தீமையா என்ற பட்டிமண்டபத் தலைப்பிற்கு ஒரு கூடுதல் பாயிண்ட்.



• பாண்டியராஜன்

சர்வதேச அந்தஸ்து கிடைத்ததில் கென்யா மகிழ்வது ஒருபுறமிருந்தாலும், கிப் கெய்னோவை மறக்காமல் நினைவு கூர்கிறார்கள் அந்நாட்டு மக்கள் என்பதை சி.என்.என்.னில் உணர்த்தினார்கள். மெக்சிகோ சிடியில் நடைபெற்ற ஒலிம்பிக்ஸில் 1500, 5000, 10000 மீட்டர்கள் பந்தயங்களில் கென்யாவுக்குப் பெருமை சேர்த்தவர். மராத்தன் பந்தயம் ஒன்றில் கலந்து கொண்டிருந்தபோதே இறந்தவர். கெய்னோவுக்குச் சிலை கூட எழுப்பியிருக்கிறார்களாம்.

விஜய்யில் 'சீதாதேவியின் அவதாரமான' அஞ்சலியின் குழந்தையை எடுத்துக் கொண்டு 'சூர்ப்பனகையின் மறுவடிவமான' காவ்யா சிங்கப்பூர் சென்று விடுகிறாள். மறுபடியும் கர்ப்பமான அஞ்சலியின் கர்ப்பத்தை அங்கிருந்தே கலைக்கவும் முடிவு செய்கிறாள் (ரிமோட் வைத்துக் கொண்டு இல்லை. சென்னையிலுள்ள உள்கையான பணிப்பெண்ணின் மூலம்). பார்ப்பவர்களுக்குப் பகீர் உணர்வை ஏற்படுத்த வேண்டும் என்று செயல்படுகிறார்கள். நோக்கம் வெற்றிதான். ஆனால் வேறு காரணத்துக்காக எழுகிறது அந்த உணர்வு. இந்தக் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகும்வரை தொடர் தொடருமோ? சரிசரி, அது பற்றிக் கவலைப்பட வேண்டியவர்கள் நமது பேரன்களுக்குப் பேரன்கள் தானே?



• அஞ்சலி (கன்யா)

மங்கையர் சாய்ஸில் டாக்டர் ரங்கராஜன் என்பவர் மாமியார் மருமகன் உறவு குறித்துப் பேசினார். 'இருவருக்குமிடையே ஒரு வசதியான இடைவெளி இருக்க வேண்டும். மிகவும் ஒட்டிக் கொள்ளாமல் இந்த எல்லைகளைத் தெரிந்து கொள்ளும்போதுதான் உறவு உறுதிப்படும். இந்த இடைவெளி எது என்பதைத் தீர்மானிக்க இருவரும் மனம்விட்டுப் பேசிக் கொள்ள வேண்டும்' என்றார்!

— சேனல்பாய்

# ஸ்ரீ சனீஸ்வர பகவானின் ஸ்தலமான திருநள்ளாரில் 22.05. 2003 ல் ரிஷபத்திலிருந்து மிதுனத்திற்கு சனிப்பெயர்ச்சியாகும் நாளில் நடைபெறும் அன்னதானப்பணியில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

## சனிப்பெயர்ச்சியில் அன்னதானம்

பேரன்புடையீர் ! வணக்கம். திரு நள்ளாற்றீஸ்வரப் பெருமான் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

**தருமை ஆதீனம் குரு மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சத்குரு சண்முக தேசிக ஞான சம்பந்த** பரமாச்சாரியார் சுவாமிகளின் அருளாசியுடன் ஐந்தாண்டுகளுக்கு மேலாக திருஅண்ணாமலையில் பௌர்ணமி கிரிவலத்தில் தொடர்ந்து அன்னதானப்பணியில் ஈடுபட்டு வரும் **"ஆன்மீகம்"** தெய்வீக மாத இதழ் வாசக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க, வரும் சனிப்பெயர்ச்சி நாளன்று திருநள்ளாரில் தெற்கு வீதியில் அமைந்துள்ள **தருமை ஆதீன கட்டளை மடத்தில்** அன்னதான திருப்பணி நடைபெற இருக்கிறது. இத் திருப்பணியில் பங்கு கொண்டு சனிப்ரீதி செய்வித்து சகலக்ஷேமங்களும் பெற அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

திருநள்ளாரில் எள் எண்ணெய் தீபமேற்றி அங்கு வரும் அன்பர்களுக்கு எள் சாதத்துடன் அன்னதானம் செய்தால் சனீஸ்வர பகவான் மனம் மகிழ்ந்து எல்லாவகையான தோஷங்களிலிருந்தும் விடுவிப்பார் என்பது திண்ணம். அனைவரும் சகல சௌபாக்கியங்களையும் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு ஆன்மீக மாத இதழ் சார்பாக நடத்தப்படும் ஆன்மீக அன்னதான அறக்கட்டளை என்ற அமைப்பின் மூலம் திருநள்ளாரில் அன்னதானம் செய்து நற்பலன்களைப் பெறுவோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு வெள்ளெருக்கு வேர் விநாயகரும், ஸ்ரீ தர்பாரண்யேஸ்வரர், ஸ்ரீ பிராணேஸ்வரி அம்மன் வண்ணப்படமும், ஸ்ரீ திருஞானசம்பந்தர் அருளிய கோளறு பதிகம் எனும் நவக்கிரஹசாந்தி புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு சனிக்கிழமை அன்று திருநள்ளாரில் அன்னதானம் செய்து பத்து ஆண்டுகளுக்கு ஆன்மீகம் மாத இதழ் அன்பர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

எல்லோரும் எல்லா வளமும் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு காசி, இராமேஸ்வரம், திருஅண்ணாமலை ஆகிய புண்ணிய ஸ்தலங்களில் அமாவாசை,பௌர்ணமி நாட்களில் மாதா மாதம் நடைபெறும் அன்னதான திருப்பணிகளைப் போலவே 22. 05. 2003 லிருந்து ஒவ்வொரு சனிக்கிழமை தோறும் திருநள்ளாரில் தெற்கு வீதியில் அமைந்துள்ள தருமை ஆதீன கட்டளை மடத்தில் அன்னதான திருப்பணி தொடர்ந்து நடைபெறும்.

இந்த அன்னதான திருப்பணி (திருக்கோயிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீகம் இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் கைங்கர்யத் தொண்டு புரிந்து வரும் அனைத்து ஆன்மீக அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

- நன்கொடை அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust, Chennai - 4) என்ற பெயரில் Cheque / D. D/ M. O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம் தரும் இறைபணி சேவைகளாக "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" திருநள்ளாரில் செய்து வர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.




நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net




சனிபகவான் யந்திரம்

ஸ்ரீ சனிபகவானின் ஸ்தலமான திருநள்ளாரில் சனிக்கிழமையில் செய்யும், அன்னதான சேவையின் போது வாழை இலை போட்டு எள் சாதத்துடன் செய்யும் அன்னதானத்திற்கு இணையான தர்மமே நவக்கிரஹ பரிகாரங்களில் உயர்ந்ததாகும்.

# புதுப் பாடம்

**ஜி.எஸ்.எஸ்.**

**கா**ரை ஓட்டியபடியே ஸ்ரீராம் கூறினான். "சுதா, ஒரு விஷயத்தில் நாம தெளிவா இருக்கணும். நமக்குன்னு கணிசமான சேமிப்பை வச்சுட்டு பாக்கியைத்தான் நம்ம குழந்தைகளுக்குச் செலவழிக்கணும். வயசான காலத்தில் நாம அதுங்களை நம்பி இருக்கக் கூடாது. என்ன சொல்றே?"

ஒப்புக் கொள்வது போல் தலையசைத்த சுதா, "இப்பல்லாம் மகனுக்கும் மகளுக்கும் சொத்தில் சம பங்குன்னு ஆயிடுச்சே. நமக்கு இருக்கறதோ ஒரே வீடு. நமக்கப்புறம் அதை அவங்க எப்படிப் பிரிச்சுப்பாங்கன்னு நினைக்கிறீங்க? கீழே ஒருத்தர், மேலே ஒருத்தர்னா?"

"நோ நோ. இப்பத்தானே கண்ணனும் வாணியும் பத்தாவதும், ஆறாவதுமாப் படிக்கிறாங்க. இன்னும் சில வருடங்களில் நாம இன்னொரு வீடு கட்டிவிட மாட்டோமா என்ன? இப்போதைய வீடு என்பேரில இருக்கு. அடுத்த வீட்டை உன் பேரிலே வாங்கலாம். நமக்கப்புறம் ஆளுக்கொரு வீடா நம்ம பிள்ளைங்க எடுத்துக்கட்டுமே."

"சரிசரி, வண்டியைப் பாத்து ஓட்டுங்க. இன்னும் ஒரு முப்பது கிலோ மீட்டராவது போகணுமில்ல?" என்று கேட்டாள்.

ஸ்ரீராமுக்குத் தூரம் ஒரு பொருட்டாகத் தெரியவில்லை. 'மனதுக்கு இவ்வளவு நெகிழ்ச்சியும் ஆனந்தமும் தரக் கூடிய ஒரு காரியத்தை ஏன் தனது நாற்பது வருட வாழ்க்கையில் இதுவரை செய்யாமல் இருந்தோம்?' என்ற கேள்விதான் மனத்தில் எட்டிப் பார்த்தது. தாத்தாவும் பாட்டியும் தங்கள் வருகையை நிச்சயம் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். தங்களைப் பார்த்ததும் ஆனந்தத்தில் மூழ்கிப் போய்விடுவார்கள், பாவம்.

**அ**வ்வளவு சீக்கிரமாக எதிர்பாராத பதவி உயர்வு கிடைத்ததும் அதைக் கொண்டாடத் தீர்மானித்தார்கள் ஸ்ரீராமும் சுதாவும். கோடை விடுமுறைக்கென்று மகனும் மகளும் தங்கள் மாமாவின் வீட்டுக்குச் சென்றிருக்கையில் ஹோட்டல், பார்ட்டி என்று அமர்க்களப்படுத்த மனமில்லை. அப்போதுதான் சாம்பசிவ தாத்தாவின் நினைவு வந்தது. தாத்தா என்றால் சொந்தத் தாத்தா அல்ல. 'இது ஒரு சொந்தமா' என்று கேட்கும் அளவுக்கு மிகவும் தூரத்து சொந்தம்.

நகர வாழ்க்கை என்பதைத் தவிர எந்தக் குறிப்பிட்ட காரணமும் இல்லாமலே, இரு குடும்பங்களுக்கும் கடந்த பத்து வருடங்களுக்கும் மேலாக போக்குவரத்து இல்லாமல் போய்விட்டது. தகவல்கள் மட்டும் அவ்வப்போது யார் மூலமாவது ஏதாவது குடும்பத் திருமண விசேஷங்களில் காதுகளை எட்டும். சாம்பசிவ தாத்தாவுக்கு இப்போது வயது எண்பத்தைந்து. லட்சுமிப் பாட்டிக்கு எழுபத்தொன்பது. தாத்தாவுக்கு சஷ்டியப்தப் பூர்த்தி, சதாபிஷேகம் போன்ற எந்த வைபவமும் நடைபெறவில்லை. அவர்களுக்கென்று குழந்தைகள் யாருமில்லை என்பதுடன் பொருளாதார நெருக்கடி வேறு. சுதந்திரப் போராட்ட வீரராக இருந்த தாத்தா, பிற்காலத்தில் சமூக சேவைகள் செய்வதிலேயே காலத்தைக் கழித்துவிட்டார். அக்கா பையன் கொடுத்து வந்த சொற்பத் தொகையில் காலம் கழித்து வந்தார். சமீபத்தில் அதுவும் நின்றுவிட்டதோ என்னவோ, சென்னையின் புறநகர்ப் பகுதியைத் தாண்டி இருந்த ஒரு மடத்தின் விடுதி ஒன்றில் இருவரும் வசித்து வருவதாகக் கேள்வி. தங்குமிடமும் உணவும் இலவசம். போதாதா?

அவர்களைச் சந்தித்துவிட்டு வந்தால் என்ன? ஸ்ரீராம் கூறிய மாத்திரத்தில் லட்சுமி ஒத்துக் கொண்டாள். வயசானவங்க பாவம், இல்லாதவங்க பாவம், மகன் மகள்னுகூட யாரும் கிடையாது பாவம் என்றெல்லாம் தொண்டை கரகரக்க தொடர் பாவப்பட்டு விட்டு "புடைவை வேஷ்டி வாங்கிக் கொடுத்தா அவங்களுக்கும் நல்லது, நமக்கும் நல்லது" என்றான். 'பட்டுப்புடைவையாவே வாங்கிடலாமா? வேணாம், வயசானவங்க. கனமான புடைவையைக் கட்டிக்கிட்டா

கஷ்டமாயிருக்கும். தவிர அந்த இடத்திலே இதையெல்லாம் உடுத்திக்க அவங்க கூச்சப்படலாம். அதனால ரெண்டு பருத்திப் புடைவையாவே வாங்கிடலாம்.

கடைக்குச் சென்றபோது இரண்டு என்பது மூன்றானது - 'இல்லாதவங்க. நமக்கும் புண்ணியம்.'

ஸ்ரீராமும் தாத்தாவுக்காக இரண்டு பாலியஸ்டர் வேஷ்டிகளை வாங்கினான். கூடவே இரண்டு காசித்துண்டுகளும், ஒரு டர்க்கி டவலும்.

சுதா அடுத்தடுத்துப் பல கடைகள் ஏறி இறங்கினாள். கஸ்தூரி மஞ்சள், குங்குமம், ரவிக்கை பீஸ்கள், கும்பகோணம் வெற்றிலை, ஒரு பொட்டலம் சீவல், இவற்றை வைத்துக் கொடுக்க ஒரு பிளாஸ்டிக் தட்டு என்று பட்டியல் விரிந்தது.

**வ**ந்தது யாரென்று இருவருமே புருவத்தின் மீது உள்ளங்கையை வைத்தும், கண்களை இடுக்கியும் பார்த்தாலும், பாட்டிதான் முதலில் கண்டுபிடித்தாள். "நம்ம ஸ்ரீராமும், அவன் பாரியாளும்" என்றவள் அப்போதும் தன் கணவருக்கு ஏதாவது சந்தேகம் ஏற்படுமோ என்ற சந்தேகத்தில் "நம்ம கோமுவோட பிள்ளையாண்டான் நடராஜனோட மச்சினன் பிள்ளை" என்றாள்.

''என்ன இருந்தாலும் என்னைவிட ஆறுவயசு இளையவளாச்சே. அதுதான் கண் பார்வை தீர்க்கமா இருக்கு" என்று கூறி, தன் நகைச்சுவைக்கு தானே சிரித்தார் பெரியவர். அவர் மனைவியின் முகத்தில் இதை ரசித்ததற்கான ஆதாரம் புலப்படவில்லை.

"எப்படியிருக்கேள்?'' என்று கேட்கும் போதே ஸ்ரீராமுக்குத் தொண்டை அடைத்தது. இந்த வயதில் தனிமையில் தட்டுத்தடுமாறி நிற்கும் இவர்களிடம் இப்படி ஒரு கேள்வி கேட்கலாமா? அதே சமயம் வேறெப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்றும் தெரியவில்லை.

"எங்களுக்கென்ன, ஜாம்ஜாம்னு இருக்கோம். போதாக்குறைக்கு நீங்க வேற வந்திருக்கீங்க." பெரியவரின் குரலில் உண்மையாகவே உற்சாகம் தெறித்துக் கொண்டிருந்தது.

"வாம்மா. உன் கல்யாணத்தப்போ பார்த்ததுதான். எப்படியிருக்கே? ரெண்டு குழந்தைன்னு கேள்விப்பட்டோம். நன்னா படிக்கறாளா?" என்றபடி சுதாவின் கைகளை ஆர்வத்துடன் பற்றிக் கொண்ட பாட்டி அதை விடுவதாய் இல்லை.



அந்த முதிய தம்பதி தனிமையில் ஏங்கிப் போயிருப்பதும், தங்கள் வருகை அவர்களை பெரும் ஆனந்தத்தில் ஆழ்த்தியிருப்பதும் மிகவும் வெளிப்படையாகவே புலப்பட்டது.

சுற்றும் முற்றும் பார்த்தனர். கண்களை அதிகம் ஓட்டவிட வேண்டிய தேவையே இல்லாத அளவுக்கு மிகச்சிறிய அறை. அதையே இரண்டாக ஒரு ப்ளைவுட் மூலம் தடுத்திருந்தார்கள்.

"அந்தப் பக்கம் இருக்கறது சமையலறை" என்றாள் பாட்டி.

சுதாவுக்குப் பரிதாபமாக இருந்தது. மடத்திலேயே சமைத்துப் போடுவார்கள் என்றல்லவா நினைத்திருந்தாள்! இந்த வயதில் இந்தப் பாட்டி சமைக்கிறாளா?

பெரியவர் அந்த திடுக்கிடலைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். "இங்க திவ்யமா எங்களுக்குச் சமைச்சுப் போடறா. காலையில் ஒரு கப் கஞ்சி. மத்தியானமானதும் ஒரு கப் சாம்பார் சாதம், ஒரு கப் மோர் சாதம். இதுவே யதேஷ்டம் இல்லையோ? போதாக் குறைக்கு ராத்திரியும் ஒரு கப் ரசஞ்சாதம் உண்டு. ஆனா உங்க மாமிக்குதான் மாசத்திலே பாதிநாள் விரதமாச்சே. முன்ன மாதிரி முழுப் பட்டினியும் இருக்க முடியறதில்லே. அதனால அந்த நாளிலேயெல்லாம் அவளா திரி ஸ்டவ்வுலே ரவை உப்புமா கிண்டிப்பா."

பாட்டி இந்தப் பேச்சில் கலந்து கொள்ளவில்லை. எதற்காகத் தங்கள் வாழ்க்கை முறையைத் தன் கணவன் இவ்வளவு விஸ்தாரமாக வந்திருப்பவர்களிடம் விவரிக்க வேண்டும் என்று நினைத்திருக்கக் கூடும்.

"எனக்கு ஆபீஸிலே சீனியர் மேனேஜரா பிரமோஷன் ஆயிருக்கு. இந்த சந்தோஷத்தை உங்களோட பகிர்ந்துக்கணும்னு தோணித்து. உங்களுக்காக வேஷ்டி புடைவைகள் எல்லாம் வாங்கிண்டு வந்திருக்கோம். ஆசீர்வதிச்சு வாங்கிக்கணும்."

ஸ்ரீராம் இப்படிக் கூறியவுடன் பாட்டியின் முகத்தில் கொஞ்சம் அசட்டுத்தனமான ஆனந்தம் தெரிந்தது. பதவி உயர்வுச் செய்தி, புடைவைகளின் வரவு ஆகிய இரண்டுமே அவளுக்குப் பரவசம் அளித்திருக்க வேண்டும். பாவம், நைந்துபோன ஒரு புடைவையைக் கட்டிக் கொண்டிருந்தாள். தாங்கள் சரியான விதத்தில்தான் பதவி உயர்வைக் கொண்டாடுகிறோம் என்பதில் ஸ்ரீராமுக்கு நிறைவு ஏற்பட்டது. ஆனால் தொடர்ந்தது அவன் எதிர்பாராததாக இருந்தது.

நமஸ்கரித்ததை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு கைகள் நடுங்க, தலையைத் தடவி ஆசீர்வாதம் செய்த அந்த முதியவர்கள், வைத்துக் கொடுத்த துணிமணிகளை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர்.

"என்கிட்ட மூணு வேஷ்டி இருக்கு. இவ கிட்டயும் மூணு புடைவை இருக்கு. இனிமே இதைவிட எங்களுக்கு என்ன தேவை? ஆசைகளை வளர்த்துக்கிட்டா மனசு இன்னும் இன்னும்னு அலை பாயும். இந்தக் கடைசி காலத்தில் மனசை ஜெயிக்கறதுதான் எங்களுக்குப் பெருமை. அந்தப் பெருமையை இல்லைன்னு பண்ணிடாதப்பா" என்றார் பெரியவர்.

சுதாவின் கண்களில் நீர் கட்டிவிட்டது. "நீங்க அப்படிச் சொல்லக் கூடாது. இதை எடுத்துக்கிட்டாதான் எங்களுக்கு ஒரு நிறைவு."



மிகுந்த வற்புறுத்தலுக்குப் பிறகு பெரியவர் ஒரு காசித் துண்டையும், முதியவள் ஒரு ரவிக்கைத் துண்டையும் மட்டும் எடுத்துக் கொண்டார்கள். பிறகு இருவரும் தடுப்பின் மறுபுறத்துக்குச் சென்றார்கள். என்ன பேசினார்கள் என்பது காதில் விழவில்லை.

ஸ்ரீராம் சுதாவிடம் முணுமுணுத்தான். "பாட்டிக்குப் புடைவைகளை வாங்கிக்கணும்னுதான் இருந்திருக்கணும். நாம அதைப் பற்றிப் பேசினப்போ அவங்க முகத்திலே எந்த ஆட்சேபணையும் தெரியல்ல. ஆனா தாத்தாதான் வாங்கிக்க விடாம பண்ணிட்டார்" என்றான்.

சில நிமிடங்களுக்குப் பின் அவர்கள் வெளியே வந்தனர். ஸ்ரீராமுக்கு அவர்களிடம் ஏதோ ஒரு சிறிய மாற்றம் புலப்பட்டது. என்றாலும் அது இன்னதென்று தெரியவில்லை.

"நீங்க ரெண்டுபேரும் பால் குடிப்பீங்களா? அல்லது டவுன் கலாச்சாரப்படி காபியைத் தவிர வேறெதுவும் தொண்டையிலே இறங்காதா?" என்று தாத்தா கேட்டார்.

"எதுவும் வேணாம்" என்றுதான் பதில் கூற எண்ணினார்கள். என்றாலும் அவர்கள் அதைத் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடும். துணிமணிகளை வாங்கிக் கொள்ளாததால் ஏற்பட்ட கோபத்தின் காரணமாக பால் குடிக்க மறுப்பதாக எண்ணலாம்.

"ஆளுக்கு கால்கப் காபி மட்டும் போதும். வரச்சேதான் ஹோட்டல்லே குடிச்சோம்" என்றான். கூடவே "இல்லேன்னாலும் பரவா யில்லை. நீங்க சொன்னீங்களேன்றதுக் காகத்தான்" என்றான். பெரியவர் மைய மாகப் புன்னகைத்துக் கொண்டிருந்தார். ஒரு வேளை காப்பிப் பொடியோ, பாலோ இல்லையோ?



"அதனாலென்ன? இருக் கறதைப் பகிர்ந்துண்டா போச்சு" என்றபடி பாட்டி வேகமாக தடுப் புக்கு அந்தப் பக்கம் சென்றாள்.

ஸ்ரீராமின் மனம் சற்று இள கியது. ஏதோ ஓர் உறவு அவர்களுக்கு வேண்டியிருக்கிறது. தங்களை மதித்து வந்து பார்க்கவும் யாரோ இருக்கிறார்கள், என் பது அவர்களைப் பொறுத்தவரை மிகப் பெரிய விஷயம்.

ஜன்னலின் மீது ஒரு தலைவலி மாத்திரை இருந் தது. பாவம், உணவைவிட இது போன்ற மாத்திரை மருந்துகள்தான் இவர்களுக்கு இந்த வயதில் அதிகம் தேவைப்படும்.

அவன் பார்வையைப் புரிந்து கொண்டது போல் "ரெண்டு பேருக்கும் கொஞ்சம் ப்ளட் ப்ரஷர் இருக்கு. ஆளுக்குப் பாதி மாத்திரை யாப் போட்டுப்போம். கொஞ்சம் மட்டுப் பட்டாப் போறாதோ?" என்றார் தாத்தா.

ஏதாவதொரு தொகையை அவர்களுக்குக் கொடுத்துவிட்டுச் செல்ல வேண்டும் என்று தோன்றியது. அடிக்கடி வந்து செல்லும் அளவுக்கு நேரமோ ஒட்டுதலோ ஏற்பட்டு விடவில்லை. ஆனால் இதுபோல் இல்லாமல் தவிப்பவர்களுக்குக் கொடுத்தே ஆகவேண் டும் என்று பட்டது ஸ்ரீராமுக்கு. சுதாவின் கண்களிலும் அதே இளக்கம்.

"வேஷ்டி புடைவைதான் வேணாம்னுட் டேள். ரொக்கமா ஆயிரம் ரூபாய் தரேன். மறுக்காம வாங்கிக்கணும்." சொன்னபிறகு தான் ஸ்ரீராமுக்குத் தான் தவறு செய்து விட்டோமோ எனத் தோன்றியது. பெரியவர் மிகவும் கௌரவம் பார்க்கிறவர். அவர் மனைவி அப்படியில்லை. தானாக வரும் ஸ்ரீதேவியை ஒதுக்கும் நிலையில் தாங்கள் இல்லை என்ற நடைமுறையை உணர்ந்தவள். ஒரு வேளை பெரியவர் தாங்கள் வந்தபோது அங்கு இருந்திருக்கவில்லையென்றால், வேஷ்டி புடைவையைக் கூட பாட்டி வாங்கிக் கொண்டிருக்கக் கூடும்.

ஸ்ரீராம் அதிர்ச்சி அடையும் வகையில் தாத்தா இப்போது அவன் கூறியதை ஒத்துக் கொள்வதுபோல் தலையசைத்தார். பின்பு தன் மனைவி இருக்கும் பக்கமாகச் சென்றார்.

ஸ்ரீராமுக்கு இப்போது அவர்கள் மீது இலேசான கோபம் வந்தது. ரொக்கத்தை வாங்கிக் கொள்ளத் தயார் எனும்போது வஸ்திரங்களை வாங்கிக் கொண்டால் மட்டும் என்னவாம்? கடைகடையாக ஏறித் தாங்கள் தேர்ந்தெடுத்த துணிகளை இவர்கள் ஏற்றுக் கொண்டிருந்தால் அது ஒரு கௌரவமாக இருந்திருக்குமே.

உள்ளேயிருந்து ஆளுக்கொரு டம்ளர் காபியுடன் வந்து சேர்ந்தனர் அந்த முதிய தம்பதி. "கொஞ்சமாத்தான் கலந்திருக் கேன்" என்று கொஞ்சம் குற்ற உணர்ச்சி யுடன் கூறினாள் பாட்டி. பிறகு "நீங்கள் ஏதோ ரொக்கம் கொடுக்கறதைப் பத்திப் பேசினேள்" என்று தொடங்கினாள். பின் தன் பேச்சை நிறுத்திக் கொண்டு கணவரைப் பார்த்தாள்.

குறிப்பறிந்தவராக அந்த முதியவர் பேசத் தொடங்கினார். "இந்த தேகத்துக்கு வயசா யிடுத்து. இதற்குப் போஷாக்கு அவசிய மில்லை. தவிர கொஞ்சம் வசதியைக் கொடுத்துப் பழக்கினால் அப்புறம் அதுவே வேணும்னு ஏங்க ஆரம்பிச்சுடும் மனசு. அதனாலே நீங்க தரப்போற பணத்தை நான் ஏத்துக்க முடியாதவனா இருக்கேன். அதுக் காக இந்தப் பணத்தை அந்த வழியிலே செலவு பண்ணுங்கோ, இந்த வழியிலே தானம் அளியுங்கோன்னு நான் சொல்லத் தயாராயில்லை. நீங்க உழைச்சு சம்பாதிச்ச பணம். அதை எப்படி செலவழிக்கறதுன்ற முடிவு உங்களுடையதாகத்தான் இருக்கணும். எப்பவாவது இந்தப் பக்கம் வேற எதுக்காவது

# 'ஆஸ்கர்' அமிர்தராஜ்!

ஆஸ்கர் அகாடமி தேர்வுக்குழுவின் உறுப்பினராகப் பதவியேற்றிருக்கிறார், முன்னாள் டென்னிஸ் வீரர் அசோக் அமிர்தராஜ்.

ஹாலிவுட் பிரபலமான இவர், அறுபது திரைப்படங்களுக்குமேல் தயாரித்திருக்கிறார். ஜீன்ஸ் போன்ற தமிழ்ப் படங்களும் உண்டு என்றாலும், பெரும்பாலானவை ஆங்கிலத் திரைப்படங்கள்.

"அமெரிக்காவில் உள்ள எனது திரைப்பட நிறுவனம் இப்போது ஒரு ஸ்டூடியோ போலவே பரிமாணம் பெற்றிருக்கிறது. எடிட்டிங், ஒலிப் பதிவு போன்ற பல வசதிகளும் இங்கு உண்டு. வருடத்துக்கு சுமார் எட்டு படங்களாவது தயாரித்துக் கொண்டிருக்கிறோம். வெளி நாட்டுத் திரைப்படங்களைத் தேர்வு செய்யும் ஆஸ்கர் அகாடமி குழுவிலும், தேர்வுக் குழுவிலும் என்னை உறுப்பினராக இந்த முறை தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இந்த அங்கீகாரத்தை, அகாடமியின் சார்பில் பிரபல சீனியர் நடிகர் சார்ல்டன் ஹெஸ்டன் எனக்கு அளித்தார்" என்கிறார் அமிர்தராஜ்.



பெரும்பாலும் வணிகநோக்கில்தான் இவர் படம் தயாரிக்கிறார் என்றாலும் நோபல் பரிசு பெற்ற பிரபல விஞ்ஞானியான ஆல்பர்ட் ஸ்விட்செர் குறித்த வாழ்க்கை வரலாற்றை இவரது நிறுவனம் படமாக்கியிருக்கிறது. "ஸ்விட்செர்" என்ற இந்தத் திரைப்படம், பெர்லின் மற்றும் தென்னாப்பிரிக்காவில் நடைபெற்ற திரைப்படவிழாக்களில் பங்கேற்று, இவருக்குப் பாராட்டுகளை அளித்திருக்கிறது.

– குல்லூர

---

வந்தா, எங்களையும் பார்த்துட்டுப் போங்க. இதுக்காக மட்டும் மெனக்கெட்டு வரணும்றது இல்லே. எங்களுக்கு ஏதாவது ஆனாலும் இங்கேயே கொள்ளி போட்டுடுவா. அதுக்கு ஏற்பாடு செஞ்சிருக்கோம். உங்களுக்கெல்லாம் தகவல் தந்து சிரமப்படுத்தறதுகூட வேணாம்னு நினைக்கிறேன். ஏதோ ரொம்ப துக்கமாகவும் தத்துவமாகவும் பேசறதா நினைக்கவேணாம். இந்த யுகத்தோட ஒப்பிட்டா, நம்ம வாழ்க்கைன்றது ரொம்பச் சின்னது. அதனாலே அதற்காக ரொம்ப மெனக்கெடாமல் நிறைவோடு வாழ்ந்து முடிச்சுட்டுப் போகணும். இதுதான் எனக்கும் இவளுக்கும் சின்ன வயசிலிருந்தே அபிலாஷையா இருந்தது."

பிரமிப்பு நீங்காமல் சில நிமிடங்கள் கழித்து ஸ்ரீராமும் சுதாவும் அங்கிருந்து கிளம்பினர்.

"போயிட்டு வாங்கோ. நன்னாயிருப்பேள்" என்று வாழ்த்தி அனுப்பினார்கள்.

நகரை நெருங்கும் வரையில் காருக்குள் மௌனம்தான் நிலவியது. அதற்குமேலும் ஸ்ரீராமினால் தன் குறுகுறுப்பை வெளிப்படுத்தாமல் இருக்க முடியவில்லை.

இவ்வளவு மனப்பக்குவம் கொண்ட பெரியவர், தான் ரொக்கத் தொகை தருவதாகச் சொன்னவுடனேயே ஏன் அதை மறுக்காமல், மறுப்பைத் தெரிவிக்க சிறிது நேரம் எடுத்துக் கொண்டார்? அதே போல் துணி மணிகளை வாங்கிக் கொள்ளுமாறு கூறியபோது பெரியவர் உடனே மறுத்தாலும் அவர் மனைவி அந்த மறுப்பை எதிரொலிக்கவில்லையே. ஒரு வேளை கணவருக்குப் பிடிக்காது என்ற ஒரே காரணத்தால் தானும் ஏற்றுக் கொள்ளவில்லையா? தயக்கமான அந்தச் சிறு இடைவெளி என்பதுதான் சராசரி மனதுக்கும் லட்சியத்துக்குமிடையே நடைபெற்ற போராட்ட கணங்களோ?

"நீங்க கவனிக்கல்லியா? தாத்தா பாட்டி ரெண்டு பேருக்குமா சேர்த்து ஒரே ஹியரிங் எய்ட்தான் போல இருக்கு. நடுநடுவிலே உள்ள போய் ஒருத்தருக்கொருத்தர் மாத்தி மாத்திப் போட்டுண்டு வந்தாங்க. நம்ம பேச்சை ஆளுக்குக் கொஞ்சமாவது கேட்கணும்னு ஆசை. அதனால்தான் உங்களுக்குச் சில விஷயங்கள் ஏறுமாறாத் தோணியிருக்கு" என்றாள் சுதா கண்களைத் துடைத்துக் கொண்டபடி.

"குடி தண்ணீர் பைப்புல ஏதோ பிரச்னைங்க, தண்ணீர் லீக்காயி தெருபூரா தேங்கிக் கிடக்கு." என்று சென்னை மாநகராட்சி அறுபத்தி ஆறாவது வட்டக் கவுன்ஸிலர் வெற்றிவேலுக்குப் புகார் வருகிறது. தொலைபேசியில் சொன்னவர் ஐந்தாவது அவென்யூ, ஒன்றாவது தெருவில் குடியிருப்பவர். அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கையில் இருக்கும் லேப்-டாப்பை விரித்து 'கிளிக்' செய்ய, அறுபத்தி ஆறாவது வட்ட தெருக்களின் வரைபடம் மானிட்டரில் வருகிறது. அப்படியே மைக்ரோ லெவலில், ஐந்தாவது அவென்யூவை ஜூம் பண்ண, மானிட்டரில் அந்தத் தெருவின் எக்ஸ்ரே! டெலிபோனில், மாநகராட்சி ஊழியர்களிடம் பேசுகிறார். "ஆமாம்! அங்கே பத்தடி நீளத்துக்கு அந்தச் சந்திப்பில் பைப் கிடையாது. எனவே வலது பக்கத்தில் தோண்ட வேண்டும்" என்று சொல்லுகிறார். நமக்கு ஆச்சர்யம் தொற்றிக் கொள்ள வெற்றிவேல் விளக்குகிறார்.

"தெருவில் போடப்பட்டிருக்கும் குடி தண்ணீர் பைப், பாதாளச் சாக்கடை, அதன் திறவு மூடிகள், மழைநீர் வடிகால் பாதை எல்லாம் இந்த வரைபடத்தில் அச்சாக இருக்கின்றன. இப்போது நான் இதைப் பார்த்துத் தோண்ட வேண்டிய இடத்தைச் சொல்லிவிட்டேன். இல்லாவிட்டால் என்ன ஆகும்? பத்து, இருபது அடிக்குத் தோண்டுவார்கள். பூமிக்கு அடியில் பைப் இல்லாதது அவர்களுக்குத் தெரியாது. உழைப்பும் வேஸ்ட்; நேரமும் வேஸ்ட்" என்கிறார் கம்ப்யூட்டர் வேலாகிவிட்ட வெற்றிவேல்!

இவை மட்டுமல்ல. வட்டத்தில் உள்ள ஒவ்வொரு கட்டடத்தைப் பற்றியும் விவரங்கள் கம்ப்யூட்டரில் போடப்பட்டிருக்கின்றன. கிளிக் செய்தால் அந்தக் கட்டடம் தெரிகிறது. அந்தக் கட்டடத்தின் அங்கீகரிக்கப்பட்ட பரப்பளவு, சொந்த உபயோகமா, வர்த்தகத்திற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறதா அல்லது வாடகைக்கு விடப்பட்டிருக்கிறதா, அந்தக் கட்டடத்திற்கு மதிப்பிடப் பட வேண்டிய சொத்து வரி எவ்வளவு? ஆனால் போடப்பட்டிருக்கும் வரி எவ்வளவு, போன்ற அனைத்து விவரங்களும் அதில் உள்ளன. ஒவ்வொன்றாக கிளிக் செய்ய, விவரங்கள் விரிகின்றன.

"எங்கள் வட்டத்தைப் பொறுத்த மட்டில் சொத்துவரி ஒன்றரைக் கோடிதான் வசூலாகிறது. ஆனால் இதைவிட ஆறு மடங்கு அதிகம் வசூலாக வேண்டும். இப்போது வருவாய்த் துறை ஊழியர்களின் போக்கால் மாநகராட்சிக்கு வரி வசூல் இழப்பு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. இது போன்ற கம்ப்யூட்டரில் விவரங்களைப் போட்டு மானிட்டர் செய்தால், வரிவசூல் செய்பவர்களின் துணையுடன் இனி யாரும் வரி ஏய்ப்பு செய்ய முடியாது" என்கிறார் வெற்றிவேல். இந்த மென் பொருளைச் சொந்த முயற்சியில், நண்பர்களின் துணையோடு தயாரித்திருக்கிறார்.

வட்டத்தில் எவ்வளவு கேபிள் கனெக்ஷன், எவ்வளவு விளம்பரப் பலகைகள், அதில் அனுமதி பெறாதது எவ்வளவு; ஒவ்வொரு வீட்டிலும் எவ்வளவு வாக்காளர்கள் என்று வட்டத்தின் சகல விவரங்களும் மென் பொருளில் அடக்கம்.

— கௌசி

படம் : ராஜன்

# கம்ப்யூட்டர் வேல்!



● என்.சுஜாதா, சென்னை - 61

? சிக்கன நடவடிக்கையாக அரசு இலவசங்களை ரத்து செய்யாமல், வேறு என்னதான் செய்ய முடியும்...?

! அரசின் ஆடம்பரச் செலவினங்களைக் குறைக்காது மக்களை மட்டும் பிழிந்தெடுத்தால் வயிற்றெரிச்சல்தான் மிஞ்சும்.

● பொன்விழி, அன்னூர்

? வைகோ விஷயத்தில் பா.ஜ.க. இரட்டை வேடம் போடுவது ஏன்..?

! பா.ஜெ.க. சாயல் அடிப்பதால்தான்

● எம்.கே. இளமதி, பேரையூர் ★

? மொய் எழுதும்போது 51, 101, என்று ஒரு ரூபாய் சேர்த்து எழுதுவது ஏன்...?

! கொடுக்கும் தொகை பூஜ்யத்தில் முடியக் கூடாது. ஒன்று சேர்த்தால் மேலும் விருத்தி அடையும் என்ற சென்டிமெண்ட் தான் காரணம். இந்தக் கேள்விக்கு இதைவிட சுவையான பதில் இருப்பின், அதை ஒரு பக்கக் கதையாக எழுதும் வாசகருக்கு, சன்மானத்துடன் ஒரு ரூபாய் சேர்த்துத் தந்தால் போச்சு!

● பா. அச்சுதன், வயலூர்

? கவிஞர் வாலி பாடல்களில் பிடித்தது...?

! உற்சாகமெல்லாம் வற்றிப்போய், சேர்ந்துபோன சமயத்தில், சுள்ளென்று புது ரத்தம் பாயும்... பாடல் வரிகள் : 'வெற்றி வேண்டுமா போட்டுப் பாரடா எதிர் நீச்சல்!'

● டி.கஸ்தூரி, வேலூர் - 1

? வரி சரியாகக் கட்டாதவரை தேசத் துரோகி என்று கமல் தாம் நடித்துள்ள குறும் படத்தில் (விளம்பரம்) கூறுவது சரியா..?

! சரி! அவ்வாறு சொல்வதற்கான தகுதியை அவர் பெற்றிருப்பின் அதைவிட ரொம்பச் சரி!

* தகுதி

● எஸ்.இந்திரா, திருச்சி - 6 ❒

? வளைகுடா போருக்கு முக்கியக் காரணம் அறிவியலா? வரலாறா...?

! இது ஏதோ ஆண்டவன் இட்ட கட்டளை என்று புஷ் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டது தான் அடிப்படைக் காரணம் என்று அமெரிக்கப் பத்திரிகைகளே விமர்சிக்கின்றன.

## மருமகளைத் திருமகளாக நடத்தச் சொல்கிறாரே முதல்வர்...?

● இரா. சக்கரபாணி, மதுரை

? 25.03.89 அன்று சட்டசபையில் நடந்தவற்றை 25.03.2003 அன்று மீண்டும் நினைவு கூர்ந்த ஜெயலலிதா, தமது தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டவர் ஆகிறாரே... இது தேவைதானா?

! யானை தன் தலை மீது தானே மண்ணைப் போட்டுக் கொள்வதோ, மலர்களைப் போட்டுக் கொள்வதோ அதன் இஷ்டம். அதனால் எதிர்க் கட்சியினருக்குப் பதிலளிக்க வாய்ப்புத் தராமல் ஒருதலைப்

* விழிப்பு

பட்சமாக அவை நடவடிக்கைகள் அமைவது, யானையைப் பூனையாக்குகிறது.

● கே. கணேசன், சென்னை

? டெண்டுல்கருக்கு இருநூறு கோடி சொத்து உள்ளதாமே...?

! இந்தியாவின் முதல் இருபது பணக்காரர்கள் லிஸ்டில் இருந்து கொண்டு, "மே கஹான் ஹூன்...?" என்று மலங்க மலங்க விழிக்கிறாரே, இது செம டமாஸ்தானே!

● ஈ. ராதாகிருஷ்ணன், எர்ணாகுளம்

? சட்டசபையில் நிதிநிலை அறிக்கையைப் படிக்கும்போது ஜெயலலிதா என்று வரும் இடங்களிலெல்லாம் மாற்றி 'அம்மா அம்மா' என்று படித்தாரே நிதியமைச்சர்... இது சரிதானா?

! அதைத்தான் அவரே சொல்லி விட்டாரே... 'அம்மாதான் எல்லாம். அவரைப் போற்றுவது கடவுளைப் போற்றுவதற்குச் சமம்!' - பாவம் கடவுள்!



• எதிர் நீச்சல்

• பாவம் கடவுள்

● அ. சின்னசாமி, சேலம் - 3

? ஈராக் போரால் மத அடிப்படையில் எதிர்த்தாக்குதல் வருமா...?

! யுத்தம் ஜிஹாத் ஆகிவிட்டால் அதற்கான வாய்ப்பு நிறையவே உண்டு.

● கு. கணேசன், மறைமலைநகர்

? 'மோதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்' என்பதைத் தாரக மந்திரமாக ஏற்றுச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் தமிழக காங்கிரஸ், ஆட்சிக்கு வர வாய்ப்பு உள்ளதா..?

! அது சோனியா புத்திசாலித்தனமாக காய்களை நகர்த்து வதைப் பொருத்த விஷயம்.

● அ. சுகுமார், காட்டுக்கானூர்

? தியானம் செய்வதால் மட்டும் பிரச்னைகள் தீர்ந்து விடுமா..?

! தீராது. அவற்றைச் சந்திக்க புத்துணர்ச்சியும் துணிவும் பெறலாம்.

● வைகை வளவன், மதுரை - 17

? 'மருமகளைத் திருமகளாக நடத்த ஆரம்பித்தால் வீடும் நாடும் செழிக்கும். வரதட்சணை என்ற வார்த்தையே தமிழகத்தில் இல்லாமல் போகும்...' என்று அருமையான யோசனை கூறியிருக்கிறாரே புரட்சித் தலைவி?

! எதிர்க்கட்சியை எதிரிக் கட்சியாக நினையாமல் தோழமை பாராட்டினால், ஆட்சியும் எவ்வளவோ பயனுறும்.

● வே.ந. கோபால், சென்னை - 91

? பழைமை வாய்ந்த இந்தியாவின் முதல் பெண்கள் கல்லூரி ஒரு பெண் முதல்வரின் ஆட்சிக் காலத்தில் இடிக்கப்படுவது ஒரு Cruel jokeஆக உள்ளதே?

! சத்தமாச் சொல்லிடாதீங்க. அப்புறம் அம்மாவோட நகைச்சுவை உணர்வைப் பற்றி பொன்னையன் பாட்டெழுத ஆரம்பிச்சா சட்டசபை தாங்காது!

● மல்லிகை மன்னன், முடக்கத்தான்

? அமெரிக்கா, பிரிட்டன் போன்ற வல்லரசு நாடுகளின் யதேச்சாதிகாரப் போக்கைத் தடுத்து நிறுத்த சிறிதும் வக்கில்லாத ஐ.நா. சபையை உடனே கலைத்துவிடுவதுதானே நியாயம்?

! கலைத்துவிட்டால் கொஞ்சம் நஞ்சம் கண்காணிப்பும் இல்லாது போய்விடும். ஐ.நா. சபையின் செல்வாக்கைப் பலப்படுத்துவதே உலக நாடுகளின் முயற்சியாக இருக்க வேண்டும்.

ரூ.நூறு பரிசு பெறுபவர் :
**எஸ்.இந்திரா,**
25/12, விஜய் அவென்யூ,
மேலூர் ரோடு, ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620 006.

ரூ.ஐம்பது பரிசு பெறுபவர் :
**எம்.கே. இளமதி,**
திரையரங்கம் எதிரில், பேரையூர்
(அஞ்சல்) கமுதி வட்டம்,
இராமநாதபுரம் மா.வ. - 623 708

# சிலிர்த்தெழும் மலைக் கிராமம்



• தொட்டங்கோம்பை





• மலைவாழ் மக்கள்

தொட்டங்கோம்பையிலிருந்து காலை ஆறு மணிக்குத் தலையில் விறகுச் சுமையுடன் மாராயியின் பயணம் துவங்குகிறது.

கிராமத்திலிருந்து ஒற்றையடிப் பாதையில் துவங்கி பாறைகள் நிறைந்த ஓடைகளைக் கடந்து ஆறு கி.மீ. தொலைவில் உள்ள தார்ச் சாலையைப் பிடித்து, கள்ளிப் பட்டி வந்து சேரும் போது, சூரியன் சுட்டெரிக்கிறது. கள்ளிப் பட்டியில் உள்ள டீக் கடை மற்றும் சிறிய ஹோட்டல்களில் அந்த விறகுச் சுமைக்கு இருபது அல்லது அதிக பட்சமாக முப்பது ரூபாய் கொடுக்கிறார்கள். அந்தப் பணத்தில் அரிசி, பருப்பு, எண்ணெய் வாங்கிக் கொண்டு கிராமத்திற்குத் திரும்பும்போது மணி மூன்று. சூரியனின் சூடு தணிவதற்குள்ளேயே கிராமத்துக்கு திரும்பி விட வேண்டும். இல்லையென்றால் ஓடைகளில் தண்ணீர் குடிக்க வரும் யானைகளிடம் மாட்டிக் கொள்ள நேரிடும். மாராயி மட்டுமல்ல, அவரைப் போன்றே 'சோழகர்' என்று அழைக்கப்படும் இந்த கிராமத்து மலைவாழ் மக்களின் வாழ்க்கையும் இப்படித்தான் ஓடுகிறது. ஒவ்வொரு குடும்பமும் விறகை விற்றுத்தான் வீட்டில் அடுப்பெரிக்க முடிகிறது.

ஈரோடு மாவட்டம், அந்தியூர் காட்டில் இருக்கிறது தொட்டங்கோம்பை கிராமம். பசுமை கொஞ்சும் மேற்குத் தொடர்ச்சி மலையின் மடியில், இயற்கை அன்னையின் அரவணைப்பில்,

சுகமாக அமைந்திருக்கும் இந்த மலைக் கிராமத்திலிருந்து பதினைந்து கி.மீ. தொலைவில் அமைந்திருக்கிறது கள்ளிப் பட்டி.

"உங்களுக்கு ரொம்பப் புண்ணியமாப் போகும். கிணற்றை ஆழப்படுத்த உதவி பண்ணுங்க சாமி" என்கிறார் குடுமிகார் என்ற ஊர்ப் பெரியவர். தொட்டங் கோம்பை கிராமத்திலுள்ள ஐம்பத்தியேழு குடும்பங்களுக்கும் நீர் ஆதாரம் ஒரு கிணறு தான். ஆனால் கடந்த இரண்டு வருடங்களாக மழை சரியில்லாததால் வருடத்தில் ஆறு மாதங்கள் கிணறு வற்றி விடுகிறது. அப்போது அருகிலுள்ள ஓடை களிலும் தண்ணீர் வரத்து இருக்காது. அந்தக் காலகட்டத்தில், உயரே மலை களின் சரிவில் உள்ள அணைகளை நோக்கிப் படையெடுக்கிறார்கள் கிராம வாசிகள். பல நேரங்களில் கரடி, காட்டுப் பன்றி என்று ஆபத்துக்கள் காத்திருக்கின் றன. கிணற்றை ஆழப்படுத்தலாம் என்றால், அதிலும் காடுகள் பாதுகாப்புச் சட்டம் குறுக்கிடுகிறது. பாறை நிறைந்த பகுதியாதலால், வெடிகள் வைத்துத் தான் ஆழப்படுத்த வேண்டும். ஆனால் காட்டுப் பகுதியில் வெடிகளைப் பயன்படுத்தக் கூடாது. சரி, அதுதான் போகட்டும். அவர்கள் குடியிருக்கும் வீட்டு மனைக்கு பட்டாவும் கொடுக்க முடியாத நிலை. காரணம் ரிசர்வ் காட்டுக்குள் வீட்டு மனைப் பட்டா கொடுக்கக் கூடாது. பட்டா இல்லாததால் அரசு தொகுப்பு வீடு களும் கட்டித்தர முடியாது. சாலை போடவும் தடைகள்.

இது போகட்டும். கிராமத்துக்கு ஏதாவது மருத்துவ வசதி உண்டா? துணை சுகாதார நிலையம் கிடையாது. டாக்டர் கள் எட்டிப் பார்ப்பதுமில்லை. பல குழந்தைகளுக்கு தோல் வியாதிகள். பெண்களுக்கு ரத்த சோகை. "என்ன பண்றது. ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆயிடுச்சுன்னா தூளி கட்டி கள்ளிப் பட்டிக்கு தூக்கிப் போக வேண்டி



• கோ.நடராஜன்

யதுதான்'' என்கிறார் பழனியம்மாள். ஆணாகட்டும், பெண்ணாகட்டும், பதினைந்து வயதுக்குள் திருமணமாகி விடுகிறது. பழனியம்மாள் இப்போது பாட்டி. அந்த கிராமத்தின் ஒரே ஆறுதலான அம்சம், மின் வசதியும் பத்தாண்டுகளுக்கு முன்பு பஞ்சாயத்தால் வைக்கப்பட்ட தொலைக் காட்சியும்தான். தென் ஆப்பிரிக்க உலகக் கோப்பை, தொண்டங்கோம்பையையும் தொலைக் காட்சி வாயிலாகத் தொட்டுவிட, சிறுவர்கள் கையில் வேப்ப மர மட்டைகள். அடர்ந்த காட்டின் நடுவே ஓடையின் ஓரத்தில் இருக்கும் முனியப்பன் கோயிலில் ஆண்டுக்கொருமுறை கெடா வெட்டி. ஊரே சாராயத்தில் மூழ்கும். ஈச்சமர இலைகளே கூரையாக, குகை போன்ற கொட்டகைகளில் இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு வரை வசித்துக் கொண்டிருந்த இவர்களின் வாழ்வில் ஒளியேற்ற வந்தவர் தான் நடராஜன்.

நெசவாளர் குடும்பப் பின்னணியில் வந்தவர் நடராஜன். வியாசர்பாடியில் ரெவரண்ட் ஃபாதர் ஸ்கூலுங் என்பவரின் தொழு நோய் மருத்துவமனையில் சிகிச்சைக்காக சேர்ந்தார். ஃபாதரின் சேவை மனப்பான்மை அவரை மிகவும் கவர்ந்து விட, தொழு நோயைப் பற்றிய விழிப்புணர்வை உண்டாக்கும் பணியில் குதித்துவிட்டார். தமது சொந்த ஊரைச் சுற்றியும் எதாவது சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணம் பளிச்சிட்டது அவருக்கு. குடும்பத்துடன் கணக்கம் பாளையம் வந்து விட்டார். விவேகானந்தர் சேவாஸ்ரமம் துவங்கப்பட்டது.

"என்னுடைய ஊருக்கு பத்து கி.மீ. தொலைவில் இருக்கும் தொட்டங்கோம்பையை என் களப்பணிக்குத் தேர்ந்தெடுத்துக் கொண்ட காரணம், அந்த மக்களின் அப்பாவித்தனமான வாழ்க்கை முறைதான். அவர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் உள்ளே புகுந்தேன். நல்ல குடியிருப்பும் பொருளாதார முன்னேற்றமும் அவர்களுக்கு முக்கியத் தேவை என்பதை அறிந்து அதற்கான முயற்சியில் இறங்கினேன்'' என்று துவங்குகிறார் நடராஜன்.



• குடுமிகார்

தேசிய ஊரக வளர்ச்சித் துறையை அணுகினார். ஒரு வீட்டிற்குப் பத்தாயிரம் தான் உதவித் தொகை கிடைத்தது. ஆனால் செலவோ பதினைந்தாயிரம் ஆனது. இத்தனைக்கும் சிமெண்டுக்கு பதிலாக மண்தான் பயன்படுத்துவார்கள். கிராமத் தேவைகளுக்கு போக மிச்சமிருந்த கிணற்றுத் தண்ணீரை ஊற, ஊற, கொஞ்சம், கொஞ்சமாக எடுத்து ஐம்பத்தியேழு குடும்பத்துக்கும் வீடுகள் கட்டும் பணி துவங்கியது. இரண்டு வருடம் வேலை நடந்து, இன்னமும் ஒரு வார வேலை தான் பாக்கி. மலைவாழ் மக்கள் புது குடியிருப்புகளில் குடியேற ஆர்வமுடன் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் சென்ற மாதம் பெய்த கோடை மழையினால் மண் சரிந்து வீடுகள் இடிந்து விட்டன! அரசு நிதி உதவியைப் பெற்று கட்டப்பட்டவை இந்த வீடுகள். இனி மற்றொரு முறை அதே வீட்டுக்கு நிதி உதவி பெறுவதற்கு வாய்ப்பில்லை. எனவே யாராவது தொண்டுள்ளங்கள் உதவி செய்தால் தான் பணிகள் முழுமையடையும்" என்று கையைப் பிசைகிறார் நடராஜன். அந்தச் சோகம் நம்மையும் தொற்றிக் கொள்கிறது.

கிராம மக்களின் பொருளாதாரத்தை முன்னேற்ற, சுயவேலை திட்டத்தையும் அறிமுகப்படுத்தியது விவேகானந்தா சேவாஸ்ரமம். துடைப்பம், கூடை முடைதல், ஈச்சம்பாய் என்று தயாரிக்கச் சொல்லி மக்களை ஊக்கப்படுத்தியது. ஆனால் விற்பனை பெரிய சவாலாக இருந்தது. மலைகளில் கிடைக்கும் சீமாறு (ஈச்சம் இலை) நெல்லிக்காய், களாக்காய், மாகாளிக் கிழங்கு, சாயப்பட்டை, தேன் போன்ற பொருட்களைச் சேகரித்து விற்பனை செய்யும் முயற்சியிலும் இறங்கினார் நடராஜன்.

பல தொண்டு நிறுவனங்களின் உதவியுடன் ராகி, கம்பு, நெல் போன்ற பயிர்களை வளர்க்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறார் இப்போது.

விவேகானந்தா சேவாஸ்ரமத்தின் சார்பில் கிராமத்தில் சிறிய பள்ளிக்கூடம் நடக்கிறது. அவ்வப்போது மருத்துவ முகாம்களும் நடக்கின்றன.

"கிராம மக்கள் தங்கள் ஊரிலேயே ரேஷன் பொருட்களை வாங்கிக் கொள்ளும் வகையில்

ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்கிறார் நடராஜன். காட்டிலாகா மற்றும் மாவட்ட நிர்வாகம், சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடராஜனுக்குப் பக்க பலமாக இருக்கிறது தொட்டங்கோம்பை மக்களுக்கு முழு வேகத்துடன் தொண்டு செய்யும் பணி மட்டுமல்லாது, ஈரோடு மாவட்டம் முழுதும் சென்று சுற்றுச் சூழல் விழிப்புணர்வு, எய்ட்ஸ் கட்டுப்பாடு ஆகிய பிரசாரங்களிலும் இறங்கியிருக்கிறார் நடராஜன். இவருக்குத் துணையாக ஒரு மகளிர் படை இருக்கிறது. பள்ளிக் கல்வியை மட்டுமே பெற்றுள்ள இந்தப் பெண்கள் கம்ப்யூட்டர் துணையுடன் நிறுவனத்தை நடத்துகிறார்கள். ''எனக்குச் சமூக சேவையில் ஆர்வமூட்டியவர்கள் ஃபாதர் ஸ்கூலுஸ், ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் மற்றும் பாபா அம்தே ஆகியோர்தான் என்கிறார் நடராஜன். எந்தவிதமான வேறுபாடும் விகல்பமும் இல்லாமல் கூட்டணியாக இயங்குகிறது அந்த சேவைப்படை. அவர்களில் இருவர் ஹெச்.ஐ.வி. பாஸிடிவ்.



• நடராஜனுடன் பணிபுரியும் சேவை உள்ளங்கள்.

— ப்ரியன்

படங்கள் : ராஜன்

## 'கை' வண்ணம்!

''முக்காலம் உணர்ந்த ஞானி ஒருவரை, சோதித்துப் பார்க்க நினைத்தான் ஒருவன். உயிருடன் ஒரு வண்ணத்துப் பூச்சியைக் கைக்குள் மூடி வைத்துக் கொண்டு, ஞானி முன்பு சென்றான். ''என் கைக்குள்ளே என்ன இருக்கிறது?'' என்று கேட்டான். ''வண்ணத்துப் பூச்சி'' என்று ஞானி சொன்னார்.

அடுத்து, ''அது உயிருடன் இருக்கிறதா? இல்லையா?'' என்று கேட்டான். ஞானி, 'வண்ணத்துப் பூச்சி உயிருடன் இல்லை' என்றால், அப்படியே கையைத் திறந்து, வண்ணத்துப் பூச்சியைப் பறக்க விட்டு, விடுவது. வண்ணத்துப் பூச்சி உயிருடன் இருப்பதாகச் சொன்னால், அப்படியே நசுக்கி, பூச்சியைக் கொன்று விடுவது. என்ன சொன்னாலும், அவர் சொன்னது தவறு என்று நிரூபிப்பது அவனுடைய எண்ணம்.

ஆனால், ஞானி, புத்திசாலியாயிற்றே!



அவர் சொன்னார். ''வண்ணத்துப் பூச்சி, உயிரோடு இருக்கா? இல்லையா? அதுவும் உன் கையில்தான் இருக்கு!''

— ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் நடத்திய பேரா. அ.ச.ஞா.சிந்தனை அரங்கக் கூட்டத்தில் சுகி சிவம்.

— மௌலி

"என் தாத்தா நாராயண தீக்ஷிதர் காலத்துக்கு முன்னால் ஆன்மிகச் சொற்பொழிவுக்கு இப்படி ஓர் ஆதரவு இருந்ததாகத் தெரியவில்லை. தாத்தா வந்த பிறகுதான் வீனஸ் காலனி ஆஸ்திக சமாஜம், சம்ஸ்கிருதக் கல்லூரி போன்ற மேடைகளில் அவர்களுடைய பிரசங்கங்களைக் கேட்கப் பெருந்திரளாகக் கூட்டம் வர ஆரம்பித்தது. வீதியே அடைந்து விடும் அளவுக்குக் கூட்டம் வர ஆரம்பித்தது இவருக்காகத்தான்!" என்கிறார் கேசவ தீக்ஷிதர். இருபத்தாறு வயது இளைஞரான இவர், புது ஆன்மிகச் சொற்பொழிவு

# ஆன்மிக மேடைக்குப் புதுசு!



• கேசவ தீக்ஷிதர்.

மேடைகளில் வீசும் புதுப் புயல்!

"எந்த வயதில் மேடை ஏறினீர்கள்?"

"பதினோரு வயதில். ஆலப்புழையில் அப்பா பாபு தீக்ஷிதர் பாகவதம் சொல்லும்போது, உடன் அமர்ந்திருந்த என்னிடம் பத்து நிமிடங்களுக்கு குருவாயூரப்பன் பற்றிச் சொல்லச் சொன்னார். அப்போதுதான் சபைக் கூச்சம் போகுமென்று கூறினார். அதுதான் என்னுடைய முதல் பிரசங்கம்."

அலங்கார வார்த்தைகளோ, புரியாத விவரங்களைச் சொல்லிக் குழப்புவதோ இல்லாமல், வெகு எளிய தமிழில் கேசவ தீக்ஷிதர் சொற்பொழிவு செய்யும்போது சிரமம் இன்றிக் கேட்க முடிகிறது. தேவையான இடத்தில் மட்டுமே இலேசாக, நாசூக்கான நகைச்சுவை. வாமன அவதாரத்தில் விசுவரூபம் எடுத்த காட்சியைச் சொல்லும்போது, கண்களை மூடிக் கொண்டு, கடகடவென்று, மூச்சை நிறுத்தாமல் அவர் வர்ணனை செய்து முடித்ததும் கரவொலி அவையைக் குலுக்கியது. ('எனக்கென்னவோ அவர் பேச்சில் தொனிக்கும் மழலைதான் வெகுவாக ஈர்க்கிறது!' என்றார் பக்கத்து நாற்காலிக்காரர்.) நாரத கான சபா ஏற்பாடு செய்த ஒன்பது நாள் நாராயணீயம் தொடர்ச் சொற்பொழிவில் நாளுக்கு நாள் கூட்டம் அதிகமாகி, கடைசி நாளன்று மினிஹாலிலிருந்து மெயின் ஹாலுக்கு மாற வேண்டியிருந்தது!

"ஐந்து வயதில் அப்பாவுடன் சுலோகம் சொல்ல ஆரம்பித்தேன். தனியே கதை சொல்ல ஆரம்பித்தது பதினெட்டு வயதில். சேங்காலிபுரத்தில் வால்மீகி ஆசிரமத்தில் ராமாயணம், பாரதம் இரண்டும் சொன்னேன்!" என்கிறார் கேசவ தீக்ஷிதர். இவர் தலைமுறையில், இவர் மட்டுமே பத்தாவது வரை பள்ளிப்படிப்பு படித்தவர். கூடவே வேதமும் கற்றிருக்கிறார்.

"பதினைந்து வருடங்கள் படித்ததை ஒரு மணி நேரத்தில் சொல்ல வேண்டும். இதற்கான பரீட்சை காஞ்சிபுரத்தில் நடக்கும். மூன்று பேர் மாற்றி மாற்றிக் கேள்விகள் கேட்பார்கள்!" என்கிறார்.

வேதப் படிப்புக்கு மாதா மாதம் உதவித் தொகை உண்டு. "ஒரு முறை அண்ணாத்துரை அய்யங்காரிடம், காஞ்சிப் பெரியவர் என்னைச் சுட்டிக் காட்டி, 'இவன் உதவித் தொகை பெறுவதனால் மட்டுமே இந்தத் துறைக்கு வரவில்லை. முப்பத்து மூன்று தலை முறைகளாகப் பிரவசனம் சொல்லிக் கொண்டு வரும் குடும்பத்தைச் சேர்ந்தவன் இவன்' என்று அறிமுகப்படுத்தியபோது பெருமையாக இருந்தது!" என்கிறார்.

"பிரவசனம் என்பது நீ படித்ததை அப்படியே சொல்லுவது அல்ல. கேட்கிற மக்களுக்குப் புரிகிற மாதிரி சொல்லுவது தான்!" என்பது என் தாத்தா சொல்லும் வாக்கியம். அதை எப்போதும் நினைத்துக் கொள்ளுவேன்!" என்கிறார் கேசவ தீக்ஷிதர்! தாத்தா நாராயண தீக்ஷிதர், சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதரின் சகோதரர்.

— சாருகேசி

படங்கள்: வெங்கடேஷ்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*

Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka